# ஏகத்துவ வழிகாட்டி

மூலம்

அப்துர் ரஹ்மான் ஹம்மாத் ஆல் உமர்

தமிழில்

அப்துர் ரஹ்மான் அப்துர் ரஸ்ஸாக்



تاميلي

மேற் பார்வை

முஹம்மதி ஹுஸைசன்

# ஏகத்துவ வழிகாட்டி

மூலம்

அப்துர் ரஹ்மான் ஹம்மாத் ஆல் உமர்

தமிழில்

அப்துர் ரஹ்மான் அப்துர் ரஸ்ஸாக்

மேற் பார்வை

முஹம்மத் ஹுசைன்

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات في الشفا

الرياض. ت:٤٢٢٢٦٢٦-٤٢٠٠٦٢٠ ص.ب:٣١٧١٧ الرياض:١١٤١٨

بسم الله الرحمن الرحيم

## முன்னுரை

எல்லாப் புகழும் இறைவனுக்கே, அவனைப்புகழ்ந்து, அவனிடமே உதவியும், நம் பாவங்களுக்குரிய பாவ மன்னிப்பையும் கோருகின்றோம். அவன் யாரை நேர்வழிப் படுத்துகின்றானோ, அவனை யாராலும் வழிகெடுக்க முடியாது. மேலும் அவன் யாரை வழிகெடுக்கச் செய்கின்றானோ, அவனை யாராலும் நேர்வழிப்படுத்தவும் முடியாது. மேலும் அல்லாஹ் ஒருவன் என்றும், அவனது தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் என்றும் சாட்சி கூறி, நபி (ஸல்) அவர்கள் மீதும், அவரது குடும்பத்தினர், தோழர்கள், அவரை மறுமை வரை பின்பற்றும் அனைத்து நல்லடியார்கள் மீதும் அல்லாஹ்வின் சாந்தியும், கருணையும் உண்டாவதாக!.

தெளிவான குர்ஆன் வசனங்களையும், சரியான நபி மொழிகளையும், சிறந்த இஸ்லாமிய அறிஞர்களின் கருத்துக்களையும் வைத்து இச்சிற்றேட்டை தொகுத்திருக்கின்றேன். மேலும் இவ்வரிய நூல், (அல் உஸுலுஸ் ஸலாஸாஹ், கஷ்புஷ் ஷுபுஹாத், கிதாபுத் தவ்ஹீத்,) போன்ற முக்கிய நூல்களிலுள்ள விடயங்களை உள்ளடக்கியிருக்கின்றது. எனவே இதன் மூலம் நம் அனைவரும் பயன் பெற எல்லாம் வல்ல அல்லாஹ் அருள் புரிவானாக.

## அல்லாஹ்வை அறிந்து கொள்ளல்.

உலகில் இருக்கும் அனைத்துப் படைப்பினங்களும், அல்லாஹ்வின் மூலமே தோன்றியிருக்கின்றன, மேலும் அவை அவன் பால் தேவையுற்றிருப்பதனால், அவன் இவ்வுலகில் இருந்து கொண்டிருக்கின்றான் என்ற உண்மையையும் தெளிவுபடுத்திக் கொண்டிருக்கின்றது.

எனவே சிந்தனா சக்தியுள்ள ஓர் அடியான் அல்லாஹ்வின் அத்தாட்சிகளையும், உலகில் பரந்து வியா

பித்திருக்கும் அவன் படைப்புகளையும் பற்றி சிந்திப்பதின் மூலம் அதனை புரிந்து கொள்வான். அதனைப்பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நிச்சயமாக வானங்கள் மற்றும் பூமி ஆகியவற்றை படைத்திருப்பதிலும், இரவும், பகலும் மாறி மாறி வருவதிலும் அறிவுடையோர்க்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (அறிவுடைய) அத்தகையோர் நின்ற நிலையிலும், இருந்த இருப்பிலும், தங்கள் விலாப்புறங்களின் மீது (சாய்ந்து)ம் அல்லாஹ்வையே நினைத்து, வானங்கள் மற்றும் பூமி ஆகியவற்றின் படைப்பைப் பற்றியும் சிந்தித்து, எங்கள் இரட்சகனே! நீ மிகத்தூயவன் (நரக) நெருப்பின் வேதனையிலிருந்து எங்களைக் காத்தருள்வாயாக! (என்று பிரார்த்தனை செய்து கொண்டிருப்பார்கள்) (3.190–191)***

உண்மையான விசுவாசிகள் தாங்கள் இவ்வுலகில் வீணுக்காக படைக்கப்படவில்லையென்பதை உணர்ந்து, அவனது ஏவல்களை ஏற்று, விலக்கல்களை தவிர்ந்து நடப்பதன் மூலம், அவனது தண்டனையை பயந்து, நன்மையை எதிர்பார்த்தவர்களாக அவனது கட்டளைகளுக்கு முற்று முழுதாக கட்டுப்பட்டு நடப்பார்கள். அதனை அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***மேலும் ஜின்களையும், மனிதர்களையும், என்னை வணங்குவதற்காகவே தவிர நான் படைக்கவில்லை. அவர்களிடத்தில் (என் படைப்புகளுக்காக) நான் யாதொரு உணவையும் நாடவில்லை. அன்றியும் எனக்கு அவர்கள் உணவளிப்பதையும் நான் நாடவில்லை. (நபியே நீர் கூறுவீராக! நிச்சயமாக அல்லாஹ் அவன்தான், (யாவருக்கும்) மிக்க உணவளிப்பவன். பலமுடையவனும், உறுதியுடையவனும் ஆவான் (5.56–58).***

விசுவாசங் கொண்ட நல்லடியார்கள், அல்லாஹ் அவர்களுக்கு கடமையாக்கியவைகளில் மிகவும் முக்கியக் கடமையான, வணக்கங்கள் அனைத்தையும் அவனுக்கே செய்ய வேண்டும் என்பதனையும் அறிந்து வைத்திருக்கின்றார்கள். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***(சத்திய இஸ்லாம்) மார்க்கத்தில் எத்தகைய நிர்ப்பந்தமு***

***ரில்லை. (ஏனெனில்) வழிகேட்டிலிருந்து நேர்வழி திட்டமாக தெளிவாகி விட்டது. ஆகவே எவர் தாகூத்தை (ஷைத்தானை) நிராகரித்து விட்டு, அல்லாஹ்வை விசுவாசிக்கின்றாரோ, அவர் திட்டமாக அறுந்து போகாத பலமான கயிற்றைப் பற்றிப்பிடித்துக் கொண்டார். மேலும் அல்லாஹ் செவியேற்பவனாகவும், நன்கறிகிறவனாகவுமிருக்கின்றான் (2. 256).***

மேலும் தாகூத் எனும் போது, ஓர் அடியான் தனக்கு இடப்பட்ட வரம்பை மீறி செயல்படுவதனைக் குறிக்கும். இன்று இவ்வாறான தாகூத்(ஷைத்தான்)கள் அதிகமாக இருந்த போதிலும், அவர்களில் முக்கியமானவர்களாக ஐவரைக் குறிப்பிடலாம். அவர்கள்: 1)அல்லாஹ்வால் சபிக்கப்பட்ட ஷைத்தான். 2)மக்கள் தன்னை வணங்குவதை ஏற்றுக் கொள்பவன். 3)தன்னை வணங்குமாறு மக்களைப் பணிப்பவன். 4)மறைவான விடயங்கள் தனக்குத் தெரியும் என வாதிடுபவன். 5)குர்ஆன் ஹதீஸ் அல்லாதவைகளைக் கொண்டு தீர்ப்பு வழங்குபவன் போன்றவர்களாவார்கள்.

## அல்லாஹ்வை ஒருமைப்படுத்தல்.

தவ்ஹீத் என்றால், அவனுக்கு இணை கற்பிக்காமல் அவனை மாத்திரம் வணங்குவதனைக் குறிக்கும். இதுதான் ரஸுல்மார்கள் அல்லாஹ்விடமிருந்து கொண்டு வந்ததும், அல்லாஹ் ஏற்றுக் கொள்ளக் கூடியதுமான மார்க்கமுமாகும். இத்தவ்ஹீதை நமக்கு மூன்று வகைப்படுத்தலாம். அவையாவன: 1)தெய்வீகத்தன்மையில் அல்லாஹ்வை ஒருமைப்படுத்தல். 2)வணக்க வழிபாடுகளைக் கொண்டு அவனை ஒருமைப்படுத்தல். 3)அவனுக்குரிய பெயர்கள் பண்புகளைக் கொண்டு அவனை ஒருமைப் படுத்தல் போன்றவையாகும்.

## தெய்வீகத் தன்மையை ஒருமைப்படுத்தல்.

தெய்வீகத் தன்மையை ஒருமைப்படுத்துவதென்றால், பிரபஞ்சம், பிரபஞ்சத்திலுள்ள அனைத்தையும் படைத்து, உணவளித்து, பின் மரணிக்கச் செய்து, அவர்களையும்

உலகத்திலுள்ளவைகளையும் நிர்வகிப்பவன் அல்லாஹ் ஒருவன் என்றும், வானம், பூமியிலுள்ளவைகள் அனைத்தும் அவனது படைப்பினங்கள் என்றும் ஏற்றுக் கொள்வதாகும். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். *வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும், உங்களுக்கு உணவளிப்பவன் யார்? அல்லது செவிப்புலனையும், பார்வைகளையும், சொந்தமாக்கிக் கொண்டிருப்பவன் யார்? இறந்ததிலிருந்து உயிருள்ளதை வெளிப்படுத்துபவனும், உயிருள்ளதிலிருந்து இறந்ததை வெளிப்படுத்துபவனும் யார்? (அகிலத்தாரின்) சகல காரியங்களையும், திட்டமிட்டு நிகழ்த்துபவனும் யார்? என (நபியே) நீர் அவர்களைக் கேட்பீராக! அ(தற்க)வர்கள் அல்லாஹ்தான் என்று கூறுவார்கள். அவ்வாறாயின் (அவனுக்கு) நீங்கள் பயபக்தி உள்ளவர்களாக ஆக மாட்டீர்களா? என்று நீர் கூறுவீராக! (இத்தகைய தகுதிகளுக்குரிய) அவன்தான் உங்களுடைய உண்மையான இரட்சகனாகிய அல்லாஹ். இந்த வானத்திலும், பூமியிலும் உள்ளவர்கள் அனைவரும் அவனது அடிமைகள். உண்மைக்குப் பின்னர் வழிகேட்டைத்தவிர வேறு (எஞ்சியிருப்பது) யாது?, (இவ்வுண்மையை விட்டு) நீங்கள் எங்கு திருப்பப்படுகிறீர்கள்?, (என்றும் நபியே நீர் கேட்பீராக!) (10. 31,32).* மேலும் கூறுகின்றான். *பூமியும் அதிலுள்ளவையும், யாருக்கு உரியது என நீங்கள் அறிந்திருந்தால், கூறுங்கள் என்று (நபியே) நீர் கேட்பீராக!, அ(தற்க)வர்கள் அல்லாஹ்வுக்கே உரியன என்று கூறுவார்கள். (அவ்வாறாயின் அல்லாஹ்தான் வணக்கத்துக்குரியவன் என்பதை) நீங்கள் நினைத்துப்பார்க்க மாட்டீர்களா? என்று (நபியே) நீர் கூறுவீராக!, (அன்றி) ஏழு வானங்களின் இரட்சகனும் மகத்துவமிக்க அர்ஷின் இரட்சகனும் யார்? என்று, (நபியே) நீர் கேட்பீராக! அ(தற்க)வர்கள் (அவை யாவும்) அல்லாஹ்வுக்கே என்று கூறுவார்கள். (அவ்வாறாயின்) நீங்கள் (அவனுடைய தண்டனையை) பயப்படமாட்டீர்களா? என்று நீர் கூறுவீராக!, ஒவ்வொரு பொருளின் ஆட்சியும் எவன் கைவசம்*

***இருக்கின்றது? அவன் பாதுகாக்கின்றான். (அவனது தண்டனையிலிருந்து தப்ப) அவனுக்கு எதிராக எவரும் பாதுகாக்கப்பட முடியாதே அவன் யார்?, என நீங்கள் அறிந்தவர்களாக இருப்பின் (கூறுங்கள்) என்று கேட்பீராக. அ(தற்க)வர்கள் (சகல அதிகாரமும்) அல்லாஹ்வுக்கே உரியது என்று கூறுவார்கள். (அவ்வாறாயின்) நீங்கள் எங்கிருந்து சூனியமாக்கப்படுகிறீர்கள். (எவ்வாறு மதிமயக்கப்படுகிறீர்கள்)என்று கேட்பீராக (23. 84-89).***

என்றாலும் இவ்வாறு அவர்கள் நம்பிக்கை கொண்டு சான்றுபகர்ந்த போதிலும், வணக்கங்களில் இன்னொருவனை அல்லாஹ்வுடன் இணைத்து வணங்கியதன் மூலம், அவர்கள் இஸ்லாத்தில் நுழைந்தவர்களாகவோ, நரகிலிருந்து பாதுகாப்புப் பெற்றவர்களாகவோ கருதப்படவில்லை. மேலும் நூஹ் (அலை) அவர்களின் சமுதாயம், அக்காலத்து நல்லடியார்களான வத்து, சுவாஉ, யஊஸ், யஊக், நஸ்ர், போன்றவர்களை சிலைகளாக செய்து வணங்கிக் கொண்டிருந்த போது, அல்லாஹ் நூஹ் (அலை) அவர்களை அச்சமுதாயத்தவர்களுக்கு அனுப்பி, அவர்கள் செய்து கொண்டிருக்கும் அவ்வணக்கத்தை விடுத்து, ஏக இறைவனை மாத்திரம் வணங்கும் படி ஏவுமாறு பணித்தான். இவ்வாறே ஒவ்வொரு சமுதாயத்துக்கும் ஒவ்வொரு நபியை அனுப்பி அவர்களுக்கும் இணையை விடுத்து, ஓரிறைக் கொள்கையை போதித்துக் கொண்டிருந்தான். அவ்வாறு அனுப்பப்பட்டவர்களில் இறுதி நபியாக முஹம்மத் (ஸல்) அவர்களை அனைத்து மக்களுக்குமுரிய வழிகாட்டியாக அனுப்பி வைத்தான். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***(நபியே) நீர் கூறுவீராக! நிச்சயமாக நான் உங்களைப் போன்ற ஒரு மனிதன் தான். நிச்சயமாக உங்களுடைய (வணக்கத்துக்குரிய)நாயன் ஒரே நாயன் தான் என்று, எனக்கு வஹி மூலம் அறிவிக்கப்படுகின்றது. ஆகவே எவர் தன் இரட்சகனை சந்திக்க ஆதரவு வைக்கிறாரோ,***

***அவர் நற்கருமங்களைச் செய்யவும், தன் இரட்சகனின் வணக்கத்தில் அவர் எவரையும் இணையாக்க வேண்டாம் (18.110).***

மேலும் நபி (ஸல்) அவர்கள் நபியாக அனுப்பப்பட்ட போது, அன்று வாழ்ந்த முஷ்ரிகீன்கள், இப்றாஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தை பின்பற்றி வணங்கியதுடன், மலக்குகள், ஈஸா (அலை), மற்றும் நல்லடியார்கள் போன்றோரையும் அல்லாஹ்வுடன் இணைத்து, இவர்கள் நமக்கு அல்லாஹ்விடத்தில் சிபாரிசு செய்யக் கூடியவர்கள் எனக் கூறி வணங்கி வந்தார்கள். அதற்கு நபியவர்கள் நீங்கள் இவ்வாறு செய்யக்கூடிய வணக்கம் அனைத்தும் அல்லாஹ்வுக்கு மாத்திரமே செய்யப்பட வேண்டியவையாகும். மாற்றமாக யார் அதனை அல்லாஹ் அல்லாதவர்களுக்கு செய்கின்றார்களோ, அவர்களது நற்கிரியைகள் அனைத்தும் அழிக்கப்பட்டு விடுகின்றன எனவும் தெளிவுபடுத்தி பின் வரும் திருவசனத்தை ஓதிக் காண்பித்தார்கள். அல்லாஹ் கூறுகின்றான். ***மேலும் (இம்மையில்) செயலால் அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றின் பால், நாம் முன்னோக்கி, பின்னர் (அவர்கள் உலகில் விசுவாசங் கொள்ளாததால்) பரத்தப்பட்ட புழுதியாக (பலனற்றதாக) அவைகளை நாம் ஆக்கி விடுவோம் (25.23).***

## வணக்க வழிபாடுகளில் ஒருமைப்படுத்தல்.

வணக்க வழிபாடுகளில் ஒருமைப்படுத்தல் எனும் போது, அல்லாஹ் கடமையாக்கிய வணக்கங்களான பிரார்த்தனை, பயப்படல், ஆதரவு வைத்தல், பொறுப்புச் சாட்டல், ஆசை வைத்தல், உதவி கோரல், அறுத்துப்பலியிடல், நேர்ச்சை வைத்தல், இவைபோன்ற அல்லாஹ்வுக்கு மாத்திரம் செய்யப்பட வேண்டிய அனைத்து வணக்க வழிபாடுகளிலும், அவனுடன் வேறு எவரையும் கூட்டிணைக்காமல் அவனுக்கு மாத்திரமே செய்யப்பட வேண்டும் என்பதாகும். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நிச்சயமாக மஸ்ஜிதுகள் அல்லாஹ்வி(ன் வணக்கத்தி)ற்கே உரியன. ஆகவே (அவைகளில்) அல்லாஹ்வுடன்***

***மற்றெவரையும், நீங்கள் (பிரார்த்தித்து) அழைக்க வேண்டாம் (72.18).***

மேலும் அவ்வணக்கங்களில் ஒன்றை அல்லாஹ் அல்லாதவனுக்குச் செய்யும் போது, அவ்வாறு செய்தவன் இணை வைத்து காபிராக மாறிவிடுகின்றான். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***மேலும் (நபியே) எவன் அல்லாஹ்வுடன் வேறு வணக்கத்திற்குரிய நாயனை அழைக்கின்றானோ, அவனுக்கு அதைப்பற்றி யாதொரு சான்றும் இல்லை. இவனுடைய கணக்கெல்லாம் அவனுடைய இரட்சகனிடத்தில் தான் (உண்டு), நிச்சயமாக நிராகரிக்கக்கூடியவர்கள் வெற்றி பெறமாட்டார்கள் (23,117).*** எனவே அல்லாஹ்வுக்கு மாத்திரமே செய்யப்பட வேண்டுமென்று கூறப்பட்ட சில வணக்கங்களுக்குரிய ஆதாரங்களை கவனிப்போம்.

**பிரார்த்தனை**. பிரார்த்தனை அல்லாஹ்விடத்தில் மாத்திரம் தான், கோரப்பட வேண்டுமென்பதனை நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***பிரார்த்தனை வணக்கங்களின் உயிர் நாடியாகும் (திர்மிதி).*** வணக்கங்களின் உயிர்நாடி என்று கூறியதற்கு இரு காரணங்களை எங்களால் குறிப்பிடலாம். அவை: 1)அந்நபி மொழிக்கேற்ப நாம் பிரார்த்திக்கும் போது, அல்லாஹ்வுக்கு அடிபணிந்தவர்களாக ஆகிவிடுகின்றோம். அல்லாஹ் கூறுகின்றான். ***நீங்கள் என்னையே அழை(த்து) பிரார்த்தி)யுங்கள், நான் உங்களு(டைய பிரார்த்தனை)க்கு பதிலளிப்பேன் (40.60).*** 2)தனது செயல்கள் அல்லாஹ்வின் உதவியால் வெற்றி பெறும் போது, அடுத்தவர்களிடம் கேட்பதனை விட்டு விட்டு, அல்லாஹ்விடமே தனது அனைத்துத் தேவைகளையும் முன் வைக்கின்றான். இதுதான் வணக்கத்தின் முக்கிய நோக்கமாகும். அதற்கு சான்றாக நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***பிரார்த்தனை வணக்கமாகும் (ஹதீஸ்)***

**பயம்**. ஒருவன் அல்லாஹ் அல்லாதவர்களுக்குப் பயப்படும் போது, அவன் ஷைத்தானுக்கு கட்டுப்பட்டவனாக மாறிவிடுகின்றான் என்பதனை அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***இது ஒரு ஷைத்தான் தான், அவன் தன் நண்பர்களைப்பற்றி அவர்கள் பலசாலிகள், கடுமையானவர்கள் என (உங்களைப்) பயமுறுத்துகிறான். ஆகவே நீங்கள் (உண்மை) விசுவாசிகளாக இருந்தால், அவர்களுக்குப்பயப்பட வேண்டாம். எனக்கே பயப்படுங்கள் (3.175).***

**ஆதரவு**. ஒரு விடயத்தில் ஆதரவு வைப்பதும் வணக்கமாகும் எனவே அவ்வணக்கத்தையும் அல்லாஹ்வுக்காகவே செய்ய வேண்டும் என்பதனை, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***ஆகவே எவர் தன் இரட்சகனை சந்திக்க ஆதரவு வைக்கிறாரோ, அவர் நற்கருமங்களைச் செய்யவும், தன் இரட்சகனின் வணக்கத்தில் அவர் எவரையும் இணையாக்க வேண்டாம் (19.110).***

**தவக்குல்**. நமக்கு ஏற்பட்ட துன்பத்தை, அல்லது நமது விடயங்கள் எதுவாயிருந்தாலும் அவைகளை அல்லாஹ்விடமே பொறுப்புச்சாட்ட வேண்டும் என்பதைப்பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நீங்கள் விசுவாசிகளாக இருந்தால் (உங்கள் காரியங்களை ஒப்படைத்து முழுமையாக) அல்லாஹ்வின் மீதே நம்பிக்கை வையுங்கள் (5.23)*** மேலும் கூறுகின்றான். ***எவர் அல்லாஹ்வின் மீது (தன் காரியத்தை ஒப்படைத்து முழுமையாக) நம்பிக்கை வைக்கிறாரோ, அவருக்கு அவனே (முற்றிலும்) போதுமானவன் (65.3).***

**அல்லாஹ்வின் அருளை ஆசித்து, பயப்பட்டு, உள்ளச்சத்தோடு இருத்தல்**. நாம் அல்லாஹ்விடமிருந்து அருளை எதிர்பார்ப்பதாயிருந்தால், நாம் அவனுக்குப் பயந்து, உள்ளச்சத்தோடு இருந்து கொள்ள வேண்டும் என்பதனை, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நிச்சயமாக இவர்கள் யாவரும் நன்மைகளில் (மிகத் துரிதமாக) விரைபவர்களாக இருந்தார்கள். (நம்மு***

***டைய அருளை) ஆசித்தும், (நம் தண்டனையைப்) பயந்தும், நம்மை (பிரார்த்தனை செய்து) அழைப்பவர்களாகவும் இருந்தார்கள். இன்னும் அவர்கள் (யாவரும்) நம்மிடம் உள்ளச்சமுடையோர்களாகவும் இருந்தார்கள் (21. 90).***

**உள்ளச்சம்**. மேலும் நாம் அல்லாஹ்விடமே உள்ளச்சத்தோடு இருந்து கொள்ள வேண்டும் என்பதனை, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***ஆகவே அவர்களுக்கு நீங்கள் பயப்பட வேண்டாம். மேலும் எனக்கே நீங்கள் பயப்படுங்கள் (2. 150).***

**பாவமீட்சி கோரல்**. நாம் தெரிந்தோ, தெரியாமலோ பாவங்கள் செய்திருந்தால், அதற்குரிய மன்னிப்பையும் அல்லாஹ்விடமே கோர வேண்டும் என்பதனை, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***இன்னும் (மனிதர்களே) உங்கள் இரட்சகன் பால் (தவ்பாச் செய்து) நீங்கள் திரும்பி விடுங்கள். அவனுக்கு (முற்றிலும்) நீங்கள் கீழ்ப்படிந்தும் விடுங்கள் (39. 54).***

**உதவி கோரல்**. நாம் எவ்விடயத்திலாவது உதவி கோரும் போதும், அதனை அல்லாஹ்விடமே கேட்க வேண்டும் என்பதனை, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***(எங்கள் இரட்சகா) உன்னையே நாங்கள் வணங்குகின்றோம். உன்னிடமே நாங்கள் உதவியும் தேடுகிறோம் (1. 5).*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***நீ உதவி தேடினால், அல்லாஹ்விடமே உதவி தேடிக்கொள் (திர்மிதி).*** அதாவது இம்மை மறுமை சம்பந்தப்பட்ட எவ்விடயமாக இருந்த போதிலும், அவைகளை அல்லாஹ்விடமே கேட்டுப் பெற்றுக் கொள்ள வேண்டும் என்பதனைக் தெளிவுபடுத்துகின்றது.

**பாதுகாப்புத் தேடல்**. நாம் பாதுகாப்புத் தேடும் போதும், அல்லாஹ்விடமே பாதுகாப்புத் தேட வேண்டும் என்பதனை, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***(நபியே) நீர் கூறுவீராக! வைகறையின் இரட்சகனிடம், நான் பாது காவல் தேடுகின்றேன் (113. 1).*** மேலும் கூறுகின்றான். ***(நபியே) நீர் கூறுவீராக! மனிதர்களின் இரட்சகனிடம் நான் (பாது)காவல் தேடுகின்றேன்***

*(அவன்தான்) மனிதர்களின் அரசன் (அவனே) மனிதர்களின் (வணக்கத்திட்குரிய) நாயன் (114.1).*

**இரட்சித்தல்**. நாம் இரட்சிக்கத் தேடும் போதும், அல்லாஹ்விடமே இரட்சிக்கத் தேட வேண்டும் என்பதனை, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நீங்கள் உங்கள் இரட்சகனிடம் (உங்களை) இரட்சிக்கத் தேடிய போது, அவன் உங்களுக்கு பதிலளித்தான் (8.9).***

**அறுத்துப் பலியிடல்**. நாம் ஒரு பொருளை அறுத்துப் பலியிடும் போதும், அதனை அல்லாஹ்வுக்கு மாத்திரமே அறுத்துப் பலியிட வேண்டும் என்பதனை, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நிச்சயமாக என்னுடைய தொழுகையும், என்னுடைய அறுப்பு (குர்பானியு)ம் என் வாழ்வும், என் மரணமும், அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கே உரித்தானவையாகும். என்று (நபியே) நீர் கூறுவீராக!. அவனுக்கு யாதோர் இணையுமில்லை (துணையுமில்லை) இதைக் கொண்டே நான் ஏவப்பட்டுள்ளேன். இன்னும் (அவனுக்கு கீழ் படிந்த) முஸ்லிம்களில் (இந்த உம்மத்தில்) நான் முதன்மையானவன் என்றும் கூறுவீராக (6.162–163).*** மேலும் கூறுகின்றான். ***ஆகவே நீர் உமதிரட்சகனைத் தொழுது, இன்னும் (குர்பானியும் கொடுத்து அதை) அறுப்பீராக (108.2).*** மேலும் நபி (ஸல்)அவர்கள் கூறுகின்றார்கள். ***அல்லாஹ் அல்லாத ஒருவனுக்கு அறுப்பவனை அல்லாஹ் சபிப்பானாக (முஸ்லிம்).***

**நேர்ச்சை**. நேர்ச்சையும் அல்லாஹ்வுக்கே வைக்கப்பட வேண்டும் என்பதனை, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***இவர்கள் (தங்கள்) நேர்ச்சையை நிறைவேற்றுவார்கள். இன்னும் ஒரு நாளையும் பயப்படுவார்கள். அதன் தீமை எங்கும் பரவியதாக இருக்கும் (76.7).***

எனவே மேற்கூறப்பட்ட அனைத்தும் அல்லாஹ்வுக்கு செய்ய வேண்டிய வணக்கவழிபாடுகள் என அறிந்த நாம், அவைகளை அவனுக்கு மாத்திரமே செய்து அவனது

நல்லடியார்களின் கூட்டத்தில் சேர்ந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

மேலும் ***லாஇலாஹ இல்லல்லாஹ்*** என்ற சொல்லின் கருத்தும், வணக்கத்தையே குறிப்பதுடன், நபிமார்கள் மக்களுக்கு போதித்து, அதனால் பெரும் போர்களே மூண்ட ஏகத்துவக் கொள்கையும், அதுவேயாகும் என்பதனை நாம் அறிந்து கொள்ள வேண்டும். மேலும் நபி (ஸல்) அவர்களை அல்லாஹ் நபியாக அனுப்பி அக்கொள்கையின் பால், மக்களை அழைக்குமாறு பணித்தான். அவர்களும் தனது கடமையை செய்யும் பொருட்டு, அம்மக்காவாசிகளை அக்கொள்கையின் பால் அழைத்த போது, நபியவர்களை வெறுத்து, ஓர் எதிரியாகவே கணித்து அவர்களுடன் போர் செய்தார்கள்.

## நபி (ஸல்) அவர்களின் அழைப்புப் பணி.

அல்லாஹ் தன் இறுதித் தூதரை நபியாக அனுப்பி ***லாஇலாஹ இல்லல்லாஹ்*** என்ற ஏகத்துவத்தின் பால், மக்களை அழைத்து, அது கூறும் கருத்துக்களை நடைமுறைப்படுத்துமாறு அவர்களுக்கு பணித்த போது, அதனது உண்மைக் கருத்தான, வணக்கம் என்பது அல்லாஹ்வுக்கு மாத்திரமே உரியது, அதில் எவரையும் அவனுடன் கூட்டிணைக்கக் கூடாது என்பதனை, அறிந்திருந்த அம்மக்காவாசிகள், நபியவர்களை வெறுத்து அவர்களது பகிரங்க விரோதிகளாக செயல்பட்டார்கள். ஆனால் அன்று அம்மக்கள் அறிந்திருந்த சரியான அக்கருத்தையாவது, இன்று முஸ்லிம்கள் என்ற பெயரில் வாழ்ந்து கொண்டிருக்கும் நாம் அறிந்து கொள்ளாதது தான் மிகவும் ஆச்சரியத்துக் குரியதாகும். வேறு சிலர், அவ்வசனத்துக்கு மாற்றுக் கருத்துக்களை கொண்டு விளக்கமளிக்கின்றார்கள்.

எனவே அவ்வசனத்தையும், அது கூறும் கருத்துக்களையும் ஏற்க மறுத்த அம்மக்கள், அல்லாஹ்வோடு வேறொருவனையும் கூட்டிணைத்து, இருவருக்குமாக செய்து வந்த சில வணக்கங்களை சற்று கவனிப்போம்.

- மரணித்தவர்கள், பிரார்த்தனை, தேவைகளை நிறைவேற்றி வைத்தல், அவர்களால் எவருக்கும் நல்லதோ, கெட்டதோ செய்யலாம் என நம்பி வந்தனர்.
- அவர்களது கப்றுகளை தொட்டு முத்தமிட்டு, அதிலுள்ள மண்ணை பரக்கத்துக்காக எடுத்துக் கொள்வதுடன், அல்லாஹ்விடம் தமக்காக பரிந்து பேசுமாறு பிரார்த்தித்து வந்தனர்.
- அவர்கள் அல்லாஹ் அல்லாத உயிரோடுள்ள சாதாரண மனிதர்கள், அல்லது மரணித்தவர்கள் போன்றோரைக்கொண்டு சத்தியம் செய்து வந்தனர்.

மேலும் அவர்களில் சிலர், மலக்குமார்களையும், இன்னும் சிலர் நல்லடியார்களையும், அல்லது ஈஸா (அலை) அவர்களையும், இன்னும் சிலர் அல்லாஹ் அல்லாதவருக்கு நேர்ச்சை வைத்தும், அறுத்துப் பலியிட்டும், அவர்களை இரைஞ்சியும், இது போன்ற இன்னோரன்ன இணையான காரியங்களை செய்து வந்தார்கள். இதனால் தான் பிரார்த்தனை, அறுத்துப்பலியிடல், நேர்ச்சை வைத்தல், உதவி கோரல், பாதுகாப்புத் தேடல், ஆதரவு வைத்தல், பயப்படல் போன்ற அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கு செய்யப்பட வேண்டிய வணக்கங்கள் எனக் கூறி, அதனை ஏற்றுக் கொள்ள மறுத்தவர்களுக்கெதிராக அல்லாஹ்வின் தூதர்கள் அறப்போர் செய்தார்கள்.

மேலும் மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட சிபாரிசு யாது? அதற்கு தகுதியுடையவர் யாவர்? என்பதனையும், அல்லாஹ் நாடியவர்களுக்கு, அவனது பொருத்தத்துடனே தவிர செய்யப்படும் சிபாரிசுகளைத் தவிர, வேறு எந்த சிபாரிசும் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது என்பதனையும் தெளிவுபடுத்திவிட்டார்கள். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***அவன் பொருந்திக் கொண்டவரைத் தவிர (மற்றெவருக்கும்) இவர்கள் பரிந்துரை செய்யவு மாட்டார்கள் (21.28).*** மேலும் கூறுகின்றான். ***இன்னும் யாருக்கு அவன்***

*அனுமதி அளித்தானோ, அவருக்குத் தவிர அவனிடத்தில் பரிந்துரை பயனளிக்காது (34. 23).*

மேலும் அல்லாஹ் குர்ஆனில் சிபாரிசு செய்யும் விடயமாக, இரு விடயங்களைக் குறிப்பிட்டிருக்கின்றான். 1)எவருக்கு பரிந்து பேசப்படுகின்றதோ, அவரை அல்லாஹ் பொருந்திக் கொள்ள வேண்டும். 2) பரிந்து பேசுபவருக்கு அவன் அனுமதியளித்திருக்க வேண்டும். எனவே மரணித்தவர்களிடம் சிபாரிசு செய்யுமாறு வேண்டுபவர்களுக்கு அல்லாஹ்வின் அனுமதி ஒரு போதும் கிடைக்காது. ஏனெனில் அவ்வாறு செய்வது, அவனதும், அவனது தூதரதும் போதனைக்கு அப்பாற்பட்டதாகும். யார் அவனது கட்டளைக்கு மாறு செய்கின்றானோ, அவன் அவனது கோபத்திற்காளாகின்றான். எனவே யார் ஏகத்துவக் கொள்கையடிப்படையில் வாழ்கின்றானோ, அவனுக்குத் தான் மறுமையில் நபிமார்களதும், நல்லடியார்களதும் சிபாரிசு கிட்டும். அல்லாஹ் கூறுகின்றான். ***(நபியே) நீர் கூறுவீராக! பரிந்துரைகள் யாவும் அல்லாஹ்வுக்கே (39. 44).*** மேலும் கூறுகின்றான். ***அவனைத்தவிர உங்களுக்குப் பாதுகாவலனோ, அல்லது (உங்களுக்குப்) பரிந்து பேசுபவனோ, (வேறொருவரும்) இல்லை (32. 4).*** எனவே நமது சிபாரிசுகளை மரணித்தவர்களிம் வேண்டாது, அல்லாஹ்விடம் மாத்திரமே வேண்டிப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

உலக விடயங்களைப் பொறுத்த வரையில், மனிதனால் முடியுமான விடயங்களில் மனிதனிடத்தில் சிபாரிசு செய்யுமாறு வேண்டுவதில் தவறேதுமில்லை. அவ்வாறான சிபாரிசுகளை அல்லாஹ்வும் ஏற்றுக் கொள்வான். எனவே மரணித்தவர்களிடத்தில் சிபாரிசு செய்ய வேண்டாமலும், அவர்களைக் கொண்டு சத்தியம் செய்யாமலும் இருந்து, அவ்வாறு செய்வது இணையிலுள்ளதென்பதையும் அறிந்து கொள்ள வேண்டும். மேலும் மரணித்தவர்களுக்காக நாம் செய்யவேண்டிய விடயம் அவர்களைத் தரிசிக்கச் செல்லும்

போது, அவர்களுக்கு ஸலாம் கூறி பிரார்த்தனை செய்வ தாகும்.

மேலும் ஸலாம் சொல்லப்படுபவர் முஹம்மத் (ஸல்) அவர்களாயிருந்த போதிலும், இஸ்லாம் கூறியதன் பிரகாரம் கிப்லாவை முன்னோக்கி சப்தத்தை உயர்த்தாது, பிரார்த் திக்க வேண்டும். அல்லது ஸலாத்தைக் கூறிவிட்டு பிரார்த் தனையில் ஈடுபடாமல் திரும்பி விடுவதும் சிறந்ததாகும். மேலும் நபியவர்களுக்கு ஸலவாத் சொல்லுபவர், அவர்க ளுக்குப் பக்கத்திலிருந்தாலும் சரி, தூரத்திலிருந்தாலும் சரி அவர் சொல்லும் ஸலவாத் அவர்களுக்கு சேர்க்கப்பட்டு விடுகின்றது. அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வரு மாறு கூறுகின்றார்கள். ***என் மீது நீங்கள் ஸலவாத்துச் சொல் லுங்கள். நீங்கள் எங்கிருந்து சொன்ன போதிலும் எனக்கு எத்தி வைக்கப்படுகின்றது (அபூதாவூத்).*** ஆனால் மரணித்தவர் சாதா ரண முஸ்லிமாகவிருந்தால், நபி (ஸல்) அவர்கள் கூறியி ருப்பது போன்று, அவருக்கு ஸலாம் கூறி, தனக்காகவும் அவருக்காகவும் பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டும். புறைதா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***மக்கள் மைய வாடிகளுக்குச் சென்றால் அவர்கள், அஸ்ஸலாமு அலைக்கும் அஹ்லத்தியாரி மினல் முஃமினீன வல் முஸ்லிமீன், வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன். அஸ்அலுல்லாஹ லனா வல குமுல் ஆபியா. என்ற துஆவை ஓதிக் கொள்ள வேண்டும் என நபி (ஸல்) அவர்கள் கற்றுத் தருவார்கள் (முஸ்லிம்).***

நபித்தோழர்களும், அவர்களைப் பின் தொடர்ந்தோரும், மையவாடிகளுக்குச் சென்றால், நபி (ஸல்) அவர்கள் கற் றுக் கொடுத்தவாறு, அம்மையவாடியில் அடக்கப்பட்டிருப்ப வர்களுக்கு ஸலாம் கூறி, பாவமன்னிப்புக் கோருவார்கள். சுருக்கமாகக் கூறின், நபி (ஸல்) அவர்களோ, வேறு நல்ல டியார்களோ, யாராக இருந்த போதிலும், அல்லாஹ் அனு மதிக்காத எவரிடமும் சிபாரிசு வேண்டவுமில்லை, அவர்களி டம் வேண்டுமாறு பணிக்கவுமில்லை. ஆனால் அல்லாஹ்

தான் தன்னிடம் மாத்திரம் சிபாரிசு வேண்டுமாறு பணித்திருக்கின்றான்.

மேலும் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுக்கு இணை கற்பித்த எவருக்குமே பரிந்து பேசமாட்டார்கள். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். *நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணை வைக்கப்படுவதை மன்னிக்கவே மாட்டான். இதனைத் தவிர (மற்ற) எதனையும், தான் நாடியோருக்கு மன்னிப்பான் (4.48)*. மேலும் கூறுகின்றான். *நிச்சயமாக எவர் அல்லாஹ்வுக்கு இணை வைக்கின்றாரோ, அவர் மீது திட்டமாக அல்லாஹ் சுவனபதியை தடுத்து விட்டான். மேலும் அவர் தங்குமிடம் நரகம் தான். இன்னும் (இத்தகைய) அநியாயக்காரர்களுக்கு (மறுமையில்) உதவி செய்வோர் இல்லை (5.72)*. மேலும் கூறுகின்றான். *(நபியே பின்னும் அவர்களிடம்) நீர் கூறுவீராக! வேதத்தையுடையவர்களே!, எங்களுக்கும் இன்னும் உங்களுக்குமிடையே நாம் அல்லாஹ்வைத்தவிர வேறொன்றையும் வணங்கக் கூடாது, நம்மில் சிலர் சிலரை அல்லாஹ்வையன்றி தெய்வங்களாக எடுத்துக் கொள்ளவும் கூடாது, என்ற சமமானதொரு வார்த்தையின் பால் வாருங்கள். (இதை ஏற்காது) அவர்கள் புறக்கணித்தால், (அவர்களிடம்) நிச்சயமாக நாங்கள் (அவன் ஒருவனுக்கே முற்றிலும் கீழ்ப்படிந்த) முஸ்லிம்கள் என நீங்கள் சாட்சியம் கூறுவீர்களாக! என்று நீங்கள் கூறி(விட்டு)விடுங்கள் (3.64)*. மேலும் கூறுகின்றான். *இன்னும் அல்லாஹ்வை அவனுக்காக வணக்கத்தைக் கலப்பற்றதாக ஆக்கியவர்களாக (அனைத்து தீய வழிகளை விட்டும் நீங்கி இஸ்லாத்தின் பால்) சாய்ந்தவர்களாக அவர்கள் அல்லாஹ்வை வணங்குவதற்காகவும், தொழுகையை அவர்கள் நிறைவேற்றுவதற்காகவும், ஸகாத்தை அவர்கள் கொடுப்பதற்காகவுமே தவிர (வேறெதையும்) அவர்கள் (அதில்) கட்டளையிடப்படவில்லை. இன்னும் இது தான் நேரான மார்க்கமாகும் (98.5)*.

மேலும் சிலர் நாம் மரணித்தவர்களிடம் சென்று, அல்லாஹ்விடம் தமக்காக சிபாரிசு செய்யுங்கள் என்று தான்

கேட்கின்றோமே தவிர, அவர்களை நாம் வணங்கவில்லை யெனக்கூறி தப்பிக்கப் முயற்சிக்கின்றார்கள். இவர்களுக்கு நாம் கூறுவது யாதெனில், இவ்வாறு நீங்கள் கூறுவது போன்றுதான், அன்றைய அறியாமைக் காலத்தில் வாழ்ந்து வந்த மக்களும் கூறி, அவ்விக்ரகங்களை வணங்கி வந்தார் கள் என்பதை, அல்லாஹ் பின்வரும் வசனத்தில் சுட்டிக் காட்டுகின்றான். அல்லாஹ் கூறுகின்றான். ***இன்னும் அவனை யன்றி (மற்றவர்களைப்) பாதுகாவலர்களாக எடுத்துக் கொண்டி ருக்கின்றார்களே, அத்தகையவர்கள் எங்களை அவர்கள் நெருக்கத் தால் அல்லாஹ்வுக்கு சமீபமாக்கி வைப்பார்கள் என்பதற்காகவே யன்றி அவர்களை நாங்கள் வணங்கவில்லை (என்று கூறுகின்ற னர்) (39.3).*** மேலும் கூறுகின்றான். ***அல்லாஹ்வையன்றி தங்க ளுக்கு இடர் அளிக்காதவற்றை, இன்னும் தங்களுக்கு பலன் அளிக் காதவற்றை அவர்கள் வணங்குகிறார்கள். இவர்கள் அல்லாஹ் விடத்தில் எங்களுக்கு பரிந்துரையாளர்கள் என்றும் அவர்கள் கூறு கின்றனர் (10.18).***

மேலும் அல்லாஹ்வுக்கும், நமக்குமிடையில் சிபாரிசு செய்வதற்காக யாரை நாம் உதவியாக எடுத்துக் கொள் கின்றோம் என்பதனை சற்று சிந்திக்க வேண்டும். இம்மனித சமுதாயத்தில் மடமை, உலோபித்தனம், அநியாயம், இரக் கமின்மை, போன்றவைகள் ஊறிப்போய் அவர்களுக்கு மத்தியில் போட்டி பொறாமை நிறைந்திருப்பதைக் காணு கின்றோம். இப்படிப்பட்டவைகளில் ஈடுபட்டு மரணித்தவர்க ளிடம் தானா, சிபாரிசு செய்யக் கோர வேண்டும்?. ஆனால் அல்லாஹ் அவர்களை விட மிகவும் தூய்மையானவனும், இரக்கமுள்ளவனும், அனைத்து விடயங்களையும் அறிந்த வனும், மனிதர்களில் பாவமன்னிப்பு கோருபவர்களுக்கு அவர்களின் பாவங்களை மன்னித்து அருள்புரியக் கூடிய வனுமாகும். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறு கின்றான். ***மேலும் (நபியே) என்னுடைய அடியார்கள் என்னைப் பற்றி உம்மிடம் கேட்டால், (அதற்கு நீர் கூறுவீராக!) நிச்சயமாக***

*நான் (அவர்களுக்கு)மிகச் சமீபமாகவே இருக்கின்றேன். அழைப்பவ ரின் அழைப்புக்கு, அவர் என்னை அழைத்தால் நான் பதிலளிப்பேன். ஆகவே அவர்கள் நேரான வழியை அடைவதற்காக அவர்கள் எனக்கு பதில் அளிக்கவும், அவர்கள் என்னையே விசுவாசிக்க வும்(2. 186).* மேலும் கூறுகின்றான். *இன்னும் உங்களுடைய இரட் சகன் கூறுகின்றான். நீங்கள் என்னையே அழை(த்துப் பிரார்த்தி) யுங்கள். நான் உங்களுடைய பிரார்த்தனைக்கு பதிலளிப்பேன். நிச்சயமாக என்னை வணங்குவதை விட்டும் பெருமை அடிக்கிறார் களே, அத்தகையோர் அவர்கள் இழிவடைந்தவர்களாய் நரகம் புகுவார்கள் (40. 60).* மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். *நான் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் இருந்த போது, அவர்கள் என்னைப் பார்த்து ஏ சிறுவனே!, உனக்கு சில வசனங்களை கற்றுத் தருகின்றேன் என்று கூறி விட்டு, பின்வருமாறு கூறினார்கள். அல் லாஹ்வை நீ நினைத்துக் கொள், அவன் உன்னை பாதுகாப்பான், அவனை நீ நினைத்தால், உனக்கு முன்னால் அவனைப் பெற்றுக் கொள்வாய். நீ ஏதாவதொன்றை கேட்டால், அல்லது உதவி தேடி னால் அவனிடமே உனது தேவையைக்கேட்டு, உதவியையும் பெற்றுக்கொள் (திர்மிதி).* மேலும் *ஒரு முறை வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடம் வந்து, உபகாரம் செய்வதென்றால் என்னவென்று கேட்ட போது, அதற்கு நபியவர் கள், அல்லாஹ்வை நீ பார்க்கா விடினும், அவன் உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கின்றான் என நினைத்து, அவனை நீ வணங் குவதாகும் எனக் கூறினார்கள் (முஸ்லிம்).* எனவே யார் ஈருலக வெற்றியை விரும்புகின்றாரோ, அவர் அல்லாஹ்விடத்தில் பாவமன்னிப்புக் கோரி, இன்பம் துன்பம் ஏற்படும் அனைத்து சந்தர்ப்பங்களிலும், அவனது அருளையே எதிர்பார்த்து, தன்னை நேரான வழியில் இட்டுச் செல்லுமாறும் அவனி டமே வேண்டிக் கொள்ள வேண்டும்.

## அல்லாஹ்வுக்குரிய பெயர் பண்புகளை ஒருமைப்படுத்தல்.

அதாவது அல்லாஹ்வின் படைப்பினங்களது உருவங்களுக்கு ஒப்பாகாத உருவமும், அவனுக்கு தனிப்பட்ட முறையில் பூரணத்தன்மையுடைய சில பெயர், பண்புகளும் இருப்பதாக நம்புவதாகும். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***அவனைப் போன்று எப்பொருளும் இல்லை. அவனே (யாவற்றையும்) செவியேற்கிறவன் பார்க்கிறவன் (42.11).*** மேலும் கூறுகின்றான். ***(நபியே) நீர் கூறுவீராக! அவன் அல்லாஹ் ஒருவனே, அல்லாஹ் (யாவற்றை விட்டும்) தேவையற்றவன். (யாவும் அவன் அருளையே எதிர்பார்த்திருக்கின்றன.) அவன் (எவரையும்) பெறவில்லை. (எவராலும்) அவன் பெறப்படவுமில்லை. மேலும் அவனுக்கு நிகராக எவருமில்லை (112.1-4).*** மேலும் கூறுகின்றான். ***அல்லாஹ் (எத்தகையவனென்றால்,) அவனைத்தவிர (வணக்கத்திற்குரிய வேறு) நாயன் இல்லை. அவன் ஜீவனுள்ளவன். (என்றென்றும்) நிலைத்திருப்பவன். அவனை சிறு துயிலும், உறக்கமும் பீடிக்காது. வானங்களிலுள்ளவையும், பூமியிலுள்ளவையும் அவனுக்கே உரியன. அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் பரிந்து பேசுபவர் யார்? அவர்களுக்கு முன்னால் இருப்பவற்றையும் பின்னாலிருப்பவற்றையும் அவன் நன்கறிவான். அவனுடைய நாட்டமின்றி அவனுக்கு தெரிந்தவற்றிலிருந்து யாதொன்றையும் முற்றிலும் (மற்றெவரும்) அறிந்து கொள்ளமாட்டார்கள். அவனுடைய குர்ஸிய்யு, வானங்களிலும் பூமியிலும் விசாலமாக (பரவி) இருக்கின்றது. அவ்விரண்டையும் காப்பது அவனுக்குச் சிரமத்தை உண்டாக்காது. மேலும் அவன் மிக்க உயர்ந்தவன் மகத்துவமிக்கவன் (2.255).*** மேலும் கூறுகின்றான். ***மேலும் அல்லாஹ்வுக்கு அழகான பெயர்கள் இருக்கின்றன. ஆகவே அவற்றைக்கொண்டே நீங்கள் அவனை அழையுங்கள். அவனுடைய பெயர்களில் (தவறான பொருள் கொண்டு)திரித்துக் கூறுவோரை விட்டு விடுங்கள். அவர்கள் செய்து கொண்டிருந்தவைக் குரிய கூலியை கொடுக்கப்படுவார்கள் (7.180).***

எனவே அல்லாஹ்வுக்குரிய திருநாமங்களையும், பண்பு களையும், அல்லாஹ் தனது குர்ஆனிலும், நபி (ஸல்) அவர்கள் தனது சுன்னாவிலும் எவ்வாறு கூறியிருக்கின்றார் களோ, அவ்வாறே அவனுக்கேற்ற முறையில் அவைகள் இருந்து கொண்டிருக்கின்றன எனக் கூறி, எவ்வித ஒப்பு வமையின்றியும், கருத்துத்திரிக்காமலும், முறைகூறாமலும், ஏற்றுக் கொள்வதுதான், அல்குர்ஆனையும், நபிவழியையும் பின்பற்றும் கூட்டத்தினரது வழிமுறையாகும். எனவே வழி கெட்ட கூட்டங்களைத் தவிர்த்து, வெற்றிபெற்ற கூட்டத்தில் நம்மனைவரையும் சேர்த்தருள எல்லாம் வல்ல அல்லாஹ் அருள் புரிவானாக.

## லாஇலாஹ இல்லல்லாஹ், வின் பொருள்.

வானத்திலும், பூமியிலும் உண்மையாக வணங்கப் படுவதற்குரிய நாயன் இணையில்லாத, அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்ற கருத்தையே மேற்கூறப் பட்ட வசனம் கூறிக்கொண்டிருக்கின்றது. அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***மேலும் (நபியே) இப்றாஹீம், தம் தந்தை, மற்றும் தம் சமூகத்தாரிடம், நிச்சயமாக நான் நீங்கள் வணங்குபவைகளை விட்டும் நீங்கிக் கொண்டேன், என்று கூறியதை(யும் நினைவு கூறுவீராக!.) எவன் என்னைப் படைத்தானோ, அத்தகையவனைத்தவிர (வேறு யாரையும் வணங்க மாட்டேன்)ஆகவே நிச்சயமாக அவனே எனக்கு நேர்வழி காட்டு வான். இன்னும் (லாஇலாஹ இல்லல்லாஹ் எனும் ஏகத்துவக் கூற் றான) அதனை அவர் தன்னுடைய சந்ததியில் நிலைத்திருக்கும் வாக் காக ஆக்கிவிட்டார். அக்கூற்றின் பால் அவர்கள் திரும்புவதற் காகவே (அவ்வாறு செய்தோம்) (43. 26-28).***

மேலும் தவ்ஹீதைக் குறிக்கும் அச்சொல், மறுத்தல், ஏற்றுக்கொள்ளல் போன்ற இரு கருத்துக்களை உள்ளடக் கியிருக்கின்றது. எனவே ***லாஇலாஹ*** எனும் வசனம், போலி யான அனைத்து கடவுள்களையும் நிராகரிப்பதுடன், ***இல்லல்***

*லாஹ்* எனும் வசனம், அல்லாஹ் மாத்திரம் தான் கடவுள் என்பதனை உறுதிப்படுத்துகின்றது. நாயன் எனும் போது, வணக்கத்துக்குரியவனும் மனிதர்களுக்கேற்படும் இன்ப துன்பங்களின் போது, உள்ளங்கள் தேடக்கூடியவனும் அவனே என்பதனை குறிக்கின்றது.

## லாஇலாஹ இல்லல்லாஹு" ,வின் நிபந்தனைகள்.

லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற வசனத்தை கூறக் கூடியவர், பின்வரும் ஏழு நிபந்தனைகளுக்கும் உட்பட்டி ருந்தால் தான், அவ்வசனம் அவனை நரக நெருப்பிலிருந்து பாதுகாக்கும்.

- சிறந்த முறையில் அது கூறும் இரு கருத்துக்களை யும் அறிந்து வைத்திருத்தல். அதனது கருத்தை விளங்காமலோ, அல்லது அது கூறும் ஏகத்துவக் கொள்கைகளை விசுவாசங் கொள்ளாமலோ, அதனை கூறிக் கொண்டிருந்தால், அது அவனுக்கு எப்பிரயோஜனத்தையும் அளிக்க மாட்டாது.
- அது கூறும் கருத்துக்களிலே சந்தேகங் கொள்ளா மல், உறுதியுடனிருத்தல்.
- அது கூறும் கருத்தை, தூய்மையான முறையில் ஏற்றுக் கொள்ளல். அதாவது அவனுக்கும், அல் லாஹ்வுக்குமிடையில் உதவியாளர்களை ஏற்படு த்தி, அவனுக்கு செய்ய வேண்டிய வணக்கங் களை அவனால் படைக்கப்பட்ட மனிதனுக்கும் செய்யாமலிருத்தல்.
- உண்மையான முறையில் ஏற்றுக் கொள்ளல். யாராவது அதனை நாவினால் மொழிந்து, உள் ளத்தால் இறைவனை நிராகரித்து, நற்கிரியை களில் ஈடுபட்ட போதும், அது அவனுக்கு எப் பிரயோஜனத்தையும் அளிக்கமாட்டாது. மாற்ற மாக நரகின் அடித்தளத்துக்கே அவனை இட் டுச் செல்லும்.

- இவ்வசனத்தையும், அது கூறும் கருத்துக்களையும், மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளல்.
- அவ்வசனம் கூறும் கருத்துக்கேற்ப தனக்கு கடமையான சட்டதிட்டங்களை அல்லாஹ்வின் அருளை ஆதரவு வைத்தவனாக நடைமுறைப் படுத்தல்.
- அதனை முழுமனதுடன் ஏற்றுக் கொள்ளல்.

ஆனால் இன்று சிலர் அதனை மனதால் ஏற்றுக் கொண்ட போதிலும், அதன் பால் சிலர் அழைக்கும் போது, பெருமை, பிடிவாதம் காரணமாக அதனை ஏற்க மறுப்பதைக் காணுகின்றோம். மேலும் அவ்வசனத்தை கூறுவதன் மூலம் ஒருவனின் உயிரும், உடமையும் பாதுகாக் கப்படுகின்றதென்பதனை, அல்குர்ஆனும், நபி மொழியும் வழியுறுத்துகின்றது. அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***யார் லாஇலாஹ இல்லல்லாஹ் வைக்கூறி, அல்லாஹ் தவிர்ந்த கடவுள்களை நிராகரிக்கின்றாரோ, அவரது உயிரும், உடமையும் பறிக்கப்படுவது ஹராமாகிவிடுகின்றது (முஸ்லிம்,அஹ்மத்).*** மேலும் அல்லாஹ் கூறுகின்றான். ***இணை வைத்துக் கொண்டிருப்போரை, அவர்களை கண்ட விடமெல்லாம் கொன்று விடுங்கள். இன்னும் அவர்களைப் பிடியுங்கள். அவர்களை முற்றுகையுமிடுங்கள். ஒவ்வொரு பதுங்குமிடத்திலும் அவர்களைக் குறி வைத்து உட்காருங்கள். பின்னர் அவர்கள் (தங்கள் பாவங்களுக்கு)பச்சாதாபப்பட்டு, விலகி (விசுவாசித்துத்)தொழுகையையும் நிறைவேற்றி, ஸகாத்தையும் கொடுத்து வந்தால், அவர்கள் வழியில் அவர்களை விட்டு விடுங்கள் (9.5).***

மேற்கூறப்பட்ட திருவசனத்தினடிப்படையில் அவர்கள் இணை கற்பிக்காமல், தொழுகை, ஸகாத் போன்ற நற்கிரியைகளை அல்லாஹ்வுக்கு மாத்திரமே செய்ய வேண்டுமெனவும், தவறும் பட்சத்தில் அவர்களை கொலை செய்யுமாறும் அல்லாஹ் பணித்திருக்கின்றான் என்பது தெளிவாகின்றது.

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***மனிதர்கள் வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை என்று சாட்சி கூறி, என்னையும், நான் கொண்டு வந்தவைகளையும், விசுவாசம் கொள்கின்ற வரை, அவர்களுடன் போரிட பணிக்கப்பட்டுள்ளேன். அவ்வாறு அவர்கள் செய்து விட்டால், அவர்களுடைய உயிரையும் உடமையையும் என்னிடத்திலிருந்து பாதுகாத்துக் கொண்டார்கள். அவர்களது உண்மை நிலை பற்றிய விசாரணை அல்லாஹ்விடமே இருந்து கொண்டிருக்கின்றது (முஸ்லிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***மனிதர்கள் அல்லாஹ்வையும், அவனது தூதரான என்னையும், விசுவாசித்து, தொழுது, ஸகாத் கொடுத்து வரும் வரை அவர்களுக்கெதிராக போர் செய்ய பணிக்கப்பட்டுள்ளேன். அவ்வாறு அவர்கள் செய்து விட்டால், அவர்கள், அவர்களது உயிரையும், உடமையையும் என்னிடத்திலிருந்து பாதுகாத்துக் கொண்டார்கள். அவர்களது உண்மை நிலை பற்றிய விசாரணை அல்லாஹ்விடமே இருந்து கொண்டிருக்கின்றது (புகாரி,முஸ்லிம்).***

## அல்லாஹ்வின் தூதர் முஹம்மத், என்பதின் பொருள்.

அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் என்பதனை ஏற்றுக் கொள்வதென்றால், அவர் ஏவியவைகளை உண்மைப்படுத்தி, அதற்கு வழிப்பட்டு, அவர் விலக்கியவைகளை தவிர்ந்து அல்லாஹ்வை மாத்திரம் வணங்க வேண்டும். எனவே ஒருவன் நபித்துவத்தை ஏற்று, அவர் ஏவியவைகளையும், தடுத்தவைகளையும், பொருட்படுத்தாது, தனது மனோ இச்சைக்கேற்ப வணக்கங்களில் ஈடுபட்டுவந்தால், அவன் உண்மையாக நபித்துவத்தை ஏற்றுக் கொண்டவனாக கருதப்படமாட்டான். நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***யார் எனக்கு வழிப்படுகின்றானோ, அவன் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டவனாவான். யார் எனக்கு மாற்றம் செய்கின்றானோ, அவன் அல்லாஹ்வுக்கும் மாற்றம் செய்தவனா***

*வான் (புகாரி).* மேலும் கூறுகின்றார்கள். *யார் எமது மார்க்கத்தில் இல்லாத ஒன்றை, புதிதாக ஏற்படுத்துகின்றானோ, அது ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது (புகாரி ,முஸ்லிம்).*

மேலும் அல்லாஹ்வால் மாத்திரம் செய்ய முடியுமான விடயங்களில், அவன் அல்லாதவர்களிடம் அதை செய்ய வேண்டும் போது, உண்மையான முறையில் அவன் மேற்கூறப்பட்ட கலிமாவின் பொருளை நிலைநிறுத்தவில்லை என்பதனுடன், அல்லாஹ்வை தாழ்வாகக் கருதி, அவனை மதிக்காதவனாகவும் ஆகிவிடுகின்றான். எனவே தனக்கு தலைமைத்துவம் இருக்கின்றதென்றும், தன்னால் நன்மை, தீமை விளைவிக்க முடியும் என்றும் வாதிடும் சிலர், அல்லாஹ்வின் மீது இல்லாததை இட்டுக்கட்டி, அவனது தூதருடன் போரிட்டு, வழிகேட்டில் சென்று கொண்டிருக்கின்றார்கள். ஆக இவர்கள் அல் குர்ஆனையும் அஸ்ஸுன்னாவையும் பின்பற்றி, அதனை சற்று எடுத்து நோக்கின், ஏகத்துவத்தைப் பின்பற்றும், சாதாரண பொது மகன் தெரிந்து வைத்திருக்கும் இணை கற்பித்தல், பித்அத் செய்தல் போன்றவைகள் இஸ்லாத்திற்கு முரணானவை என்பதையுணர்வதுடன், தான் எவ்வளவு தூரம், இக்கலிமாவின் பொருளை விளங்கி வைத்திருக்கின்றேன் என்பதனையும் புரிந்து உண்மையின் பக்கம் திரும்பி விடுவார்கள்.

மேலும் தான் பித்அத், இணை போன்றவைகளை விட்டும் தூரமாகிய ஏகத்துவவாதியென தன்னை இனங்கண்டு கொண்டால், அதிலே தொடர்ந்து இருந்து கொள்ளவும், மேற்கூறப்பட்ட பித்அத்துக்களில் ஏதாவதொன்று தன்னுள் இருக்கக் கண்டால், அதனையிட்டு அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோரி, அவைகளையும், அவைகளில் ஈடுபட்டிருப்பவர்களையும் விட்டும் தூரமாகி இருந்து கொள்ள அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்து கொள்ள வேண்டும்.

## இஸ்லாத்தின் கடமைகளும், அதனை அழிக்கக் கூடிய வைகளும்.

இஸ்லாம் என்றால், அல்லாஹ்வுக்கு இணை வைக்காமல், அவனை ஒருமைப்படுத்தி, அவனது கட்டளைகளுக்கு அடிபணிந்து, அவனிடம் சரணடைவதனைக் குறிக்கும். இஸ்லாத்தின் ஐந்து கடமைகளும் ஒரு மனிதனிடத்தில் ஒன்றிணையும் போது தான், அவன் உண்மையான முஸ்லிமாக மாறுகின்றான். அக்கடமைகளில் ஒன்றை விட்டாலும் கூட, அவனது இஸ்லாம் தவிடு பொடியாகின்றது. இஸ்லாத்தின் கடமைகள் ஐந்து. அவையாவன:

- வணக்கத்துக்குரியவன் அல்லாஹ் எனவும், முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் அவனது தூதர் எனவும் சான்று பகர்தல்.
- தொழுகையை நிறை வேற்றுதல்.
- ஸக்காத் எனும் ஏழைவரி கொடுத்தல்.
- நோன்பு நோற்றல்.
- பாதையால் சக்தி பெற்றவர்கள், மக்கா சென்று ஹஜ் செய்தல்.

## இஸ்லாத்தை அழிக்கும் விடயங்கள்.

இஸ்லாத்தை அழிக்கும் விடயங்கள் அதிகமாக இருந்த போதிலும் அவைகளில் சிலதைப் பார்ப்போம்.

- அல்லாஹ்வுக்கு இணை கற்பித்தல். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்க(வே) மாட்டான். இதனைத் தவிர (மற்ற) எதனையும், தான் நாடியோருக்கு மன்னிப்பான் (4.48).*** மேலும் கூறுகின்றான். ***நிச்சயமாக எவர் அல்லாஹ்வுக்கு இணைவைக்கின்றாரோ, அவர் மீது திட்டமாக அல்லாஹ் சுவனபதியை தடுத்து விடுகின்***

*றான். மேலும் அவர் தங்குமிடம் நரகம்தான். இன்னும் இத்தகைய அநியாயக்காரர்களுக்கு (மறுமையில்) உதவி செய்வோர் இருக்கமாட்டார்கள் (5.72).*

- அல்லாஹ் அல்லாத ஜின், கப்று போன்றவைக்கு அறுத்துப் பலியிடுவதும், தனக்கும் அல்லாஹ்வுக்குமிடையில் சிபாரிசு செய்யும் முகமாக சிலரை நியமித்து, அவர்களிடம் தனது தேவைகளை வேண்டுதல். அன்றைய அறியாமைக்கால மக்களும் உலகைப் படைத்து பரிபாளிப்பவன் அல்லாஹ் என்பதை ஏற்றுக் கொண்டு, ஹஜ், தானதர்மம் போன்ற நற்கிரியைகளில் ஈடுபட்டு வந்தார்கள். ஆனாலும் தமக்கும்,அல்லாஹ்வுக்குமிடையில் பரிந்து பேசுவதற்காக மலக்குகளையும், நல்லடியார்களையும், ஈஸா (அலை), மர்யம் (அலை) போன்றவர்களையும் எடுத்து அல்லாஹ்வுக்கு இணை கற்பித்ததால், அவர்கள் தவ்ஹீதை ஏற்றுக் கொண்டவர்களாக கணிக்கப்படவில்லை. அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். *தூயமார்க்கம் (வழிபாடு) அல்லாஹ்வுக்கே உரித்தானது. என்பதை அறிந்து கொள்வீராக! இன்னும் அவனையன்றி (மற்றவர்களைப்) பாதுகாவலர்களாக எடுத்துக் கொண்டிருக்கின்றார்களே, அத்தகையவர்கள், எங்களை அவர்கள் நெருக்கத்தால் சமீபமாக்கி வைப்பார்கள் என்பதற்காக வேயன்றி அவர்களை நாங்கள் வணங்கவில்லை. (என்று கூறுகின்றனர்) எதில் அவர்கள் வேறுபட்டுக் கொண்டிருக்கின் றார்களோ, அதுபற்றி நிச்சயமாக அல்லாஹ் (மறுமையில்) அவர்களுக்கிடையில் தீர்ப்பளிப்பான். நிச்சயமாக அல்லாஹ் எவன் (உண்மையை) மிக்க மறுக்கிறவனாக, பொய்*

*றவனாக, பொய்யனாக இருக்கின்றானோ, அவனை நேர்வழியில் செலுத்த மாட்டான் (39. 3).*

- இணை வைத்தவர்களை காபிரென்று கூறாதிருத்தல். அல்லது அவர்கள் காபிர்கள் என்பதில் சந்தேகித்தல். அல்லது அவர்களது வழிபாட்டு முறைகளை சரியெனக் காணல்.
- நபி (ஸல்) அவர்களின் நேர்வழியையும் சட்டத்தையும் விட, மற்றவர்களின் நேர்வழியும், சட்டமும் தான், பூரணமானது சிறந்ததெனக் கருதி, அல்குர்ஆன் நபி வழிகாட்டலுக்கெதிராக ஏனைய சட்டக் கோவைகளை மேம்படுத்தல். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***மேலும் எவர் அல்லாஹ் இறக்கி வைத்ததைக் கொண்டு தீர்ப்பளிக்க வில்லையோ, அத்தகையோர்தாம் நிராகரிப்பவர்களாவர் (5. 44).*** மேலும் கூறுகின்றான். ***அறியாமை காலத்துத் தீர்ப்பையா அவர்கள் விரும்புகின்றனர்?, உறுதியாக நம்பிக்கை கொண்ட சமூகத்தார்க்குத் தீர்ப்பளிப்பதில் அல்லாஹ்வை விடவும் மிக்க அழகானவன் யார்? (5. 50).*** மேலும் கூறுகின்றான். ***ஆனால் உமதிரட்சகன் மீது சத்தியமாக, அவர்கள் தங்களுக்குள் ஏற்பட்ட சச்சரவில் உம்மை நீதிபதியாக ஆக்கி, நீர் செய்யும் தீர்ப்பைத் தங்கள் மனங்களில் எத்தகைய அதிருப்தியையும் கொள்ளாமல், முற்றிலும் ஏற்றுக் கொள்ளாத வரையில் அவர்கள் விசுவாசிகளாக ஆக மாட்டார்கள் (4. 65).*** மேலும் இஸ்லாத்தின் சட்ட திட்டங்கள் சிறந்ததென ஏற்றுக் கொண்ட போதிலும், அல்குர்ஆன் அல்லாததைக் கொண்டு ஒருவன் தீர்பு வழங்குவானேயானால், அவனும் காபிராகி விடுகின்றான்.

- நபி (ஸல்)அவர்களையோ, அவர்கள் கொண்டு வந்ததில் சிலதையோ பொய்ப்பித்தல்.
- நபி (ஸல்) அவர்களின் மார்க்கத்தில் சிலதை பரிகசித்தல். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***அல்லாஹ்வையும் அவனது செயல்களையும், அவனது தூதரையுமா பரிகசித்துக் கொண்டிருந்தீர்கள்?. நீங்கள் செய்யும் (பரிகாசத்திற்கு வீண்)புகழ் கூற வேண்டாம். உங்களின் விசுவாசத்திற்குப் பின்னர், திட்டமாக (அதனை) நீங்கள் நிராகரித்தே விட்டீர்கள். என்று (நபியே) நீர் கேட்பீராக (9. 65–66).***
- சூனியம் செய்பவன், அல்லது அதனை ஏற்றுக் கொள்பவன் காபிராவான். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***இன்னும் சுலைமான் (சூனியம் செய்து அல்லாஹ்வை) நிராகரிக்கவில்லை. எனினும் ஷைத்தான்கள் நிராகரித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் சூனியத்தையும், பாபிலோ(ன் நகரி)னில் ஹாரூத் மாரூத் என்னும், இரு மலக்குகளுக்கு இறக்கப்பட்டிருந்த(தாகக் கூறி பல)வற்றையும் மனிதர்களுக்குக் கற்றுக் கொடுத்து வந்தார்கள். மேலும் அவ்விருவரும் நாங்கள் சோதனையாக இருக்கின்றோம். ஆதலால் (இதைக்கற்று) நீ காபிராகிவிட வேண்டாம்(என்று கூறினார்கள்)(2. 102).*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***சூனியக்காரனுக்குரிய தண்டனை அவனை வாளால் வெட்டுவதாகும்(திர்மிதி).*** மேலும் புஜாலத்துபுனு உப்தஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***உமர் (ரலி) அவர்கள், சூனியம் செய்யும் ஆண், பெண் இருபாலாரையும் கொலை செய்யும் படி எங்களுக்கு***

*கடிதம் எழுதினார்கள். அதனடிப்படையில் நாம் மூன்று சூனியக்காரர்களை கொலை செய்தோம் (புகாரி).*

- முஸ்லிம்களை எதிர்த்து, இணை கற்பிப் போருக்கு உதவியாய் இருத்தல். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***உங்களில் எவரேனும், அவர்களை(த் தனக்கு)ப் பாது காவலராக்கிக் கொண்டால், அப்போது நிச்சயமாக அவரும் அவர்களில் உள்ளவர்தாம். நிச்சயமாக அல்லாஹ் (இந்த) அநியாயக்கார சமூகத்தாருக்கு நேர்வழி காட்ட மாட்டான் (5. 51).***
- ஹிழ்ரு (அலை) அவர்கள், மூஸா (அலை) அவர்களின் மார்க்கத்தை விட்டு வெளியேறியது போன்று, தமக்கும் முஹம்மத் (ஸல்) அவர்களின் மார்க்கத்தை விட்டு வெளியேற லாம் எனக் கருதுதல்.
- அல்லாஹ்வின் மார்க்கத்தை புறக்கணித்தல். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறு கின்றான். ***மேலும் தன்னுடைய இரட்சகனின் வசனங்களைக் கொண்டு நினைவுபடுத்தப்பட்டு, அதன் பின்னர், அவைகளைப் புறக்கணித்து விடுகிறவனை விட மிக அநியாயக்காரன் யார்?, நிச்சயமாக நாம் (இத்தகைய) குற்றவாளிகளை (அவர்களின் முந்திய பாவத்திற்காக) தண்டிக்கக் கூடியவர்களாவோம் (32. 22).*** மேலும் கூறுகின்றான். ***மேலும் எவர் என்னுடைய நல்லுபதேசத்தைப் புறக்கணிக்கின்றாரோ, நிச்சயமாக அவருக்கு நெருக்கடியான வாழ்க்கையே இருக்கிறது. மேலும் மறுமை நாளில் நாம் அவனைக் குருடனாகவே எழுப்புவோம் (20. 124).***

எனவே முஸ்லிமானவன் தனது இஸ்லாத்தை கூறு போடக் கூடியவைகளை விட்டு விட்டு, குர்ஆன் சுன்னாவைப் பற்றிப் பிடித்துக்கொள்ள முயற்சி செய்ய வேண்டும். ஏனெனில் அவ்விரண்டையும் பின்பற்றுவதில் தான் வெற்றியே இருக்கின்றது. பித்அத் எனும் போது குர்ஆனிலோ, சுன்னாவிலோ, இஜ்மாவிலோ இல்லாத ஒரு செயலை செய்வதாகும். எனவே யார் நபி (ஸல்) அவர்களும், அவர்களது தோழர்களும் பின்பற்றி வந்த மார்க்கத்தை அறிந்து, பின்பற்றுவதற்கு முயற்சித்து, அதன் மூலம் அல்லாஹ்வின் பொருத்தத்தையும் எதிர் பார்க்கின்றனரோ, அல்லாஹ் அவர்களுக்கு நேர்வழி யைக் காட்டுகின்றான்.

அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின் றான். ***மேலும் யார் நம்முடைய வழியில் (செல்ல) முயற்சிக் கின்றார்களோ, நிச்சயமாக நாம் அவர்களை நம்முடைய (நேரான) வழியில் செலுத்துவோம். மேலும் நிச்சயமாக அல் லாஹ் நன்மை செய்வோர்களுடனேயே இருக்கின்றான் (29. 69).*** மேலும் கூறுகின்றான். ***மேலும் (தவ்பா செய்து) அவன் பால் திரும்பி வருபவரை நேர்வழியில் செலுத்துகிறான் (13. 27).*** மேலும் கூறுகின்றான். ***எவர் அல்லாஹ்வை விசுவாசிக்கின் றாரோ, அவருடைய இதயத்திற்கு (அல்லாஹ்வினால் ஏற்படுத் தப்பட்டதை பொருந்திக் கொண்டு, பொறுமையுடனிருக்க) அவன் வழிகாட்டுகிறான் (64. 11).***

மேற்கூறப்பட்டவைக்கு மாற்றமாக குர்ஆனையும், சுன்னாவையும் புறக்கணித்து, அதற்கு மாற்றமானவை களைப் பின்பற்றி வாழ்கின்றார்களே, அவர்களைப் பற்றி பின்வரும் வசனம் இவ்வாறு கூறுகின்றது. ***அல் லாஹ் இறக்கி வைத்த (வேதத்)தின் பாலும், (அவனுடைய) இத் தூதரின் பாலும் வாருங்கள் என அவர்களுக்குக் கூறப்பட் டால், எங்களுடைய மூதாதையர்களை எதன் மீதிருக்க நாம் கண்டோமோ, அதுவே (நாங்கள் பின்பற்ற) எங்களுக்குப்***

*போதும் எனக் கூறுகின்றனர். அவர்களுடைய மூதாதையர்கள் யாதொன்றையும் அறியாதவர்களாகவும், நேரான வழியில் இல்லாதவர்களாகவும் இருந்தாலுமா?, அவர்கள் தங்கள் மூதாதையர்களைப் பின்பற்றுவார்கள்? (5.104).*

மேலும் இன்று சிலர், பித்அத்துக்களை தாமும் செய்து வழி கெட்டது போதாமல், மற்றவர்களுக்கும் அதனை தவறான அறிவிப்புக்கள் மூலமும், பிழையான கருத்துக்கள் மூலமும் அழகுறக்காட்டி, அவர்களையும் வழிகெடுக்கின்றார்கள். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். *எவர்களுடைய இதயங்களில் சறுகுதல் இருக்கின்றதோ, அத்தகையோர் அதில் குழப்பத்தை உண்டுபண்ணக் கருதி, அதில் பல பொருள்கள் கொண்டவைகளையே தேடிப்பின்பற்றுவார்கள் (2.7).* மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். *உங்களை நான் சிறந்த தெளிவான மார்க்கத்தில் விட்டுச் செல்கின்றேன். அதனது இரவோ, பகலைப் போன்றதாகும். நாசமாகிப் போகக் கூடியவனைத் தவிர வேறு எவரும் அதை விட்டு, வழி தவறிச் செல்ல மாட்டார்கள் (கிதாபுஸ்சுன்னா).* மேலும் கூறுகின்றார்கள். *எனது வழி முறையையும், குலபாஉர் ராசிதீன்களது வழி முறைகளையும் பின்பற்றி, கடை வாய்ப்பல்லினால் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். ஏனெனில் புதிதாக உருவாக்கப்பட்டவைகள் அனைத்தும் பித்அத்துக்களாகும். பித்அத்துக்கள் அனைத்தும் வழிகேடுகளாகும் என்பதனை உங்களுக்கு எச்சரிக்கை செய்கின்றேன் (அபூதாவுத்,திர்மிதி).* மேலும் கூறுகின்றார்கள். *இம்மார்க்கத்தில் இல்லாத ஒன்றை, யாராவது புதிதாக ஏற்படுத்தினால், அது ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது (புகாரி,முஸ்லிம்).* மேலும் கூறுகின்றார்கள். *எமது கட்டளை இல்லாத ஒரு விடயத்தை யாராவது செய்தால், அது ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது (முஸ்லிம்).*

எனவே வெற்றி பெற்ற கூட்டமான, அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஅத்தினர், குர்ஆனில் சட்டம் சொல்லப்பட்ட வசனங்களைக் கொண்டு நடை முறைப்படுத்துவார்கள். பல பொருள்கள் கொண்ட வசனங்களுக்கு கருத்துத் திரிக்காமல், அதனை அவ்வாறே விசுவாசம் கொள்வார்கள். வெளிப்படையாக சட்டம் சொல்லப்பட்ட வசனங்களில், நேர்வழியிருப்பதாகவும் அதிலே அல்லாவின் அருள் இருப்பதாகவும் விசுவாசிப்பார்கள்.

மேலும் அல்லாஹ்வுக்குச் செய்யப்பட வேண்டிய வணக்கங்களான, அறுத்துப்பலியிடல், நேர்ச்சை வைத்தல், பிரார்த்தித்தல், அபயம் தேடுதல், சிபாரிசு செய்ய வேண்டுதல் போன்ற வணக்கங்களை கப்றில் அடக்கப்பட்டிருப்பவர்களுக்கு செய்வதற்கோ, அல்லது அவர்களது கப்றை வலம் வருதல், தொட்டு முத்தமிடல், அல்லாஹ்வுக்கும் இவர்களுக்குமிடையில்,அவர்களை உதவியாளராக எடுத்துக் கொள்ளல் போன்றவைகளுக்கோ குர்ஆனிலும் சுன்னாவிலும் எவ்வித ஆதாரமும் இல்லை. ஆனால் மேற்கூறப்பட்ட வணக்கங்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்கு மாத்திரம் தான் செய்யப்பட வேண்டும் என்பதற்கும், அவனுக்குச் செய்யாமல், அவனால் படைக்கப்பட்டவைகளுக்கு செய்வது இணை என்பதற்கும் நாம் மேற்கூறிய ஆதாரத்துடன், இன்னும் எத்தனையோ ஆதாரங்கள் இருந்து கொண்டிருக்கின்றன.

நாம் அல்லாஹ்வுக்கு செய்ய வேண்டிய வணக்கங்களில் எதனையும், நபிமார்களுக்கோ, வலிமார்களுக்கோ செய்வதை, அவர்களே பொருந்திக் கொள்ள மாட்டார்கள். நாளை மறுமையில் அல்லாஹ் விசாரணைக்காக தனது படைப்பினங்களை ஒன்று திரட்டும் போது, நம்மை விட்டும் அவர்கள் நிரபராதியாகி விடுவார்கள். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***அவர்களையும், அல்லாஹ்வையன்றி அவர்கள் வணங்கிக் கொண்டிருந்த (அல்லாஹ் அல்லாத)வர்களையும்,***

*அவன் (விசாரணைக்காக) ஒன்று திரட்டும் (மறுமை) நாளில், என்னுடைய இந்த அடியார்களை, நீங்கள் தாம் வழிகெடுத்தீர்களா?, அல்லது அவர்கள் தாமாகவே வழிகெட்டு விட்டனரா? என்று (அல்லாஹ்) கேட்பான். அ(தற்க)வர்கள், நீ மிகப்பரிசுத்தமானவன். உன்னையன்றி (மற்றெதனையும்) நாங்கள் எங்களுக்கு பாதுகாவலர்களாக எடுத்துக் கொள்வது எங்களுக்கு அவசியமன்று, எனினும் நீதான் அவர்களையும், அவர்களின் மூதாதையரையும், (உன்னை) நினைவு கூர்வதை அவர்கள் மறந்து விடும் வரை சுகமனுபவிக்கச் செய்தாய். மேலும் அவர்கள் அழிந்து போகும் கூட்டத்தினராகி விட்டார்கள் என்று கூறுவர் (25. 17–18).*

மேலும் கூறுகின்றான். *அன்றியும் அல்லாஹ் (மறுமை நாளில்) ஈசாவிடம்), மர்யமுடைய மகன் ஈசாவே! அல்லாஹ்வைத் தவிர என்னையும், என்னுடைய தாயையும், இரண்டு வணக்கத்திற்குரியவர்களாக எடுத்துக் கொள்ளுங்கள் என்று மனிதர்களுக்கு நீர் கூறினீரா? என்று கேட்பான். (அதற்கு) நீ மிகப்பரிசுத்தமானவன். எனக்கு ஒரு சிறிதும் உரிமை இல்லாததை நான் (ஒரு போதும்) கூறுவதற்கு எனக்குத் தகுதியில்லை. அவ்வாறு நான் கூறியிருந்தால், நிச்சயமாக நீ அறிந்திருப்பாய். என் உள்ளத்தில் உள்ளதை நீ நன்கறிவாய். உன் உள்ளத்திலுள்ளதை நான் அறிய மாட்டேன். நிச்சயமாக நீதான் மறைவானவற்றை மிக்க அறிந்தவன் என்று கூறுவார். என்னுடைய இரட்சகனும் உங்களுடைய இரட்சகனுமான அல்லாஹ்வை வணங்குங்கள் (என்று மக்களுக்கு நான் கூற வேண்டும்) என்று, நீ எதை எனக்குக் கட்டளையிட்டாயோ, அதைத் தவிர (வேறு) எதையும் நான் அவர்களுக்குக் கூறவில்லை. நான் அவர்களுடன் (உலகில்) இருந்த வரையில், அவர்களின் செயலைத் தெரிந்து கொண்டிருந்தேன். பின்னர் நீ என்னைக் கைப்பற்றிய பொழுது, நீ தான் அவர்களைக் கண்*

*காணிப்பவனாக இருந்தாய். நீயே ஒவ்வொரு பொருளின் மீதும் சாட்சியாளன் (என்றும் கூறுவார்) (5.116–117).*

மேலும் கூறுகின்றான். *(மலக்குகளை வணங்கி வந்த) அவர்கள் அனைவரையும், அவன் (அல்லாஹ்) ஒன்று திரட்டும் நாளை (நினைவு கூறுங்கள். பின்னர் மலக்குகளிடம் இவர்கள்தானா? உங்களை வணங்கிக் கொண்டிருந்தவர்கள் என்று அவன் கேட்பான். அத(ற்க)வர்கள் (எங்கள் இரட்சகனே) நீ மிகப்பரிசுத்தமானவன். அவர்களன்றி நீ தான் எங்கள் பாது காவலன். எனினும் அவர்கள் ஜின்களை வணங்கிக் கொண்டிருந்தனர். அவர்களில் பெரும்பாலோர் அவர்களை (அந்த ஜின்களை) விசுவாசித்துமிருந்தவர்கள் என்று கூறுவார்கள். எனவே இந்நாளில் உங்களில் சிலர் (மற்ற) சிலருக்கு நன்மையோ, தீமையோ செய்யமாட்டார்கள். (இம்மையில்) அநியாயம் செய்தார்களே, அவர்களுக்கு நீங்கள் எதைப் பொய்யாக்கிக் கொண்டிருந்தீர்களோ, அத்தகைய (நரக) நெருப்பின் வேதனையைச் சுவைத்துப் பாருங்கள் என்றும் நாம் கூறுவோம். இன்னும் தெளிவான நம்முடைய வசனங்கள் அவர்களுக்கு ஓதிக் காண்பிக்கப்பட்டால், உங்கள் மூதாதையர் வணங்கிக் கொண்டிருந்தவைகளை விட்டும், உங்களை தடுத்து விட நாடுகின்ற ஒரு மனிதரேயன்றி, இவர் (வேறு) இல்லை என்று அவர்கள் கூறுகின்றனர். மேலும் அவர்கள், (அவர் கூறுகிற) இது, இட்டுக்கட்டப்பட்ட பொய்யேயன்றி வேறில்லை என்றும் கூறுகின்றனர். மேலும் (திருக்குர்ஆனாகிய இந்த) உண்மை அவர்களிடம் வந்த சமயத்தில், இது பகிரங்கமான சூனியமேயன்றி (வேறு) இல்லை என்று நிராகரிப்போர் கூறுகின்றனர் (34.40–43).*

## இறைத் தூதர்களின் பணி.

அல்லாஹ் தனது வழிமுறையை மனிதர்களுக்கு சமர்ப்பிப்பதின் மூலம் அவர்கள் நாளை மறுமையில் தனக்கெதி

ராக வாதிட முடியாதவாறு, அல்லாஹ்வின் ஏவல்களை எடுத்து நடப்பவர்களுக்கு சுவனத்தைக் கொண்டு நன் மாராயம் கூறவும், அவனுக்கு மாறு செய்து நடப்பவர்க ளுக்கு நரகைக் கொண்டு எச்சரிக்கை செய்யவும், மனிதர் களில் சிலரை தேர்ந்தெடுத்து, அவர்களை அவனது தூதர் களாக அனுப்பி வைத்தான். அவ்வாறு வந்த தூதர்கள், மக்கள் செய்து கொண்டிருந்த இணையைத் தடுத்து, வணக்கங்கள் அனைத்தும் அல்லாஹ்வுக்கு மாத்திரமே செய்யப்பட வேண்டும் எனக் கூறி, நல்லவைகளை ஏவியும், தீயவைகளை தடுத்தும், அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு அடிபணிந்து நடக்குமாறு மக்களை அழைத்தார்கள்.

இறுதியாக இச்சமுதாயத்துக்கு வந்த இறுதி நபி முஹம்மத் (ஸல்) அவர்களும் அவ்வாறே அப்பணியை செய்து முடித்தார்கள். அதனையிட்டு அல்லாஹ் பின்வரு மாறு கூறுகின்றான். ***(எனவே) நீர் கூறுவீராக! எனக்கு வஹி அறிவிக்கப்படுவதெல்லாம், உங்களுடைய (வணக்கத்திற்குரிய) நாயன் ஒரே நாயன் என்று தான், ஆகவே நீங்கள் (அவனுக்கு) முற்றிலும் வழிப்பட்டு (முஸ்லிம்களாக) நடப்பீர்களா? (21.108).*** மேலும் கூறுகின்றான். ***(நபியே) நீர் கூறுவீராக! அல்லாஹ் நாடியதைத் தவிர, எனக்கே எவ்வித நன்மை(யைச் செய்வதற்)கும், தீமை(யைத் தடுத்துக் கொள்வதற்)கும், நான் சக்தி பெறமாட்டேன். மறைவானவற்றை நான் அறிந்தவனாக இருந்திருந்தால், நன்மைக ளையே அதிகமாகத் தேடிக் கொண்டிருப்பேன். தீமை என்னைத் தொட்டிருக்காது. நான் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவனும், விசு வாசங் கொண்ட சமுதாயத்தினருக்கு நன்மாராயங் கூறுபவனு மேயன்றி வேறில்லை (7.188).*** மேலும் கூறுகின்றான். ***(நபியே) நீர் கூறுவீராக! நிச்சயமாக நான் உங்களைப் போன்ற ஒரு மனி தன் தான், நிச்சயமாக உங்களுடைய (வணக்கத்திற்குரிய) நாயன், ஒரே நாயன் தான் என்று எனக்கு வஹீ மூலம் அறி விக்கப்படுகிறது. ஆகவே எவர் தன் இரட்சகனை சந்திக்க ஆதரவு***

***வைக்கிறாரோ, அவர் நற்கருமங்களைச் செய்யவும், தன் இரட்சக னின் வணக்கத்தில் அவர் எவரையும் இணையாக்க வேண் டாம் (18. 110).***

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***கிறிஸ் தவர்கள் மர்யமுடைய மகன் ஈசாவை உயர்த்தியது போன்று, நீங் கள் என்னை உயர்த்திவிடாதீர்கள். என்னை நீங்கள் அல்லாஹ் வின் அடிமையென்றும், அவனது தூதர் என்றுமே கூறுங்கள் (புகாரி,முஸ்லிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***என்னைக் கொண்டு அபயம் தேடாதீர்கள். அல்லாஹ்வைக் கொண்டே அபயம் தேடுங் கள் (தபறானி).*** மேலும் கூறுகின்றார்கள். ***நீ ஒரு விடயத்தைக் கேட்டால், அல்லாஹ்விடம் கேட்டுக் கொள். நீ உதவி கோரினா லும், அல்லாஹ்விடமே உதவி கோரிக்கொள் (திர்மிதி).***

மேலும் கூறுகின்றார்கள். ***இறைவா! எனது கப்றை வணங்கும் ஓர் விக்ரகமாக ஆக்கிவிடாதே எனக் கூறிவிட்டு, நபிமார்களின் கப்றுகளை தமது வணக்கஸ்தலங்கலாக அமைத்துக் கொண்டவர் கள் மீது அல்லாஹ்வின் கோபம் கடுமையாகி விட்டது (முவத்தஃ).*** மேலும் கூறுகின்றார்கள். ***நபிமார்களின் கப்றுகளை வணக்கஸ் தலங்களாக எடுத்துக் கொண்ட யூத, கிறிஸ்தவர்கள் மீது அல்லாஹ் வின் சாபம் உண்டாவதாக (புகாரி,முஸ்லிம்).*** எல்லாம் வல்ல அல்லாஹ் தனது அடியாரும், தூதருமான முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது சாந்தியும் கருணையும் பொழி வானாக!.

## எதிர்ப்பை முறியடித்தல்.

சில வழிகேடர்கள் செய்து வரும் பித்அத்துக்கள் சம் பந்தப்பட்ட சில கேள்விகளுக்குரிய பதில்களை இங்கே நாம் முன்வைக்க ஆசைப்படுகின்றோம். இவைகளுக்கு இப்னு தைமிய்யா அவர்கள் பொதுவானதோர் பதிலை கூறி யிருக்கின்றார்கள். அதாவது அல்லாஹ் கூறுகின்றான். ***அவன் எத்தகையவன் என்றால், இவ்வேதத்தை, அவன் உம்மீது***

*இறக்கி வைத்தான். இதில் தெளிவான கருத்துக்களுடைய வசனங்களும் இருக்கின்றன. அவைதான் இவ்வேதத்தின் அடிப்படையாகும். மற்றவை பல பொருள்களைக் கொண்டவையாகும். ஆகவே எவர்களுடைய இதயங்களில் சறுகுதல் இருக்கின்றதோ, அத்தகையோர் அதில் குழப்பத்தை உண்டு பண்ணக்கருதி அதில் பல பொருள்கள் கொண்டவைகளையே தேடிப்பின்பற்றுவார்கள் (3.7).* மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். *யாராவது பல பொருள்கள் கொண்ட வசனங்களை பின்பற்றுகிறவர்களை பெற்றுக் கொண்டால், அவர்களைப்பற்றித் தான், அல்லாஹ் குறிப்பிட்டுக் கூறியிருக்கின்றான். எனவே அவர்களைப் பயந்து கொள்ளுங்கள் (ஹதீஸ்).*

அதற்குதாரணமாக: அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்கும் சிலர், *(விசுவாசிகளே!) அறிந்து கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ்வின் நேசர்கள், அவர்களுக்கு யாதொரு பயமும் இல்லை. அவர்கள் கவலையும் அடையமாட்டார்கள் (10.62).* எனும் இறை வசனத்தை ஆதாரமாகக் கொண்டு, நபிமார்களுக்கு, அல்லாஹ்வின் நல்லடியார்களுக்கு அல்லாஹ்விடத்தில் கண்ணியம் இருக்கின்றது. எனவே அவர்களிடம் சிபாரிசு செய்யுமாறு வேண்டலாம் எனக் கூறுகின்றனர்.

அவர்களுக்கு விடையாக நாம் கூறுவது யாதெனில். அன்றைய மக்காவாசிகளை அல்லாஹ் காபிர் என்று கூறியதற்குரிய முக்கிய காரணமே, அவர்கள் மலக்குகள், நபிமார்கள் போன்றோரை அல்லாஹ்வுடன் இணைத்து, உதவியாளர்களாக எடுத்துக் கொண்டார்கள் என்பதனாலாகும். அதனை பின்வரும் திருவசனத்தின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது. அல்லாஹ் கூறுகின்றான். *இவர்கள் அல்லாஹ்விடத்தில், எங்களுக்கு பரிந்துரையாளர்கள் என்றும் அவர்கள் கூறுகின்றனர் (10.18).* ஆக இதனால் தான், இஸ்லாம் அவர்களை முஷ்ரிகீன்கள் எனக்கூறி சட்டம் வகுத்தது. இதில் மார்க்க அறிஞர்களுக்கு மத்தியில் எவ்வித கருத்து வேறுபாடும் கிடையாது.

அவைகளை விரிவாகக் கூறுவதென்றால். பின்வருமாறு கூறலாம்.

- அல்லாஹ் தான், இவ்வுலகில் படைப்புகளைப் படைத்து, உணவளித்து, இன்பம், துன்பம், போன்றவைகளை நிர்ணயிக்கின்றான் என்பதனையும், நாம் வணங்கும் சிலைகள், அவைகளை செய்ய சக்தியற்றது என்பதனையும் ஏற்றுக் கொள்கின்றோம். என்றாலும் அல்லாஹ் கூறுகின்றான். ***எங்களை அவர்கள் நெருக்கத்தால் அல்லாஹ்வுக்கு சமீபமாக்கி வைப்பார்கள் என்பதற்காகவேயன்றி அவர்களை நாங்கள் வணங்கவில்லை (39. 3).*** மேலும் கூறுகின்றான். ***இவர்கள் அல்லாஹ்விடத்தில் எங்களுக்கு பரிந்துரையாளர்கள் என்றும், அவர்கள் கூறுகின்றனர் (10. 18).*** எனவே மேற்கூறப்பட்ட திருவசனங்களுக்கேற்ப அல்லாஹ்விடத்தில் அவர்களுக்கு கண்ணியம் இருக்கின்றதென்பது தெளிவாகின்றது. ஆதலால் தான், எம்மை அவர்கள் அல்லாஹ்விடம் சமீபமாக்கி வைப்பார்கள் எனும் நோக்கில், நாம் அல்லாஹ்வுடன் இணைத்து அவர்களையும் வணங்கினோம் எனக் கூறிய கூட்டத்தினருக்கெதிராகத் தான், நபி (ஸல்) அவர்கள் போர் தொடுத்தார்கள்.
- இறை நிராகரிப்பாளர்களில் சிலர் நல்லடியார்களையும், விக்ரகங்களையும், வணங்கி வழிப்படுகின்றார்கள். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***எவர்களை (இணை வைத்துக் கொண்டிருப்போரான) அவர்கள் அழைக்கிறார்களோ, அத்தகையோர், தங்கள் இரட்சகனின் பால் (நற்செயல்கள் செய்வது கொண்டு) அவர்களில் யார் மிக்க நெருக்கமானவர்கள் என்று நெருக்கத்தைத் தேடுகிறார்கள் (17. 57).*** மேலும் ஈசா நபியையும், அவரது

தாயாரையும் வணங்குபவர்களும் இருக்கின்றனர். அதனைப்பற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். *மர்யமுடைய மகன் மஸீஹ் ஒரு தூதரேயன்றி அல்லாஹ்வோ, அல்லாஹ்வுடைய குமாரரோ) இல்லை. இவருக்கு முன்னரும் (இவரைப் போல்) தூதர்கள் பலர் (வந்து) சென்று விட்டனர். அவருடைய தாயும் அல்லாஹ் அல்ல. அவர்மிக்க) உண்மையானவர். இவ்விருவரும் (மற்ற மனிதர்களைப் போல) உணவு உட்கொண்டே (வாழ்ந்து) வந்தனர். ஆகவே இவ்விருவரும் எவ்வாறு வணக்கத்திற்குரியவர்களாக ஆவார்கள்?. (இதனை) பல அத்தாட்சிகளைக் கொண்டு அவர்களுக்கு நாம் எவ்வாறு தெளிவாக்கினோம் என்பதை, (நபியே) நீர் கவனிப்பீராக!. பின்னர் (உண்மையிலிருந்து) அவர்கள் எவ்வாறு திசை திருப்பப்படுகிறார்கள் என்பதையும் நீர் கவனிப்பீராக!(5.75).* மேலும் கூறுகின்றான். *(மலக்குகளை வணங்கி வந்த) அவர்கள் அனைவரையும், அவன் (அல்லாஹ்) ஒன்று திரட்டும் நாளை (நினைவு கூறுங்கள்) பின்னர் மலக்குகளிடம், இவர்கள் தானா உங்களை வணங்கிக் கொண்டிருந்தவர்கள்? என்று அவன் கேட்பான். அ(தற்க)வர்கள் (எங்கள் இரட்சகனே!) நீ மிகப்பரிசுத்தமானவன். அவர்களன்றி நீதான் எங்கள் பாதுகாவலன் என்று கூறுவார்கள் (34.40-41).* எனவே மேற்கூறப்பட்டவை மூலம் நல்லடியார்கள், விக்ரகங்கள் போன்றவற்றை வணங்கி வந்தவர்களை அல்லாஹ் காபிர் என்று கூறியதுடன், நபி (ஸல்) அவர்களும், அவர்களுக்கெதிராக போர் தொடுத்திருக்கின்றார்கள் என்பது தெளிவாகின்றது.

- அடியார்களாகிய நாம் நமது வணக்கங்கள் அனைத்தையும் தூய்மையான முறையில், அல்

லாஹ்வுக்கே செய்ய வேண்டும். மாற்றமாக அல்லாஹ் அல்லாதவருக்கு அறுத்துப் பலியிட்டு, அவர்களிடம் பிரார்த்தித்து, அல்லாஹ்வால் மாத்திரமே நிறைவேற்றி வைக்கக் கூடிய விடயங்களை அவர்களிடம் ஒப்பித்துக் கொண்டிருந்தோமேயானால், அல்லாஹ்வுக்கு இணை கற்பித்து, அவன் அல்லாதவனை வணங்கியவனாக ஆகிவிடுகின்றோம். எனவே உன்னிடத்தில் அவர்களுக்குரிய கண்ணியத்தின் பொருட்டு தான், அவர்களை உதவிக்காக எடுத்து கொண்டோமென மறுமையில் அல்லாஹ்விடம் காரணம் கூறிய போதிலும், ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. ஏனெனில் அன்றைய அறியாமைக் கால மக்கள் கூட மேற்கூறப்பட்ட வணக்கங்களை, நாம் நல்லடியார்களுக்கும், சிலைகளுக்கும் செய்வது, அவர்களது உதவியை பெற்றுக் கொள்ளத்தான் எனக் கூறிக்கொண்டிருந்தனர் அவ்வாறு கூறியும் கூட அவர்கள் தண்டிக்கப் பட்டார்கள்.

- நபி (ஸல்) அவர்களுக்கு மறுமையில் சிபாரிசு செய்யக் கூடிய உரிமை இருக்கின்றது என்பது உண்மை. என்றாலும் அவ்வுரிமையை அல்லாஹ் விடம், கேட்டுத் தான் பெற்றுக் கொள்வதுடன், அவனிடம் மாத்திரம் தான் சிபாரிசு செய்ய வேண்டும் என்பதனையும் தெளிவுபடுத்தியிருக்கின்றான். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நபியே! நீர் கூறுவீராக! பரிந்துரைகள் யாவும் அல்லாஹ்வுக்கே உரியதாகும் (39. 44).*** மேலும் அவ்வாறு சிபாரிசு செய்வதற்கு அல்லாஹ்வுடைய அனுமதி இருக்க வேண்டும் என்ற நிபந்தனையையும் தெளிவுபடுத்தியிருக்கின்றான். அல்லாஹ் கூறுகின்றான். ***(நபியே) நீர் கூறுவீராக!***

*அல்லாஹ்வையன்றி நீங்கள் கடவுள்களாகத் தவறாக) எண்ணிக் கொண்டீர்களே, அவர்களை நீங்கள் அழைத்துப் பாருங்கள், வானங்களிலோ, பூமியிலோ அவர்கள் ஓர் அணுவளவையும் சொந்தமாக்கிக் கொள்ள மாட்டார்கள். அவ்விரண்டிலும் அவர்களுக்கு எத்தகைய கூட்டுமில்லை. (இதில்) அவனுக்கு உதவியாளரும், அவர்களில் யாருமில்லை. இன்னும் யாருக்கு அவன் அனுமதி அளித்தானோ, அவருக்குத் தவிர அவனிடத்தில் பரிந்துரை பயனளிக்காது (34. 22–23).* எனவே மேற்கூறப்பட்ட திருவசனத்தின் பிரகாரம் இணை கற்பிப்பவர்கள் செய்து வரும் செயல்கள் அனைத்தும் தனக்குரியதென்றும், அதில் அவர்களுக்கு எப்பங்கும் இல்லை என்றும் தெளிவுபடுத்தியிருக்கின்றான். ஆனால் சிபாரிசை பொறுத்தவரையில், அவன் யாருக்கு அனுமதியளிக்கின்றானோ, அவர்களுக்கு மாத்திரமே பிரயோஜனமளிக்கும் என்பதனை பின்வரும் வசனத்தில் தெளிவு படுத்துகின்றான். *மேலும் அவன் பொருந்திக் கொண்டவரைத் தவிர, (மற்றெவருக்கும்) இவர்கள் பரிந்துரை செய்யவுமாட்டார்கள் (21. 28).* ஆனால் இணை கற்பிப்பவர்கள் கூறும் சிபாரிசு, மறுமையில் உள்ளதல்ல. நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். *மறுமையில் நபி (ஸல்) அவர்கள் வந்து, அல்லாஹ்வுக்கு சுஜூத் செய்து அவனைப் புகழ்வார்கள். ஆனால் சிபாரிசு செய்ய மாட்டார்கள். பின்பு அவர்களைப் பார்த்து, ஏ முஹம்மதே! உனது தலையை உயர்த்தி, நீ பேசு! செவிசாய்க்கப்படும். உனது தேவையைக் கேள்! கொடுக்கப்படும். சிபாரிசு செய்! ஏற்றுக் கொள்ளப் படும் எனக் கூறப்படும் (புகாரி,முஸ்லிம்).* மேலும் *அபூஹுரைரா (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடம்,*

*மனிதர்களில் யார் உமது பரிந்துரைக்கு தகுதியானவர் என வினவிய போது, யார் லாஇலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவை, உரிய முறையில் உள்ளத்தில் பதித்து மொழிகின்றாரோ அவர் தான், என பதிலளித்தார்கள் (புகாரி,அஹ்மத்,நஸயீ).* மேலும் கூறுகின்றார்கள். ***ஒவ்வொரு நபிக்கும் விடையளிக்கப்படக் கூடிய ஒரு பிரார்த்தனை கொடுக்கப்பட்டிருந்தது. அனைத்து நபிமார்களும் அவசரப்பட்டு அதை உலகிலே கேட்டு விட்டார்கள். நானோ எனது சமுதாயத்துக்கு மறுமையில் சிபாரிசு செய்வதற்காக அதனை மறுமை நாள் வரை பிற்படுத்தி வைத்திருக்கின்றேன். எனவே அல்லாஹ் நாடினால், யாரெல்லாம் இணை வைக்காமல் மரணிக்கின்றாரோ, அவர்கள் அனைவரும் அதனை பெற்றுக் கொள்வார்கள் (முஸ்லிம்).*** எனவே மேற்கூறப்பட்ட நபி வாக்கின் மூலம் இணைகற்பிப்போர் எண்ணிக் கொண்டிருப்பதற்கு மாற்றமாக, எமக்கு நபியவர்களின் சிபாரிசு கிடைக்க வேண்டுமென்றிருந்தால், நம் வணக்கங்கள் அனைத்துக்கும் அல்லாஹ்வே பொருத்தமானவன் எனக் கூறி, அவனுக்கே செய்தால் தான், நமக்கு சிபாரிசு செய்வதற்குரிய முறையில், அல்லாஹ் சிபாரிசு செய்பவருக்கு அனுமதியளிப்பான் என்பதனை தெளிவுபடுத்துகின்றது.

- தன்னையும், தனது குழந்தைகளையும், தனது பெற்றோரையும், அனைத்து மனிதர்களையும் விட நபி (ஸல்) அவர்களை நாம் அதிகமாக நேசிக்க வேண்டும் என்பது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கட்டாயக் கடமையாகும். அதனை யிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***உங்களில் எவரும், நான் உங்களையும்,***

*உங்கள் குழந்தைகளையும், உங்கள் பெற்றோரையும், ஏனைய அனைத்து மனிதர்களையும் விட, உங்களிடம் உகப்புமிக்கவனாக ஆகும் வரை, உண்மையான விசுவாசியாக மாட்டீர்கள் (புகாரி,முஸ்லிம்).* மேலும் ஒரு *முறை உமர் (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களைப் பார்த்து, யாரஸூலல்லாஹ் நீங்கள் என்னைத் தவிர மற்றைய அனைத்தையும் விடவும், எனக்கு மிகவும் விருப்பமானவர் எனக்கூறிய போது, அதற்கவர்கள் எனது உயிர் எவன் கை வசம் இருக்கின்றதோ, அவன் மீது சத்தியமாக. உன்னை விடவும், நான் உன்னிடத்தில் விருப்பத்துக்குரியவனாக இருக்க வேண்டும் என்றார்கள். பின் உமர் (ரலி) அவர்கள், தற்போது நீங்கள் என்னை விடவும், எனக்கு விருப்பமானவர்களாக இருக்கின்றீர்கள் என்ற போது, அதற்கு நபியவர்கள், தற்போது தான் நீ உமர் என்றார்கள் (புகாரி).* இவ்வாறு நபியவர்களின் மீது, உகப்பு வைப்பதின் மூலம் தான், நாம் அவர்களை பின்பற்றவும், மற்றோரது சொல்லை விட, அவர்களின் சொல்லை முற்படுத்தவும் வழிவகுக்கின்றது. அல்லாஹ் கூறுகின்றான். *அல்லாஹ்வையும் (அவனுடைய) தூதரையும், நாங்கள் விசுவாசித்திருக்கின்றோம். (அவர்களின் கட்டளைகளுக்கு) நாங்கள் கீழ்படிகிறோம் என்றும், (நபியே இந்த முனாபிக்குகள்)கூறுகின்றனர். பின்னர் அவர்களில் ஒரு பிரிவினர், அதற்குப் பிறகு புறக்கணித்து விடுகின்றனர். ஆகவே இவர்கள் (உண்மையான) விசுவாசிகள் அல்லர் (24.47).* மேலும் நபி (ஸல்) அவர்களை விரும்புவது, அல்லாஹ்வை விரும்புவதற்கு சமமானதாகும். மேலும் உகப்பு என்பது இரு வகைப்படும். 1)மார்க்கமாக்கப்பட்டது. 2)மார்

க்கமாக்கப்படாதது. மார்க்கமாக்கப்பட்டதெனும் போது, நபி (ஸல்)அவர்களையும், உண்மையான விசுவாசிகளையும், அல்லாஹ்வுக்காக விரும்பு வதாகும். மார்க்கமாக்கப்படாததெனும் போது, அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய பிரார்த் தனை போன்ற வணக்கங்களை, சிலை மற்றும் நபிமார்கள், மலக்குமார்கள், நல்லடியார்கள் போன்றோருக்கு செய்யும் வகையில் அவர்களை விரும்புவதாகும். அதனையிட்டு அல்லாஹ் பின் வருமாறு கூறுகின்றான். ***மனிதர்களில் அல்லாஹ் வையன்றி, அவனுக்கு இணையாளர்களை (சமமான வர்களாக) ஆக்கிக் கொண்டு, அல்லாஹ்வை நேசிப்பது போன்று, அவர்களை நேசிப்பவர்களும் இருக்கின்றனர். (ஆனால்) விசுவாசிகளோ, அல்லாஹ்வை நேசிப்பதில் மிகக் கடினமானவர்கள் (2.165).*** மேலும் அவ்வாறு செய்பவர்களுக்கு அல்லாஹ் நரகை கூலியாக கொடுப்பதாக எச்சரித்திருக்கின்றான். அதனை யிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***அவர்கள் நரக நெருப்பிலிருந்து வெளியேறுபவர்களும் அல்லர் (2.167).*** எனவே உண்மையான விசுவாசி உலகிலுள்ள அனைத்து படைப்பினங்களையும் விட, நபி (ஸல்) அவர்களையே அதிகம் விரும் பக் கூடியவனாக இருப்பான். அதற்கு சான்றாக அவன் குர்ஆனையும், சுன்னாவையும் பின்பற்றிக் கொண்டிருப்பான். ஆனால் அவ்வாறின்றி கப் றுகளிலே அடக்கப்பட்டிருப்பவர்களிடத்தில், அல் லது மறைந்திருப்பவர்களிடத்தில், அல்லது உயிருடன் இருப்பவர்களிடத்தில் சென்று, அவர் களால் நிறைவேற்றி வைக்கமுடியாத சில தேவைகளை கேட்பவன் அல்லாஹ்வையோ, அவனது தூதரையோ நேசிக்கவில்லை என்ப தும்,அல்குர்ஆனுக்கும், சுன்னாவுக்கும் கொடுக்க

வேண்டிய கண்ணியத்தை கொடுக்கவில்லையென்பதும் புலனாகின்றது. ஆக உண்மையிலே உகப்பு வைக்கப்பட வேண்டியவன் எப்போதும், படைத்தல், உணவளித்தல், நேர்வழிகாட்டல், நன்மையளித்தல், தீங்கிழைத்தல், போன்றவைகளை தன்னகத்தே கொண்ட சக்திகளின் மூலம், நிறை வேற்றி வைக்கக் கூடியவனாக இருக்க வேண்டும். அவ்வாறு செய்வது அல்லாஹ்வால் மாத்திரமே முடியுமான காரியமென்பதால், நாம் அவனை மாத்திரமே வணங்கி ஓரிறைக்கடவுளாக ஏற்றுக் கொள்ள வேண்டும்.

- நபி (ஸல்) அவர்களிடமும், ஏனெயோரிடமும், வஸீலா, மற்றும் சிபாரிசு செய்ய வேண்டுவது பல வகைப்படும். அவைகளில் சிலதைப் பார்ப்போம்.

1. பிரார்த்திப்பவன், ஒருவர் மீது சத்தியம் செய்து, அவனது பொருட்டால் பிரார்த்தித்தல். இவ்வாறு செய்வது இரு காரணங்களுக்காக தடுக்கப்பட்டுள்ளது. 1)அவ்வாறு சத்தியம் செய்பவன் அல்லாஹ் அல்லாதவனைக் கொண்டு சத்தியம் செய்கின்றான். அல்லாஹ் அல்லாதவரைக் கொண்டு சத்தியம் செய்வது கூடாது என்பதனை பின்வரும் ஹதீஸ் விளக்கிக் கொண்டிருக்கின்றது. நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***யார் அல்லாஹ் அல்லாதவைகளைக் கொண்டு சத்தியம் செய்கின்றாரோ, அவர் காபிராக, இணை கற்பிப்பவராக ஆகிவிடுகின்றார் (திர்மிதி, ஹாகிம்).*** 2)அல்லாஹ்வுக்குச் சொந்தமான சில உரிமைகளில், மனிதனையும் கூட்டிணைக்கின்றான். அல்லாஹ் கூறுகின்றான். ***விசுவாசிகளுக்கு உதவி செய்வதும், நம் மீது கடமையாக***

***இருந்தது (30.47).*** மேலும் அபூஹனிபா இமாம் அவர்களும், அவரது இரு மாணவர்களும் இவர் மீது சத்தியமாக, இவரின் பொருட்டால், நபியின், ரஸூலின், க. :பாவின் பொருட்டால் எனக் கூறி பிரார்த்திப்பது மக்ரூஹாகும் எனக் கூறியுள்ளார்கள்.

2. பிரார்த்திப்பவன், யா அல்லாஹ் இவருக்கு உன்னிடத்திலிருக்கும் கண்ணியத்தால் எனது தேவையை நிறைவேற்றுவாயாக என பிரார்த்தித்தல். இவ்வாறு பிரார்த்திக்கும் போது அல்லாஹ்வுக்குரிய உரிமைகளில், அவனால் படைக்கப்பட்ட சாதாரண மனிதனையும் கூட்டிணைப்பதால், இதுவும் தடுக்கப்பட்டுள்ளது. மேலும் அவ்வாறு அவன் பிரார்த்திக்கும் போது, அவனது பிரார்த்தனைக்கு விடையளிக்கப்பட்டால், அவருடைய பொருட்டினால் தான், விடையளிக்கப்பட்டிருக்கின்றது என்ற கருத்தல்ல. மாற்றமாக அல்லாஹ் தான் விரும்பியோருக்கு நிறைவேற்றிக் கொடுத்து அதன் மூலம் அவனை சோதிக்கின்றான். அல்லாஹ் கூறுகின்றான். ***(ஆகவே விசுவாசிகளே) உங்கள் இரட்சகனை மிக்க பணிவாகவும், (தாழ்ந்த குரலில்) மெதுவாகவும் (உங்களுக்கு வேண்டியவைகளைக் கோரிப் பிரார்த்தனை செய்து) நீங்கள் அழையுங்கள். நிச்சயமாக அவன் வரம்பு மீறுவோரை நேசிக்க மாட்டான் (7.55).***

3. பிரார்த்திப்பவன், அல்லாஹ் அல்லாத அவனால் படைக்கப்பட்ட ஒருவனைக் கொண்டு அல்லாஹ்விடம் பிரார்த்தித்தல். இவ்வாறு பிரார்த்திப்பதற்கும், இதற்கு முன்னால் கூறப்பட்ட இரு வகைகளுக்கும் இஸ்லாத்திலோ, அல்லது நபித்தோழர்கள், தாபியீன்கள், இமாம்கள் போன்றோர் அனுமதித்ததாகவோ, எவ்வித ஆதாரமும் பெற்

றுக் கொள்ளப்பட வில்லை. மாற்றமாக இவ்வா றானவைகளை அறிவீனர்களும், சில சிந்தனை வாதிகளும், தரிக்காக்களை பின்பற்றுபவர்களும் தான், செய்து வருகின்றார்கள். எனவே மேற் கூறப்பட்ட முறையில் பிரார்த்திப்பவன், இஸ் லாத்தில் அனுமதிக்கப்படாத பித்அத்துக்க ளைச் செய்தவனாகக் கருதப்படுகின்றான். மேலும் பிரார்த்தனை வணக்கங்களிலே மிகவும் சிறந்ததோர் வணக்கமாகும். எனவே அவ் வணக்கத்தை எவ்வாறு செய்ய வேண்டும் என இஸ்லாம் கற்றுத் தந்திருக்கின்றதோ, அதன் பிரகாரம் தான் செய்ய வேண்டும்.

4. பிரார்த்திப்பவன், யா அல்லாஹ் உன்னிடம் பிரார்த்திப்பவர்களுக்கு நீ அளிக்கும் விடையின் பொருட்டால், எனது தேவையை நிறை வேற்று வாயாக எனப் பிரார்த்தித்தல். இவ்வாறு பிரார்த் திப்பது அல்லாஹ்வால் படைக்கப்பட்டவர்க ளைக் கொண்டு, வஸீலா தேடியதாக கருதப்பட மாட்டாது. மாற்றமாக அல்லாஹ்வின் செயற்பாடு களைக் கொண்டு பிரார்த்தித்தவனாகவே கரு தப்படுவான். இவ்வாறு பிரார்த்திப்பதனை இஸ் லாமும் அனுமதித்திருக்கின்றது. நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***இறைவா! உன்னிடம் பிரார்த்திப்பவர்களுக்கு நீ அளிக்கும் விடையின் பொருட்டாலும், நான் பள்ளிக்கு நடந்து செல்வதற்கு கிடைக்கும் நன்மையின் பொருட்டாலும் உன்னிடம் கேட்கின்றேன் (அஹ்மத்).*** எனவே கேட்பவருக்கு கொடுக்க வேண்டும் என்பது, அல்லாஹ் தன் மீது கடமையாக்கிக் கொண்ட ஒரு விடயமா கும். எனவே அவன் தான், அவர்களது பிரார்த் தனைக்கு விடையளித்து, அவனை வணங்குப வர்களுக்கு நன்மையளிக்கின்றான். என்றாலும்

சிலர். மேற்கூறப்பட்ட இரண்டாவது பகுதிக்கும், நான்காவது பகுதிக்குமிடையிலுள்ள வித்தியாசம் யாது? என வினவுவார்கள். அதற்குரிய விடையை பின்வருமாறு கூறலாம். அதாவது, நான்காவது பகுதியின் கருத்தாவது, யா அல்லாஹ் நீ கேட்போருக்கு கொடுப்பதாக வாக்குறுதியளித்திருக்கின்றாய், எனவே நானும் அவ்வாறு கேட்பவர்களிலுள்ளவன் தான், எனவே பிரார்த்தனைக்கும் விடையளிப்பாயாக! எனக் கூறுவதாகும். ஆனால் இரண்டாவது பகுதியின் கருத்தாவது, இம்மனிதர் உனது நல்லடியார்களிலுள்ளவர். எனவே அவரின் பொருட்டால் எனது பிரார்த்தனையை ஏற்றுக் கொள்வாயாக என கேட்பதைக் குறிக்கின்றது. அவ்வாறு அவருக்கு அல்லாஹ்விடத்தில் கண்ணியம் இருந்தாலும் கூட, அக்கண்ணியத்தை முன்னிட்டு இவனது தேவையை அல்லாஹ் நிறைவேற்றி வைக்க வேண்டிய அவசியமில்லை. ஏனெனில் அந்நல்லடியானுக்கு அல்லாஹ் கொடுத்த கண்ணியம், அவர்கள் இருவருக்குமிடையில் சம்பந்தப்பட்டதொன்றாகும். இவ்வாறு ஒருவன் பிரார்த்திப்பானேயானால், பிரார்த்தனையில் அவன் எல்லை மீறிவிட்டான் என்பதனையே குறிக்கின்றது.

5. பிரார்த்திப்பவன், யா அல்லாஹ் நான் உனது நபியையும், ஏனைய நபிமாரையும் உண்மைப்படுத்தி, பின்பற்றி வருவதின் பொருட்டாலும், அவர்கள் மீது நான் வைத்திருக்கும் அன்பின் பொருட்டாலும் எனது தேவையை நிறைவேற்றித் தருவாயாக! எனப் பிரார்த்தித்தல். இவ்வாறு தனது நற்கிரியைகளை முன் வைத்துப் பிரார்த்திப்பதில் எத்தவறும் கிடையாது. இதற்கு ஆதாரமாக குகையில் அடைபட்ட மூவர், தமது

நற்கிரியைகளை முன் வைத்து பிரார்த்தித்த சம்பவம் புகாரி, முஸ்லிம் போன்ற ஹதீஸ் கிரந்தங்களில் பதிவாகியுள்ளது.

6. நபி (ஸல்) அவர்கள் உயிருடனிருக்கும் போது, நபித்தோழர்கள், அவரிடம் சென்று தமக்காக பிரார்த்திக்கும்படி வேண்டி, அவ்வாறு அவர்கள் பிரார்த்திக்கும் போது, இவர்களும் ஆமீன் கூறு வார்கள். அதற்குதாரணமாக மழை தேடிப் பிரார்த்தித்த பிரார்த்தனையைக் கூறலாம். ஆனால் நபி (ஸல்) அவர்களின் மரணத்தின் பின், ***மழை தேடிப்பிரார்த்திக்கும் போது, உமர் (ரலி) அவர்கள் இறைவா! எங்களுக்கு வறட்சி ஏற்பட்டால், உமது நபியைக் கொண்டு வஸீலா தேடக் கூடியவர்க ளாக இருந்தோம். தற்போது அவரது சித்தப்பாவைக் கொண்டு வஸீலா தேடுகின்றோம், எனவே எமக்கு மழை பொழியச் செய்வாயாக எனக் கூறுவார்கள் (ஹதீஸ்).*** அதன் கருத்தாவது, அவர் உன்னை பிரார்த்திப் பதின் மூலம், அவரது பிரார்த்தனையை ஏற்று எமக்கு மழை பொழியச் செய்வாயாக என்பதா கும். மாற்றமாக இன்று சிலர் எண்ணிக் கொண் டிருப்பது போல், உமர் (ரலி) அவர்கள் அப் பாஸ் (ரலி) அவர்களைக் கொண்டோ, அல்லது அவர்களுக்கு அல்லாஹ்விடமிருக்கும் கண்ணி யத்தைக் கொண்டோ, பிரார்த்திக்கவில்லை. அவ்வாறு அவர்களது கண்ணியத்தைக் கொண்டு பிரார்த்திப்பதென்றிருந்தால், அவர் களை விட, நபியவர்களுக்கே அல்லாஹ்விடம் பெரும் மதிப்பு இருந்து கொண்டிருக்கின்றது. அதை வைத்தே பிரார்த்தித்திருப்பார்கள். ஆனால் அவ்வாறு பிரார்த்திப்பது, இஸ்லாத்தில் அனுமதிக்கப்படாததால், அவ்வாறு அவர்கள் பிரார்த்திக்கவில்லை.

7. இணை என்பது, விக்ரகங்கள், சிலைகள் போன் றவைகளை வணங்குவதை மட்டும் குறிக்காது. மாற்றமாக அல்லாஹ்வுக்கு செய்யப்பட வேண் டிய எவ்வணக்கமாயிருப்பினும், அவைகளில் ஒன்றை அவனால் படைக்கப்பட்ட நபியோ, நல் லடியானோ, எவனாக இருந்த போதிலும், அவர் களுக்கும் செய்தால், அது இணையாகவே கருதப்படுகின்றது என்பதனை. அல் குர்ஆனும், ஹதீஸ்களும் அறிவித்துக் கொண்டிருக்கின்றன.

8. யாராயினும், நபி (ஸல்) அவர்கள் கூறியதில், அல்லது குர்ஆனிலுள்ளவைகளில் சிலதை உண்மைப்படுத்துபவனாகவும், சிலதை பொய்ப் படுத்துபவனாகவும் இருந்தால், அவன் இஸ் லாத்தை விட்டும் வெளியேறிய காபிராவான். நபி (ஸல்) அவர்களது காலத்தில் ஒரு கூட்டத் தினர் தமக்கு ஹஜ் கடமையில்லை எனக் கூறிய போது, அல்லாஹ் அவர்களை பின்வரு மாறு கண்டிக்கின்றான். ***எவர்கள் மக்கா யாத்திரை செல்லச் சக்தியுடையவர்களாக இருக்கின்றார்களோ, அத்தகைய மனிதர்கள் மீது, அல்லாஹ்வுக்காக (அங்கு சென்று அவ்)வீட்டை ஹஜ்ஜு செய்வது கடமையா கும். எவரேனும் இதை நிராகரித்தால், அப்போது (அத னால் அல்லாஹ்வுக்கு ஒன்றும் குறைந்து விடுவதில்லை. ஏனென்றால்) நிச்சயமாக அல்லாஹ் அகிலத்தா(ர் அனைவ)ரை விட்டும் தேவையற்றவன் (3. 97).*** மேலும் யாராயினும், இஸ்லாத்திலுள்ள கடமைகளை ஏற்று, நபித்துவத்தை மாத்திரம் நிராகரித்தால், ஒருமித்த முடிவின்படி அவன் காபிராகி விடுகின் றான். அல்லாஹ் கூறுகின்றான். ***நிச்சயமாக அல் லாஹ்வையும், அவனுடைய தூதர்களையும் நிராகரித்து விட்டு, இன்னும் அல்லாஹ்வுக்கும் அவனுடைய***

***தூதர்களுக்கும் இடையில் பாகுபாடு செய்வதை நாடி, (தூதர்களில்) சிலரை நாம் விசுவாசிப்போம், இன்னும் சிலரை நாம் நிராகரிப்போம் எனவும் கூறி(நிராகரிப்பு, விசுவாசம் ஆகிய) இவற்றிற்கு மத்தியில் ஒரு பாதையை ஏற்படுத்தவும் நாடுகிறார்களே, அத்தகை யோர், அவர்கள் தான் உண்மையில் நிராகரிப்போரா வார். இன்னும் நிராகரிப்போருக்கு நாம் இழிவு தரும் வேதனையையே தயார்படுத்தியும் வைத்திருக்கின் றோம்(4.150–151).*** மேலும் குர்ஆன் இறக்கப்பட்ட காலத்தில் வாழ்ந்த முஷ்ரிகீன்கள், வணக்கத் துக்குரிய அல்லாஹ்வை நிராகரித்து, நபியை யும், அவர் மீது இறக்கப்பட்ட குர்ஆனையும் பொய்பித்து, அக்குர்ஆனை சூனியம் என்று கூறிய கூட்டத்தினருடன், அல்லாஹ்வை இறை வனாக ஏற்று, அவனது தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் என்றும், அவருக்கு இறக் கப்பட்ட குர்ஆனையும், நபித்துவத்தையும் உண் மைப்படுத்தி, தொழுது, நோன்பு நோற்று, நம் இஸ்லாமிய கடமையை சிறந்த முறையில் நிறைவேற்றி வரும் எங்களையும் எவ்வாறு ஒன்றுபடுத்திக் கூறுகின்றீர்கள் எனக் கூறுவ தற்கு அவர்களுக்கு எவ்வித அருகதையும் இல்லை. ஏனெனில் தொழுகை, நோன்பு, சகாத், ஹஜ் போன்றவைகளில் ஒன்றை நிராகரிப்ப வனே, காபிராகும் போது, இவைகளை விடவும் முக்கியக் கடமையான ஏகத்துவத்தை, அதுவும் அனைத்து நபிமார்களும் போதித்த அக்கட மையை நிராகரிப்பவன், அல்லது ஏக அல் லாஹ்வுக்கு செய்ய வேண்டிய வணக்கங்க ளில் ஒன்றை, அவனால் படைக்கப்பட்டவனுக்கு செய்யும் போது, ஏன் காபிராக மாட்டான்?. எனவே வணக்கங்களில் ஏதேனுமொன்றை அல்

லாஹ் அல்லாதவனுக்கு செய்யும் போது, அவன் இறை நிராகரிப்பாளனாகின்றான்.

9. யாராயினும், நபி அல்லாத ஒருவனை நபியுடைய ஸ்தானத்துக்கு உயர்த்தும் போது, அவன் லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸுலுல்லாஹ் என்ற கலிமாவைக் கூறிய முஸ்லிமாயிருந்து, தொழுகையை நிறைவேற்றி வந்தாலும் கூட, அவன் காபிராகி விடுகின்றான். எனவே, அன்று நபித்தோழர்கள், முஸைலமாவை நபியெனக் கூறிய ஹனீப் கூட்டத்தினருக்கு எதிராக போர் தொடுத்தது போன்று, இவ்வாறு கூறுபவர்களுக்கு எதிராகவும் போர் தொடுக்க இஸ்லாம் அனுமதித்திருக்கின்றது. எனவே சாதாரண மனிதனை நபியுடைய ஸ்தானத்துக்கு உயர்த்தியதற்கே இவ்வாறான தண்டனையை இஸ்லாம் வகுத்திருக்கின்றதென்றால், அம்மனிதனை அல்லாஹ்வின் ஸ்தானத்திற்கு உயர்த்தி, அவனுக்கு செய்யும் வணக்கங்களை இவனுக்குச் செய்வது, எவ்வளவு பெரிய குற்றமாகும் என்பதனை நாம் சற்று சிந்திக்க வேண்டும்.

10. இன்று அறியாமையின் காரணமாக சிலர்கள், தமது நோயாளிகளுக்கு நோய் நிவாரணி பெறக்கருதி, அவர்கள் தரிசித்து வரும் அவர்களது வலிமார்களின் கப்றிலுள்ள மண்ணை எடுத்துச் சென்று அதன் மூலம் வைத்தியம் செய்கின்றனர். இவ்வாறு செய்வது, அல்லாஹ் அல்லாத ஒன்றின் மூலம் நிவாரணி கிடைப்பதாகக் கருதுவதால், இஸ்லாம் அதனைத் தடை செய்துள்ளது. இச்செயலை அன்றைய கிறிஸ்தவர்களே செய்து வந்தார்கள். அவர்கள் அவ்வாறு செய்யும் போது, சில சந்தர்ப்பங்களில் நோயாளியின் நோய் நிவாரணமடைந்து சுகதே

கியாகும் போது, அவர்களும், அந்நோய் நிவாரணி பெறுவதற்கு அல்லாஹ்வே காரணம் என்பதனை அறியாதவர்களும், அம்மண்ணின் மூலமாக, அல்லது அதில் அடக்கப்பட்டிருக்கும் மனிதரின் பொருட்டினால் தான், நிவாரணம் கிடைத்ததாகக் கருதி, இப்படிப்பட்டவைகளி னால், நோய் நிவாரணி பெறலாம் எனக் கரு துகின்றார்கள். இவ்வாறு செய்வது இணையைச் சாரும், எனவே இவ்வாறான வைகளில் ஈடுபடக் கூடாதென அவர்களுக்குக் கூறப்பட்டால், நாம் அதனை நன் நோக்குடனேயே செய்கின்றோம் எனக் கூறி நழுவி விடுகின்றார்கள். எனவே நாம் அவர்களுக்குக் கூறுவது யாதெனில், நீங் கள் இவ்வாறு நன் நோக்குடன் செய்கின்றோம் எனக் கூறினாலும், நபி (ஸல்) அவர்களின் வழி முறைக்கு மாறானதாகும். ஏனெனில் அன்றைய முஷ்ரிகீன்களும், இவ்வாறான நன்நோக்குட னேயே தமது தெய்வங்களை வணங்கினரென, அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தனர். அத னையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின் றான். ***எங்களை அவர்கள் நெருக்கத்தால், அல்லாஹ் வுக்கு சமீபமாக்கி வைப்பார்கள் என்பதற்காகவே யன்றி, அவர்களை நாங்கள் வணங்கவில்லை (39.3).*** மேலும் கூறுகின்றான். ***இவர்கள் அல்லாஹ்விடத் தில் எங்களுக்கு பரிந்துரையாளர்கள் என்றும் அவர் கள் கூறுகின்றனர் (10.18).*** மேலும் கூறுகின்றான். ***(தம்) செயல்களால் மிகப்பெரிய நஷ்டவாளிகள் யார் என்பதை உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என்று (நபியே) நீர் கேட்பீராக! (அவர்கள்) எத்தகையோ ரென்றால் இவ்வுலக வாழ்க்கையில், அவர்களின் முயற்சி பயனற்று விட்டது. நிச்சயமாக அவர்களோ,***

***காரியங்களில் அழகானவற்றையே, தாங்கள் செய்வதாக எண்ணிக் கொள்கின்றனர் (18.103–104).*** மேலும் நோய் நிவாரணம் அல்லாஹ்விடமிருந்தே கிடைக்கின்றது. அதனையிட்டு அல்லாஹ் பின் வருமாறு கூறுகின்றான். ***நோய் நிவாரணி அல்லாஹ் விடமிருந்தே கிடைக்கின்றது. மேலும் நான் நோயுற்று விட்டால், அவனே என்னைக் குணப்படுத்துகின்றான் (26.80).*** எனவே நம்மைத் தொற்றுக் கொள்ளும் நோய்களுக்குரிய நிவாரணியை அல்லாஹ்விடமே கேட்டுப் பெற்றுக் கொள்வதுடன், அவன் ஆகுமாக்கியிருக்கும் மருந்துகளின் மூலமும் சிகிச்சை பெற்றுக் கொள்ளலாம்.

11. மூஸா (அலை) அவர்களின் கூட்டத்தினரான யூதர்கள், இஸ்லாத்தைக் கற்று, நற்கிரியைகளில் ஈடுபட்டிருந்ததோடு, அறியாமையின் காரணமாக, மூஸா (அலை) அவர்களைப் பார்த்து, ***(மூஸாவே! அவர்களுக்கு தெய்வங்கள் இருப்பதைப் போல், எங்களுக்கும் ஒரு தெய்வத்தை (நாங்கள் வணங்குவதற்கு) ஆக்கி வைப்பீராக! (7.138).*** எனக் கேட்டதைப் போன்று, இன்று படித்தவர்களும், படிக்காதவர்களும் சில இணைகளைச் செய்து வருகின்றார்கள். எனவே முஸ்லிமானவன் தன்னை இறைநிராகரிப்பின் பால், இட்டுச் செல் லும் சில வார்த்தைகளை அறியாமையின் காரணமாக பிரயோகித்து, அது அவனுக்கு தெரியப்படுத்தப்பட்டால், உடனே அதற்கு பாவமன்னிப்புக் கோருவதன் மூலம், அவன் காபிராகுவதை விட்டும் பாதுகாக்கப்படுகின்றான். என்றாலும் கடுமையான வார்த்தைகளை பிரயோகிப்பதன் மூலம் அவனைக் கண்டிக்க வேண்டும். எனவே மேற்கூறப்பட்டவைகளை அறிந்து, அதி

லிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

12. ***லாஇலாஹ இல்லல்லாஹ்*** என்ற கலிமாவை மொழிந்த ஒருவரை உஸாமா (ரலி) அவர்கள் கொலை செய்ததை, நபி (ஸல்) அவர்கள் நிராகரித்ததும், மனிதர்கள் ***லாஇலாஹ இல்லல்லாஹ்*** என்ற கலிமாவை கூறும் வரை, அவர்களுடன் போரிட பணிக்கப்பட்டுள்ளேன் என்ற நபி மொழியும், ***லாஇலாஹ இல்லல்லாஹ்*** என மொழிந்தவரை கொலை செய்யவோ, அவருக்கெதிராக போர் தொடுக்கவோ கூடாதென்பதையும், இஸ்லாத்திற்கெதிரான விடயங்களில் அவன் ஈடுபடும் போது, அவன் கூறிய அக்கலிமாவைப் பொருட்படுத்தாது, நபி (ஸல்) அவர்கள் யூதர்களுக்கெதிராகவும், நபித் தோழர்கள் ஹனீப் கூட்டத்தினருக்கெதிராகவும் போரிட்டது போன்று, போரிட்டு அவர்களைக் கொலை செய்ய வேண்டும். எனவே ***லாஇலாஹ இல்லல்லாஹ்*** என்ற கலிமா இஸ்லாத்திலுள்ள சில விடயங்களை நிராகரித்தவனுக்கே பிரயோஜனமளிக்காத போது, ஏகத்துவத்தை நிராகரித்து, அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய வணக்கங்களை, அவனால் படைக்கப்பட்டவனுக்கு செய்யும் போது, எவ்வாறு அக்கலிமா அவனுக்குப் பிரயோஜனமளிக்கும்.

13. நபி (ஸல்) அவர்களைக் கொண்டு மறுமையில் பாதுகாப்புத் தேட முடியும் என்ற ஆதாரத்தை வைத்து, மனிதர்களால் நிறைவேற்றி வைக்க முடியுமான விடயங்களில், அவர்களிடம் பாதுகாப்புத் தேடலாம். அதனை பின்வரும் வசனமும் எமக்குத் தெளிவுபடுத்துகின்றது. அல்லாஹ் கூறுகின்றான். ***அப்போது அவர் இனத்தைச் சேர்ந்தவன், அவருடைய பகைவனைச் சார்ந்தவனுக்***

*கெதிராக, உதவி செய்யுமாறு அவரிடத்தில் கோரினார் (28.15).* எனவே மேற்கூறப்பட்ட திருவசனம், கப்றுகளிலே அடக்கப்பட்டிருக்கும் நபிமார்களிடமோ, வலிமார்களிடமோ பாதுகாப்புத் தேடுவதற்குரிய ஆதாரமாகக் கொள்ள முடியாது. அவ்வாறு பாதுகாப்புத் தேடுவதை தடுத்து வந்திருக்கும் அதிகமான ஆதாரங்களை, நாம் முன்பு கூறியிருக்கின்றோம். மேலும் மறுமையில் நபி (ஸல்) அவர்களிடம் அபயம் தேடுவதும், அவர்கள் உயிருடனிருக்கும் நிலையிலாகும், எனவே அவ்வாறு உயிருடனிருப்பவர்களிடம் ஈருலகிலும், அவர்களால் நிறைவேற்றி வைக்க முடியுமான விடயங்களில் பாதுகாப்புக் கோரலாம். அதனடிப்படையில் முஸ்லிமானவன், தனக்கு தெரிந்த, நற்கிரியைகளில் ஈடுபடும் ஒருவரிடம் சென்று, தனக்காக அல்லாஹ்விடம் பிரார்த்திக்குமாறு வேண்டலாம். ஆக மேற்கூறப்பட்டவைகளின் பிரகாரம், உயிருடனிருப்பவர்களிடம்,அவர்களுக்கு நிறைவேற்றி வைக்க முடியுமான விடயங்களில் உதவி செய்யக் கோரலாம்.

14. தவ்ஹீத் என்பது இதயத்துடனும், நாவுடனும், செயலுடனும் தொடர்புற்றிருப்பது அவசியமாகும். ஒருவன் இம்மூன்றில் ஒன்றையாவது தவற விடும் பட்சத்தில், அவன் முஸ்லிமாகவிருக்க முடியாது. மேலும் அவன் தவ்ஹீதைப் பற்றி அறிந்து, அதன்படி செயல்படாமலிருந்தால், அல்லது அவனுக்கு அதனை செயல்படுத்த முடியாமைக்குரிய காரணங்கள் இருந்த போதிலும், ஷைத்தான், பிர்அவ்ன் போன்றோரைப் போன்ற காபிராவான். அல்லாஹ் கூறுகின்றான். *அவர்கள் அல்லாஹ்வுடைய வசனங்களுக்குப் பகரமாக, சொற்பக்கிரயத்தை வாங்கிக் கொண்டனர் (9.9).*

மேலும் கூறுகின்றான். ***அவர்கள் தங்கள் மக்களை (ச் சந்தேகமற) அறிவதைப் போல், அ(ந்த மக்காவின் திசையளவில், நீர் திரும்பி தொழுவீரென்ப)தை அறிவார்கள் (2.146).*** மேலும் தவ்ஹீதை வெளிக்காட்டி, உள்ளத்தால் அதனை நிராகரித்து வந்தால், அவன் அக்காபிரை விட மோசமான நயவஞ்சகனாவான். நபியவர்களின் காலத்தில், விளையாட்டுக்காகவும், கேளிக்கைக்காகவும் சில வார்த்தைகளை கூறிய சிலரை அல்லாஹ் காபிர் என வர்ணிக்கின்றான். அல்லாஹ் கூறுகின்றான். ***(நபியே அவர்களிடம்) அல்லாஹ்வையும், அவனது வசனங்களையும், அவனது தூதரையுமா நீங்கள் பரிகசித்துக் கொண்டிருந்தீர்கள் என்று நீர் கேட்பீராக!? நீங்கள் (செய்யும் பரிகாசத்திற்கு வீண் )புகழ் கூற வேண்டாம். உங்களின் விசுவாசத்திற்குப் பின்னர், திட்டமாக நீங்கள் (அதனை) நிராகரித்தே விட்டீர்கள் (9.65-66).*** ஆக விளையாட்டுக்காக கூறியவர்களுக்கே இந்த தண்டனை என்றால், தனது செல்வம், மதிப்பு போன்றவைகள் குறைந்து விடுமெனப் பயந்து, அவ்வாரான கேளிக்கைகளில் ஈடுபடுபவர்களின் நிலை என்னவாகும் என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும். எனவே இவ்வாறான பரிகசிப்பில் ஈடுபடுபவர்களில் உண்மையில் விசுவாசியாக இருந்து, அடுத்தவர்களின் வற்புறுத்தலின் பிரகாரம் நடந்து கொண்டவனுக்கே தவிர, எவ்வித மன்னிப்பும் வழங்கப்பட மாட்டாது. அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***எவர் தாம் விசுவாசங் கொண்ட பின்னர், அல்லாஹ்வை நிராகரித்து விடுகிறாரோ, (அவரின் மீது அல்லாஹ்வின் கோபம் உண்டு. ஆயினும்) எவரு***

***டைய உள்ளம் ஈமானைக் கொண்டு அமைதி பெற்றிருக்க (நிராகரிக்குமாறு) நிர்பந்திக்கப்பட் டாரோ அவரைத் தவிர, (அவர் மீது குற்றமில்லை) எனினும் எவர் நெஞ்சத்தை நிராகரிப்பைக் கொண்டு விரிவடையச் செய்து (அதை ஏற்றுக்) கொண்டாரோ, அவர்கள் மீது அல்லாஹ்விடமிருந்துள்ள கோபம் உண்டு. அவர்களுக்கு (மறுமையில்) மகத்தான வேத னையுமுண்டு. அது நிச்சயமாக அவர்கள் மறுமையை விட இவ்வுலக வாழ்க்கையையே நேசிக்கிறார்கள் (16.106–107).*** எனவே ஒரு மனிதனின் உள்ளம் தவிர்ந்த பேச்சு, செயல் போன்றவைகளையே ஒருவனால் நிர்ப்பந்திக்கலாம். ஆனால் உள்ளத் திலுள்ளவைகளை எவ்வகையிலும் நிர்பந்திக்க முடியாதென்பதை அல்லாஹ் பின்வருமாறு கூறு கின்றான். ***எவருடைய உள்ளம் ஈமானைக் கொண்டு அமைதி பெற்றிருக்க, (நிராகரிக்குமாறு) நிர் பந்திக்கப் பட்டாரோ அவரைத் தவிர (16.106).*** மேலும் தனது மார்க்கத்தை விட உலக விடயங்களை மேம் படுத்தும் போது தான், அவனுக்கு தண்டனை யும், இறை நிராகரிப்பாளன் என்ற சட்டமும் வழங்கப்படுகின்றதென்பதை அல்லாஹ் பின்வரு மாறு கூறுகின்றான். ***அது நிச்சயமாக அவர்கள் மறுமையை விட, இவ்வுலக வாழ்க்கையையே நேசிக்கி றார்கள் (16.107).***

## சிறிய இணைகள்.

சிறிய இணைகள் எனும் போது, அதனைப் பல வகைப்படுத்தலாம். அவைகளில் சிலதை இங்கே கவனிப்போம்.

## அல்லாஹ் அல்லாதவரைக் கொண்டு சத்தியம் செய்தல்.

அல்லாஹ் அல்லாதவர்களைக் கொண்டு சத்தியம் செய்வதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***யார் அல்லாஹ் அல்லாதவரைக் கொண்டு சத்தியம் செய்கின்றாரோ, அவர் காபிராக, அல்லது அல்லாஹ்வுக்கு இணை கற்பித்தவராக ஆகிவிட்டார் (திர்மிதி,ஹாகிம்).*** மேலும் அல்லாஹ் கூறுகின்றான். ***நீங்கள் அறிந்து கொண்டே இருக்கும் நிலையில், அல்லாஹ்வுக்கு இணைகளை ஆக்காதீர்கள் (2. 22).*** இவ்வசனத்திலுள்ள ***இணைகள்*** என்ற வாசகத்திற்கு, இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் விளக்கமளிக்கும் போது, ***மனிதர் களால் அறிந்து கொள்ள முடியாத விதத்தில், காரிருளில் கறுங் கற்களிலே ஊர்ந்து செல்லும் எறும்புகளையும் விட, மறைமுகமான இணையையே குறிக்கின்றதெனக் கூறிவிட்டு, அல்லாஹ்வின் மீதும், உனது ஜீவியத்தின் மீதும் சத்தியமாக, எனது ஜீவியத்தின் மீது சத்தியமாக, இந்த நாய் இல்லையென்றால் திருடன் வந்திருப்பான், தாரா வீட்டில் இல்லாதிருந்தால், திருடன் வந்திருப்பான், இன்னும் தனது நண்பனைப் பார்த்து, உனதும் அல்லாஹ்வினதும் பொருத் தத்தினால் தான் நடந்தது, மேலும் இன்னானும் அல்லாஹ்வும் இல் லாதிருந்தால் இவ்வாறு நடந்திருக்கும், இது போன்ற வார்த்தைக ளில், (இன்னான்) எனும் வாசகத்தைப் பிரயோகிக்காதே, அவ்வாறு பிரயோகிப்பது இணையின் பால் இட்டுச் செல்லும் என்றார்கள் (இப்னு அபீ ஹாதிம்).*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார் கள். ***நீ ஒரு விடயத்தைச் சொல்லும் போது, அதில் அல்லாஹ்வுடன் வேறொரு மனிதனையும் இணைத்துக் கொள்ளாதே, அவ்வாறு இணைத்துச் சொல்வது இணையாகும் (இப்னு அபீ ஹாதிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***நீங்கள் ஒரு விடயத்தை சொல்ல முற்படும் போது, அல்லாஹ்வும் இன்னாரும் விரும்பியதால் தான் நடந்ததென்று கூறாதீர்கள். மாற்றமாக அல்லாஹ் விரும்பி, பின்னர் நீங்களும் விரும்பியதால் தான் என்று கூறுங்கள் என்றார்கள் (அபூதாவுத்).***

மேலும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக் கின்றார்கள். ***ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வும், நீங்களும் விரும்பியதால் தான், இவ்விடயம் நடந்த தெனக் கூறினார். அதற்கு நபியவர்கள், நீ என்னை அல்லாஹ்வுக்கு இணையாக்கி விட்டாயா? என வினவிவிட்டு, அல்லாஹ் மாத்திரம் விரும்பியதால் தான் என்றார்கள் (நஸயீ).*** மேலும் கூறுகின்றார் கள். ***யார் அமானிதத்தைக் கொண்டு சத்தியம் செய்கின்றாரோ, அவர் எம்மிலுள்ளவரல்ல (அபூதாவுத்).*** மேலும் கூறுகின்றார்கள். ***யாராயினும் சத்தியம் செய்வதென்றால், அல்லாஹ்வைக் கொண்டு சத்தியம் செய்யுங்கள். அல்லது வாய்மூடியிருங்கள் (ஹதீஸ்).*** மேலும் நபிமார், க..பா, கண்ணியம், போன்றவைகளைக் கொண்டு சத்தியம் செய்வதும், அல்லாஹ் அல்லாதவர்க ளைக் கொண்டு சத்தியம் செய்து இணை கற்பித்தவரா கவே கருதப்படும். எனவே நாம் அனைவரும் அல்லாஹ் வைக் கொண்டே, சத்தியம் செய்வதற்கு பழகிக் கொள்ள வேண்டும்.

**ஒரு செயலை முகஸ்துதிக்காகச் செய்தல்.** அதாவது ஒருவன் ஒரு செயலை செய்யும் போது, வெளிப்பார்வைக்கு அல் லாஹ்வுக்காகவும், உள்ளத்தால் தன்னை மனிதர்கள் புகழ வேண்டும் என்பதற்காகவும் செய்வதாகும். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***ஆகவே எவர் தன் இரட்சகனைச் சந்திக்க ஆதரவு வைக்கிறாரோ, அவர் நற்கருமங் களைச் செய்யவும். தன் இரட்சகனின் வணக்கத்தில் அவர் எவரை யும் இணையாக்க வேண்டாம் (18.110).*** மேலும் அல்லாஹ் கூறுவ தாக நபி (ஸல்) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***நான் இணை வைப்பவர்களின் இணையை விட்டும் தேவையற்றவன். யார் ஒரு நற்கிரியையை எனக்காகவும், என்னுடன் இணைத்து இன்னொரு வனுக்காகவும் செய்கின்றானோ, அவனையும் அவனது இணையையும் விட்டு விடுகின்றேன் (முஸ்லிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***மறை வானவைகளில் தஜ்ஜாலை விடவும் பயங்கரமானதொன்றை, நான்***

*உங்களுக்கு அறிவித்துத் தரட்டுமா? என வினவினார்கள். அதற்கு நபித்தோழர்கள் ஆம் யா ரஸூலுல்லாஹ் என்றனர். அதற்கவர்கள், ஒருவன் தொழுகைக்காக எழுந்து, தனது தொழுகையை ஏனைய மனிதர்கள் பார்க்க வேண்டுமென்பதற்காக, அழகுறச் செய்யும் மறைமுகமான இணையாகும் என்றார்கள் (அஹ்மத்).* மேலும் கூறுகின்றார்கள். ***உங்களிடத்தில் நான் மிகவும் பயப்படுவது, சிறிய இணையையேயாகும். அப்போது சிறிய இணையென்றால் என்னவென்று வினவப்பட்டதற்கு, ஒரு செயலை முகஸ்துதிக்காக செய்வதாகும் என்றார்கள்.*** மேலும் கூறுகின்றார்கள். ***யார் அல்லாஹ்வுக்கு இணை கற்பித்த நிலையில் மரணிக்கின்றாரோ, அவர் நரகம் நுழைந்து விட்டார் (புகாரி).***

மேலும் அல்லாஹ் அல்லாவரைக் கொண்டு சத்தியம் செய்தல், அல்லாஹ்வும் நீயும் விரும்பியதால் இது நடந்தது, இது உன்னாலும், அல்லாஹ்வின் மூலமும் தான் ஏற்பட்டதெனக் கூறல், முகஸ்துதி, கண்ணியம் போன்றவை அனைத்தும் சிறிய இணையில் உள்ளவையாகும். எனவே அவைகளிலிருந்து நாம் அனைவரும் நம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

**தாயத்து, நூல் கட்டல், குறியிடுதல்.** ஒரு முறை நபி (ஸல்) அவர்கள், ***ஒரு மனிதர் தனது கையிலே மஞ்சல் வளையல் போன்றதை கட்டியிருந்ததைக் கண்டு, அதனைப்பற்றி வினவினார்கள். அதற்கவர் தனக்கு ஏற்பட்டிருக்கும் வலியைப் போக்கிக் கொள்ள அணிந்திருக்கின்றேன் எனக் கூற, அதற்கு நபியவர்கள், அது உனக்கு வலியை அதிகரிக்கத்தான் செய்யும். எனவே அதனை நீ கழற்றி விடு எனக் கூறிவிட்டு, அதை அணிந்திருக்கும் நிலையில் நீ மரணித்தால், நீ ஒரு போதும் வெற்றிபெற மாட்டாய் எனவும் கூறினார்கள் (அஹ்மத்).*** மேலும் கூறுகின்றார்கள். ***யார் தாயத்தை அணிந்து கொள்கின்றாரோ, அவர் அல்லாஹ்வுக்கு இணை வைத்து விட்டார் (அஹ்மத்).***

மேலும் ***ஒரு முறை தனது கையிலே காய்ச்சலின் காரணமாக நூலைக் கட்டிக் கொண்டிருந்த ஒருவரைக் கண்ட ஹுதைபா (ரலி) அவர்கள், அதனைக் கழற்றி எறிந்து விட்டு, பின்வரும் திருவசனத்தை ஓதினார்கள்.*** அல்லாஹ் கூறுகின்றான். ***மேலும் அவர்களில் பெரும்பாலோர், அவர்கள் இணை வைக்கிறவர்களாகவே தவிர அல்லாஹ்வை விசுவாசிப்பதில்லை (12.106).***

மேலும் குறியிடுவதைத் தடுத்து, அதிகமான ஆதாரங்கள் வந்திருக்கின்றன, அவைகளில் சிலதைப் பார்ப்போம். நபி (ஸல்) அவர்கள் ***இரத்தம், நாய், விபச்சாரம் போன்றவைகளால் திரட்டப்பட்ட பணத்தை தடுத்து, வட்டியெடுப்பவனையும், கொடுப்பவனையும், கொண்டை போடுபவளையும், போடும்படி வேண்டுபவளையும், உருவப்படம் வரைபவனையும் சபித்துள்ளார்கள் (புகாரி).*** மேலும் இதே போன்று சில மனிதர்கள், தமது சிறு குழந்தைகளின் முகங்களிலும், கைகளிலும், சில குறிகளை இட்டு, அவை அவர்களை நீடூழிகாலம் வாழ வைக்குமெனவும், தீங்குகளிலிருந்து அவர்களைப் பாதுகாக்குமெனவும் எண்ணிக் கொண்டிருக்கின்றர். இவ்வாறு செய்வது அல்லாஹ் படைத்த படைகோலத்தை மாற்றுதல், மனிதனுக்கு நோவினையளித்தல், இணைகற்பித்தல் போன்றவைகள் சேர்ந்திருப்பதால் அவ்வாறு செய்வதை இஸ்லாம் தடுத்திருக்கின்றது.

மேலும் இவ்வாறு மிருகங்களில் கூட செய்ய வேண்டாமென அல்லாஹ் தடுத்திருக்கின்றான், அவ்வாறிருக்கும் போது, எவ்வாறு அல்லாஹ்வால் கண்ணியப்படுத்தப்பட்ட மனிதர்களில் செய்ய முடியும்?. அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***(அதற்கந்த ஷைத்தான்) உன் அடியார்களில் ஒரு குறிப்பிட்ட பகுதியை, நிச்சயமாக நான் எடுத்துக் கொள்வேன் என்று கூறினான். இன்னும் நிச்சயமாக நான் அவர்களை வழி கெடுப்பேன். அவர்களுக்கு வீணான ஆசைகளையும் உண்டாக்குவேன். நிச்சயமாக அவர்களுக்கு நான் கட்டளையும்***

*இடுவேன். அப்போது (அல்லாஹ் அல்லாதவருக்காக நேர்ச்சை செய்து விடப்பட்ட ஆடு, மாடு, ஒட்டகம், முதலிய)கால் நடைகளின் காதுகளை அவர்கள் அறுத்து விடுவர். இன்னும் அவர்களை நிச்சயமாக நான் ஏவுவேன். அப்போது அல்லாஹ்வின் சிருஷ்டி(களுடைய கோலங்)களை நிச்சயமாக அவர்கள் மாற்றி விடுவர். (என்றும் ஷைத்தான் கூறினான்.) மேலும் எவர் அல்லாஹ்வையன்றி (இத்தகைய) ஷைத்தானை (தனக்குப்) பாதுகாவலனாக எடுத்துக் கொள்கின்றாரோ, நிச்சயமாக அவர் தெளிவான நஷ்டத்தையே அடைந்து விடுவார் (4.118-119).*

**இணை கலந்த மந்திரித்தலும், தாயத்துக்களும்**. *ஒரு முறை அபூபசீர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுடன் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது, நபியவர்கள் ஒரு தூதரை அனுப்பி, ஒட்டகங்களின் கழுத்துகளிலே போடப்படிட்டிருக்கும் (சவடி போன்ற) அடையாளங்களை கழற்றிவிடும் படி ஏவினார்கள் (புகாரி).* மேலும் கூறுகின்றார்கள். *மந்திரித்தலும், குழந்தைகளுக்கேற்படும் கண் வேறுகளை தடுக்கப் போடப்படும், தாயத்துக்களும், இரு உள்ளங்களை இணைப்பதற்காக செய்யப்படுபவைகளும் இணையிலுள்ளவைகளாகும் (அஹ்மத்,அபூதாவுத்).* மேலும் கூறுகின்றார்கள். *யாராயினும் ஒருவன், ஏதோவொரு பொருளை, தனது (கழுத்திலே) அணிந்து கொண்டால், அதிலே நம்பிக்கை வைத்தவனாக சாட்டப்படுகின்றான் (அஹ்மத்,திர்மிதி).* என்றாலும் கூட, மந்திரித்தல் எனும் போது, இஸ்லாமிய சட்டத்திற்குட்பட்டவைகளுக்கு, இஸ்லாம் அனுமதி வழங்கியிருக்கின்றது.

## சூனியத்தின் வகைகள்.

நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். *பறவைகளை கோபமூட்டி பறக்கவிட்டு அதனது சப்தம், போகும் திசை போன்றவைகளைக் கொண்டு குறிபார்ப்பதும், கோடு போட்டு குறி பார்ப்பதும், துற்குறி பார்ப்பதும், சூனியங்களில் உள்ளவையாகும் (ஹதீஸ்).* மேலும் கூறுகின்றார்கள். *நட்சத்திரங்களில் ஒரு பகுதியை யார்*

***எடுத்துக் கொள்கின்றாரோ, அவர் சூனியத்தின் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டவராவார். (அவர் அதனை படிப்பதை அதிகமாக்கிக் கொள்ளும் போதெல்லாம், பாவத்தையும் அதிகமாக்கிக் கொள்கின்றார் (அபூ தாவுத்).***

மேலும் சூனியம், நட்சத்திரம் போன்றவைகள், தானாகவே எவ்வித தாக்கத்தையும் ஏற்படுத்த சக்தியற்றது மாற்றமாக அல்லாஹ்வின் ஏற்பாட்டின் அடிப்படையிலே அவைகள் தாக்கங்களை ஏற்படுத்துகின்றன. எனவே அல்லாஹ் ஏன், அந்நட்சத்திரங்களை படைத்திருக்கின்றான். என்பதனை அறிந்து கொள்ளும் அளவிற்கு கற்றுக் கொண்டால் போதுமானதாகும். மாற்றமாக அதில் எல்லை மீறிக் கற்கக்கூடாது. கதாதா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***அல்லாஹ் நட்சத்திரங்களை வானத்தின் அழகுக்காகவும், ஷைத்தானுக்குரிய எரிகொள்ளிகளாகவும், பாதைகளை அறிந்து கொள்ளக்கூடிய அடையாளங்களாகவும் படைத்திருக்கின்றான். எனவே யாராயினும், அவைகளல்லாத வேறு விடயங்களுக்கும் அவைகளைப் படைத்திருக்கின்றான் என கருதுவானேயானால், அவன் வழிதவறியவனாக மாறி, தனக்கு தெளிவில்லாத விடயத்தில், தலையிட்டவனாகவும் ஆகிவிடுகின்றான்.*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***யார் முடிச்சிட்டு அதிலே ஊதுகின்றானோ, அவன் சூனியம் செய்துவிட்டான். யார் சூனியம் செய்கின்றானோ, அவன் இணைகற்பித்து விட்டான். யார் ஒரு பொருளை தன்னிலே அணிந்து கொள்கின்றானோ, அவன் அதிலே சாட்டப்படுகின்றான் (நஸயீ).*** மேலும் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***மோசமான பொய்யென்றால் என்னவென்று அறிவித்துத் தரட்டுமா? என நபி (ஸல்) அவர்கள் வினவிவிட்டு, அது தான் மனிதர்களுக்கு மத்தியில் பேசப்படும் கோள் என்றார்கள் (முஸ்லிம்).***

மேலும் சாஸ்திரக்காரர்களிடம் செல்வதையும், அவர்கள் சொல்வதை உண்மைப்படுத்துவதையும் நாம் தவிர்ந்து

கொள்ள வேண்டும். நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***சகுனம் பார்ப்பவனும், சகுனம் பார்க்கப்படுபவனும், குறி சொல்பவனும், குறி சொல்லப்படுபவனும், சூனியம் செய்பவனும், எவனுக்காக சூனியம் செய்யப்படுகின்றதோ அவனும் எம்மிலுள்ளவனல்ல. மேலும் யாராயினும் சாஸ்திரம் சொல்பவனிடம் சென்று, அவன் சொல்வதை உண்மைப்படுத்தினால், முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது இறக்கி வைக்கப்பட்டதை (குர்ஆனை) நிராகரித்துவிட்டான் (அல்பஸ்ஸார்).*** மேலும் கூறுகின்றார்கள். ***யாராயினும் சாஸ்திரக்காரனிடம் சென்று, ஒரு விடயத்தைக் கேட்டு, அதை உண்மைப்படுத்தினால் அவனது நாற்பது நாள் தொழுகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது (முஸ்லிம்).***

மேலும் எவன் தனக்கு மறைமுகமான விடயங்கள் தெரியும் என வாதிடுகின்றானோ, அவன் ஷைத்தானின் தோழர்களில் உள்ளவனாவான். எனவே கராமத்துக்கள் எனும் போது, அல்லாஹ்வின் நல்லடியார்கள் தமது துஆவின் மூலமோ, அல்லது நற்கிரியைகள் மூலமோ, ஏற்படுத்தும் சில அதிசயங்களாகும். எப்படியிருப்பினும் அவைகள் அவர்களின் சொந்த முயற்சிகளினால், ஏற்படுகின்றதென நாம் நினைத்து விடக்கூடாது. அவ்வாறான அதிசயங்கள் அவர்களால் நிகழ்ந்த போதிலும், தான் ஒரு அல்லாஹ்வின் நல்லடியானென்று மனிதர்களுக்கு மத்தியில் தம்பட்டமடித்துக் கொண்டிருக்கவும் மாட்டார்கள்.

மேற்கூறப்பட்டவாறு தனக்கு மறைவான விடயங்கள் தெரியுமென கூறும் வலிமார்களை நாம் நம்பினால், குறி சொல்பவர்களை நம்பியவர்களைப் போன்றவராவோம். அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***அந்த உண்மையான ஒரு வார்த்தையுடன், நூறு பொய்களையும் சேர்த்து சொல்கின்றார்கள் (ஹதீஸ்).*** மேலும் சில சந்தர்ப்பங்களில் அல்லாஹ் தனது நல்லடியார்களை கண்ணியம், அதிசயங்கள் போன்றவைகளைக் கொடுத்து, அவைகளில்

அவர்கள் எவ்வாறு நடந்து கொள்கின்றார்கள் என்பதனை சோதிப்பதுண்டு.

## துற்குறி பார்த்தல்.

துற்குறி பார்ப்பதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***அவர்களுடைய துற்சகுனமெல்லாம் அல்லாஹ்விடமிருந்தே (வந்து) உள்ளது என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். எனினும் அவர்களில் பெரும்பாலோர், இதனை அறிந்து கொள்வதில்லை (7.131).*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***தொற்று நோய், பறவைகள், ஆந்தையின் அலறல், சபர் மாதம் போன்றவைகளைக் கொண்டு துற்சகுனம் பார்ப்பது, இஸ்லாத்தில் உள்ளவையல்ல (புகாரி,முஸ்லிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***தொற்று நோய், பறவைகளைக் கொண்டு துற்சகுனம் பார்த்தல் போன்றவைகள், இஸ்லாத்தில் உள்ளவையல்ல. என்றாலும் (ப:.லை) நான் விரும்புகின்றேன் என்றார்கள். அதற்கு அங்கிருந்த நபித்தோழர்கள், (ப:.ல்) என்றால் என்னவென்று கேட்டார்கள். அதற்கு நபியவர்கள், சிறந்த வார்த்தை என்றார்கள் (புகாரி, முஸ்லிம்).***

மேலும் உக்பத்துப்னு ஆமிர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***துற்சகுனத்தைப் பற்றி நபியவர்களிடம் வினவப்பட்டது. அதற்கவர்கள் நீ சிறந்ததோர் வார்த்தையை கூறிக் கொள்வதுதான் மிகவும் சிறந்தது. ஒரு முஸ்லிமை நீ தட்டிக்கழிக்க வேண்டாம். உங்களில் ஒருவர், தான் வெறுக்கும் ஒரு விடயத்தைக் கண்டால், அவர் இறைவா நல்லவைகளை கொண்டு வருவதும், கெட்டவைகளை தடுப்பதும் நீதான். எந்த அசைவும், சக்தியும் உன்னைக் கொண்டுதான் நடைபெறுகின்றது. எனக்கூறிக் கொள்ளட்டும் என்றார்கள் (அபூதாவுத்).*** மேலும் கூறுகின்றார்கள். ***துற்சகுனம் இணையிலுள்ளதாகும். துற்சகுனம் இணையிலுள்ளதாகும். நம்மில் ஒருவர் அதனால் பீடிக்கப்பட்டால், அதனை அல்லாஹ்விடம் ஒப்படைப்பது கொண்டு நீங்கிவிடுகின்றது (அபூதாவுத்,திர்மிதி).***

மேலும் கூறுகின்றார்கள். ***துற்சகுனம் யாரை தனது தேவையை நிறைவேற்ற விடாமல் தடுத்துவிடுகின்றதோ, அவர் அல்லாஹ்வுக்கு இணை கற்பித்து விட்டார். அதற்கு நபித்தோழர்கள் அவ்வாறு நடந்து விட்டால், அதற்குரிய பரிகாரம் யாதென வினவினார்கள்?. அதற்கு நபியவர்கள், இறைவா! நல்லவைகள் உன்னைக் கொண்டு தான் நடைபெறுகின்றன. துற்சகுனமும் உன்னைக் கொண்டுதான் நடைபெறுகின்றது. உன்னைத் தவிர வேறு நாயன் இல்லை. எனக் கூறிக் கொள்வதாகும் என்றார்கள் (அஹ்மத்).*** வேறொரு அறிவிப்பில், ***உனது வேலையை நிறைவேற்றவோ, தட்டிக் கழிக்கச் செய்வதோ தான், துற்சகுனம் என்றார்கள் (அஹ்மத்).***

## தொற்று நோய்.

இமாம் பைஹகி, இப்னு சலாஹ், இப்னு கையூம், இப்னு ரஜப், இப்னு முப்லிஹ், போன்ற மார்க்க அறிஞர்கள், (தொற்று நோய் இல்லை) என்ற நபிவாக்கியத்திற்கு விளக்கமளிக்கையில், மேற்கூறப்பட்ட வாக்கியம் அன்றைய அறியாமைக்கால மக்களது எண்ணத்திலிருந்தவாறு, அல்லாஹ்வின் ஏற்பாடின்றி, தானாகவே அது மற்ற மனிதனை தொற்றிக் கொள்கின்றதென்ற கருத்தைத்தான் மறுத்துரைக்கின்றது என கூறியிருக்கின்றார்கள். இவர்களது கருத்திலிருந்து விளங்குவது யாதெனில், தீங்குகளும் அல்லாஹ்வின் ஏற்பாட்டிலுள்ளவையென ஒருவன் நம்பி, அதிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்ள எந்த நடவடிக்கைகளிலும் ஈடுபடலாம். எனவே காலரா நோய் பரவியிருக்கும் ஊர்களுக்குச் செல்லாதிருத்தல், அவ்வாறு காலரா பிடித்தவர்கள் அவ்வூரை விட்டும் வெளியூர்களுக்குச் செல்லாதிருத்தல், வெண்குஷ்டம் பிடித்தவர்களை விட்டும் தூரமாகியிருத்தல் போன்ற முன்னேற்பாடுகளில் ஈடுபடுவதில் எத்தவறும் இல்லை. ஏனெனில் அனைத்து காரணிகளையும் படைத்தவன் அந்த அல்லாஹ் ஒருவன் தான்.

மேலும் அல்லாஹ்வின் ஏற்பாட்டினடிப்படையிலே தான், அனைத்தும் நடக்கின்றதென்ற உறுதியுடன், அவைகள் தன்னை தொற்றிக் கொள்ளும் என்ற அச்சமற்ற சிலர், பொது நன்மையைக் கருதி மேற்கூறப்பட்ட நோயுள்ளவர்களுடன் சேர்ந்திருக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால், அவ்வாறு சேர்ந்திருக்கலாம். அதற்கோர் எடுத்துக் காட்டாக பின்வரும் சம்பவத்தை எடுத்துக் கொள்ளலாம். ***ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் வெண்குஷ்டம் பிடித்த ஒருவனுடைய கையைப்பிடித்து தனது சாப்பாட்டுத் தட்டில் உட்கார வைத்து, அல்லாஹ்வின் பெயரைச் சொல்லி, அவனிலே நம்பிக்கையும், தவக்குலும் வைத்தவனாக சாப்பிடுவாயாக! என பணித்தார்கள் (அபூதாவுத்,திர்மிதி).***

## பறவைகளைக் கொண்டு துற்சகுனம் பார்த்தல்.

அதாவது காக்கை, ஆந்தை போன்ற பறவைகளையும், அவைகளது சப்தங்களையும் கொண்டு துற்சகுனம் பார்ப்பதாகும். இப்னுல் அஃராபி என்பவர் கூறும் போது, பின்வருமாறு கூறுகின்றார். முன்னைய அறியாமைக்கால மக்களது வீட்டில் அப்பறவைகள் வந்து நின்று விட்டால், தானோ, அல்லது தனது குடும்பத்திலுள்ளவர்களில் ஒருவரோ மரணிப்பதற்குரிய அறிகுறியாகக் கருதுவார்கள். இஸ்லாம் வந்ததன் பின் அம்மூடப்பழக்க வழக்கங்களை நிராகரித்து, அவ்வாறானவைகளில் ஈடுபடுவது இணையிலுள்ளவை எனவும் தெளிவு படுத்தியது.

## நட்சத்திரங்களைக் கொண்டு மழை தேடுதல், ஒப்பாரி வைத்தல், குலப் பெருமை பேசுதல். ஒரு வர்க்கத்தினரை இழிவுபடுத்தல்.

ஸைதுப்னு காலித் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***ஹுதைபியாவில் மழை பெய்த ஓர் இரவில், நபியவர்கள் சுபஹுத் தொழுகையை நடத்தி விட்டு, மனிதர்களின் பக்கம் திரும்பி, உங்கள் இறைவன் என்ன கூறுகின்றான் தெரியுமா?***

*என வினவினார்கள். அதற்கு நபித்தோழர்கள், அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள் என்றனர். அதற்கு நபியவர்கள் பின்வருமாறு கூறினார்கள். எனது அடியார்கள் இன்று என்னை விசுவாசித்தவர்களாகவும், நிராகரித்தவர்களுமாக காலையில் எழுந்திருக்கின்றனர். யார் அல்லாஹ்வின் அருளால் மழை பொழிந்திருக்கின்றதென கூறுகின்றானோ, அவன் என்னை விசுவாசித்து கோல்களை நிராகரித்து விட்டான். யார் கோல்களின் மூலம் மழை பொழிந்திருக்கின்றதென கூறுகின்றானோ, அவன் என்னை நிராகரித்து கோல்களை விசுவாசித்து விட்டான் எனக் கூறுகின்றான் என்றார்கள் (புகாரி,முஸ்லிம்).*

கோல்களைக் கொண்டு மழை தேடுவதென்பது, கோல்களின் மூலம் தான், மழை பொழிகின்றதென்று கூறுவதைக் குறிக்கும். மேலும் கோல்கள் என்பது சந்திரனின் தங்குமிடங்களாகும். சந்திரனுக்கு மொத்தமாக 28 தங்குமிடங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு இரவிலும் ஒவ்வொரு இடத்தில் அது தங்கிச் செல்கின்றது. அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். *சந்திரனுக்கு நாம் பல தங்குமிடங்களை ஏற்படுத்தியிருக்கின்றோம் (36. 39).* மேலும் ஒவ்வொரு பதிமூன்றாம் இரவின், பஜ்ர் உதயத்துடன், மேற்க்குப்பகுதியில் ஒரு தரிப்பிடம் விழுந்து, கிழக்குப் பகுதியில் ஒன்று உதிக்கும். அதனால்தான், மழை பொழிகின்றதென அன்றைய அறியாமைக்கால மக்கள் கூறி வந்தனர்.

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். *இவ்வாறிவ்வாறான கோல்கள் மூலம் தான், மழை பொழிந்ததெனக் கூறி, நீங்கள் உங்கள் ரிஸ்க்குக்குரிய நன்றியை பொய்யான முறையில், அல்லாஹ்வுக்கு தெறிவிக்கின்றீர்கள் (அஹ்மத்).* மேலும் கூறுகின்றார்கள். *அறியாமைக்கால மக்களிடத்திலிருந்த நான்கு விடயங்கள், எனது சமுதாயத்தவர்களிடமும் இருந்து கொண்டிருக்கின்றன, அவர்கள் அதனை விடவே மாட்*

*டார்கள். அவைகள், குலப்பெருமை பேசுதல், சந்ததியை இழிவுபடுத்தல், கோல்களைக் கொண்டு மழை தேடல், ஒப்பாரி வைத்தல் போன்றவையாகும் எனக் கூறிவிட்டு, ஒப்பாரி வைப்பவள் தனது மரணத்துக்கு முன், பாவமன்னிப்புக் கோரவில்லையாயின், மறுமையில் (தார்) போன்ற கறுப்பினாலான ஆடையும், காயங்களிலிருந்து வெளியாகும் சீலகளினாலான ஆடையும் அணிவிக்கப்படும் (முஸ்லிம்).*

## காலத்தைத் தூற்றுதல்.

காலத்தை தூற்றுவதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுவதாக நபி (ஸல்) அவர்கள் அறிவிக்கின்றார்கள். *நானே காலமாயிருக்கும் போது, அதனை ஆதமின் மகன் தூற்றி, என்னை துன்புறுத்துகின்றான். என்னிடத்தில் தான் அதனது நிர்வாகமே இருந்து கொண்டிருக்கின்றது, நான் தான் அதனது இரவையும், பகலையும் மாற்றியமைக்கின்றேன் (புகாரி, முஸ்லிம், அபூதாவுத், நஸயீ).* வேறொரு அறிவிப்பில், *நானே காலமாயிருக்கும் போது, அதனை நீங்கள் தூற்றாதீர்கள் (ஹதீஸ்).* என்றும், மற்றுமொரு அறிவிப்பில், *மனிதர்களே! காலத்துக்கு ஏற்பட்ட நாசமே என்று அதனை தூற்றாதீர்கள். ஏனெனில் காலம், எனது கையில்தான் இருந்து கொண்டிருக்கின்றது. நான் தான் இரவையும், பகலையும், மாற்றியமைக்கின்றேன். நான் விரும்பினால் அவ்விரண்டையும் கைப்பற்றிக் கொள்வேன் எனக் கூறுகின்றான் (ஹதீஸ்).*

மேற்கூறப்பட்ட நபிவாக்கின் கருத்தாவது, அன்றைய மனிதர்கள் தங்களுக்கு ஏதாவது துன்பங்கள் ஏற்படுமிடத்து, காலத்தின் மூலம் தான், அவை ஏற்படுகின்றதெனக் கருதி, அதனை தூற்றக் கூடியவர்களாக இருந்தார்கள். எனவே காலத்தை தூற்றுவதின் மூலம் அதனை இயக்கிக் கொண்டிருப்பவனான அல்லாஹ்வையே, தூற்றுவதாக அமைந்து விடுகின்றது. இதனால் தான் அவ்வாறு காலத்தைத் தூற்ற வேண்டாம் என தடை விதிக்கப்பட்டுள்ளது.

அதே போன்று காற்றை தூற்றுவதும், காலத்தை தூற்றுவதைப் போன்றே கருதப்படும். காற்றைத் தூற்றுவ தனையிட்டு, நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின் றார்கள். ***நீங்கள் காற்றைத் தூற்றாதீர்கள். காற்றின் மூலம் நீங்கள் வெறுக்கும் ஒன்றைப் பெற்றுக் கொண்டால், நீங்கள் பின் வருமாறு கூறிக் கொள்ளுங்கள். இறைவா! இக்காற்றில் நல்ல தையும், அதன் மூலம் ஏற்படும் நலவையும், நீ எதைக் கொண்டு அதனை ஏவினாயோ, அதன் நலவையும் உன்னிடம் கேட்கின்றேன். இக்காற்றின் தீங்கையும், அதிலிருக்கும் தீங்கையும், நீ எதைக் கொண்டு அதனை ஏவினாயோ, அதன் தீங்கையும் விட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகின்றேன் என கூறிக் கொள்ளுங்கள் என்றார் கள் (திர்மிதி).*** இதே போன்று சூடு, குளிர், போன்றவைக ளையும், ஏற்படுத்துபவன் அல்லாஹ் என்பதையுணர்ந்து, அவனிடத்தில் அவைகளினால் ஏற்படும் நன்மையை கேட்டு, அவைகளிலுள்ள தீங்கை விட்டும், நாம் பாதுகாப் புத் தேடிக் கொள்ள வேண்டும்.

## கத்ர், மற்றும் ஈமானின் வரைவிளக்கணம்.

கத்ர் என்றால், அல்லாஹ் ஒரு பொருளை நிர்ணயிப்ப தைக் குறிக்கும். அதனைப்பற்றி அல்லாஹ் கூறும் போது, பின்வருமாறு கூறுகின்றான். ***நிச்சயமாக நாம் ஒவ்வொரு பொரு ளையும், (நிர்ணயிக்கப்பட்ட) அளவின் படியே படைத்திருக்கின் றோம் (54. 49).*** மேலும் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறி விக்கின்றார்கள். ***உமரின் மகனுடைய உயிர், எவன் கைவசம் இருக்கின்றதோ அவன் மீது சத்தியமாக, ஒருவனிடம் உஹுத் மலையளவு தங்கம் இருந்து, அதை அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்தாலும் கூட, அல்லாஹ் நிர்ணயித்தவைகளை (கத்ரை)க் கொண்டு விசுவாசிக்கின்ற வரை, அதனை அல்லாஹ் ஏற்றுக் கொள்ளமாட்டான். அதற்குச் சான்றாக பின்வரும் நபிமொழியை கூறுகின்றார்கள். நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். அல்***

*லாஹ்வையும், அவனது மலக்குகளையும், அவனது வேதங்களையும், அவனது தூதர்களையும், மறுமை நாளையும், நல்லவை கெட்டவை அனைத்தும், அவனது நிர்ணயத்தி(கத்ரி)னடிப்படையில் தான் நடக்கின்றதென விசுவாசிப்பதைத்தான் ஈமான் எனப்படும் என்றார்கள் (முஸ்லிம்).*

மேலும் உப்பாதத் இப்னு ஸாமித் (ரலி) அவர்கள், *தனது மகனைப்பார்த்து, மகனே! உனக்கு ஏற்படும் நலவு உன்னை தவறிழைக்கச் செய்யவோ, உனக்கு ஏற்படும் தவறு உன்னை சீர்திருத்தவோ அல்ல என்பதனை அறிந்து கொள்ளும் வரை, நீ ஈமானின் உண்மையான சுவையை பெற்றுக்கொள்ள மாட்டாய் எனக் கூறிவிட்டு, நபி (ஸல்) அவர்கள் பின்வறுமாறு கூறுவதாகக் கூறுகின்றார்கள். அல்லாஹ் (உலகைப் படைக்க முன்) முதலாவதாக எழுது கோலைப் படைத்து எழுதுமாறு பணித்த போது, அதற்கு நான் என்ன எழுத வேண்டுமென வினா எழுப்பியது. அதற்கு அல்லாஹ், மறுமை நிகழும் வரைக்குமுண்டான அனைத்தினது நிர்ணயத்தை (கத்ரை) யும் எழுதுவாயாக எனப் பணித்தான். மகனே! மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். யாராயினும் இவ்வாறு நிர்ணயிக்கப்பட்டதை (கத்ரை) விசுவாசிக்காதவனாக, மரணித்தால், அவன் என்னைச் சார்ந்தவன் அல்ல (ஹதீஸ்).* வேறொரு அறிவிப்பில், *முதலாவதாக அல்லாஹ் எழுது கோலைப் படைத்து, எழுதுமாறு பணித்தான். உடனே மறுமை நாள் வரைக்குமுண்டான, அனைத்து நிகழ்வுகளையும் எழுதி முடித்தது (அஹ்மத்).*

## கத்ரை பொருந்திக் கொள்வதின் சிறப்பும், அதனையிட்டு கோபமடைவதின் விளைவும்.

அல்லாஹ் நிர்ணயித்தவைகளை பொருந்திக் கொள்வதின் சிறப்பையும், அதனையிட்டு கோபமடைவதின் விளைவையும் விளக்கும் போது நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். *பெரும் நன்மைகள் பெரிய சோதனைகளுக்கே உரியன. அல்லாஹ் ஒரு கூட்டத்தினரை விரும்பி விட்டா*

***னென்றால் அவர்களை அவன் சோதனைக்குற்படுத்துகின்றான். யார் அதை பொருந்திக் கொள்கின்றானோ, அவனுக்கு அல்லாஹ்வின் பொருத்தமும், யார் அதனையிட்டு கோபப்படுகின்றானோ, அவனுக்கு அல்லாஹ்வின் கோபமும் கிடைக்கின்றது (திர்மிதி).*** மேலும் ***எவர் அல்லாஹ்வை விசுவாசிக்கின்றாரோ, அவருடைய இதயத்திற்கு அவன் வழிகாட்டுகின்றான் (64.11).*** என்ற இறைவசனத்துக்கு, அல்கமா (ரலி) அவர்கள் விளக்கமளிக்கும் போது, பின் வருமாறு கூறுகின்றார்கள். ***மேற்கூறப்பட்ட வசனத்தில் கூறப் பட்டவன் எப்படியானவனென்றால், அவனுக்கு துன்பங்கள் ஏற்படு மிடத்து, அவை அல்லாஹ்வின் புறத்திலிருந்து வந்தவையென ஏற்று, அதனை பொருந்திக் கொள்பவனாகும் என்றார்கள்.*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***ஒரு சந்ததியினரிலுள்ள வரை, விபச்சாரத்தின் மூலம் உருவானவர் எனக் கூறுபவனும், மையித்தின் மீது ஒப்பாரி வைப்பவனுமாகிய இரு தரப்பினரும் இறைநிராகரிப்பாளர்களாகும் (முஸ்லிம்).***

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***துன்பங் களின் போது, கன்னத்திலே அடித்துக் கொள்பவர்களும், தனது சட்டைப் பையை கிழித்துக் கொள்பவர்களும், அறியாமைக்காலத்து மக்களது வார்த்தைகளைக் கொண்டு ஒப்பாரி வைப்பவனும் எம்மிலுள்ளவனல்ல. (முஸ்லிம்,திர்மிதி)*** மேலும் கூறுகின்றார் கள். ***அல்லாஹ் தனதடியானுக்கு நலவை நாடினால், அவனுக்குரிய தண்டனையை உலகிலேயே கொடுத்து விடுகின்றான். மேலும் ஒருவனுக்கு தீங்கை நாடிவிட்டால், மறுமையில் தண்டிப்பதற்காக அதனை மறுமை வரை தடுத்து வைக்கின்றான் (திர்மிதி,ஹாகிம்).***

## தடுக்கப்பட்ட ஆதரவு.

தடுக்கப்பட்ட ஆதரைவையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நம்மிடம் ஏதும் அதிகாரம் இருந்திருந்தால், இங்கு வந்து (இவ்வாறு) நாம் கொல்லப்பட்டிருக்க மாட்டோம் என்று கூறி னார்கள் (2.154).*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்

கள். ***உனக்கு பிரயோஜனமளிக்கும் விடயங்களில் நீ கவனம் செலுத்தி, அதிலே அல்லாஹ்வின் உதவியையும் தேடிக்கொள். அதனை முடியாதென்று விட்டுவிடாதே. உனக்கு ஏதாவது நேர்ந்து விட்டால், நான் இவ்வாறு செய்திருந்தால் இது நடந்திருக்காதே எனக்கூறாதே. மாற்றமாக அல்லாஹ் நிர்ணயித்திருக்கின்றான், அவன் நாடியதை செய்து விட்டான் என்று கூறுவாயாக.! ஏனெனில் இப்படி நடந்திருந்தால் என்ற வாசகம் ஷைத்தானுடைய செயல் களிலுள்ளதாகும் (புகாரி).***

மேற்கூறப்பட்ட வசனம், முடிந்து போனவொன்றை நினைத்துக் கூறுவனையே குறிக்கின்றது. இதை மீண்டும் மீண்டும் நினைத்து மனவருத்தப்படுவதில் எவ்விதப்பலனு மில்லை. மாற்றமாக ஒருசட்டத்தை தெளிவுபடுத்துவதற் காகவோ, அல்லது நன்மை செய்ய ஆதரவு வைத்தோ கூறுவதில் தவறேதுமில்லை. அதற்குதாரணமாக. நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***நான் ஒரு விடயத்தை செய்ய முனைந்து விட்டால், அதிலே பின்வாங்க மாட்டேன். நான் ஹஜ்ஜுக்கு குர்பானியை எடுத்துச் சென்ற போது, அவர்கள் (மக்கா குறைஷிகள்) என்னை தடுத்து விட, உடனே அக்கடமையை உம்றா வாக மாற்றிக் கொண்டேன் என்றார்கள் (ஹதீஸ்).***

## படைப்பினங்களுக்குப் பயப்படுதல்.

அல்லாஹ்வின் விரோதியான ஷைத்தானுக்குப் பயப் படுவதையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***இது ஒரு ஷைத்தான் தான், அவன் தன் நண்பர்களைப் பற்றி (அவர்கள் பலசாலிகள், கடுமையானவர்கள் என உங்களைப்) பயமுறுத்து கிறான். ஆகவே நீங்கள் (உண்மை) விசுவாசிகளாக இருந்தால், அவர்களுக்குப் பயப்பட வேண்டாம் எனக்கே பயப்படுங்கள் (3. 175).*** மேலும் கூறுகின்றான். ***அல்லாஹ்வுடைய மாளிகைகளை பரி பாலனம் செய்கிறவரெல்லாம், அல்லாஹ்வையும், இறுதிநாளையும் விசுவாசித்து, தொழுகையையும் நிறைவேற்றி, ஸகாத்தும்***

*கொடுத்து அல்லாஹ்வையன்றி மற்றெவருக்கும் பயப்படாமலும் இருக்கின்றவர்கள் தாம்(9.18).* மேலும் கூறுகின்றான். ***இன்னும் மனிதர்களில், அல்லாஹ்வை நாங்கள் விசுவாசம் கொண்டுள்ளோம் என்று கூறுகின்ற சிலர் இருக்கின்றனர். ஆகவே அவர்கள் அல்லாஹ்வுடைய வழியில் துன்புறுத்தப்பட்டால், மனிதர்களால் ஏற்படும் (அத்துன்பத்தை அல்லாஹ்வுடைய வேதனையைப் போலாக்கி (உங்களிடமிருந்து விலகி)க் கொள்கின்றனர் (29.10).***

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***யார் மனிதர்களின் வெறுப்பின் மூலம், அல்லாஹ்வின் பொருத்தத்தை தேடுகின்றானோ, அவனை அல்லாஹ்வும் பொருந்தி, மனிதர்களையும் அவனை பொருந்திக் கொள்ளச் செய்கின்றான். மேலும் யார் அல்லாஹ்வுடைய வெறுப்பின் மூலம், மனிதர்களின் பொருத்தத்தை தேடுகின்றானோ, அவனை அல்லாஹ்வும் வெறுத்து, மனிதர்களையும் அவனை வெறுக்கச்செய்கின்றான் (இப்னுஹிப்பான்).*** எனவே மேற்கூறப்பட்டவாறு நாம் அல்லாஹ்வுக்கு மாத்திரமே பயப்படவேண்டும் என்பதனை மேற்கூறப்பட்ட திருவசனங்களும், நபி மொழிகளும் தெளிவுபடுத்துகின்றன. அதற்கு மாற்றமாக அவனால் படைக்கப்பட்ட சாதாரண மனிதனுக்குப் பயப்படுவது, தடுக்கப்பட்டவைகளிலுள்ளதாகும். ஆனால் மனிதனுக்கு இயற்கையிலே உள்ள முறையில், அநியாயக்காரன், பாம்பு, சிங்கம் போன்றவைகளுக்கு பயப்படுவதில் தவறேதுமில்லை.

## தனது செயலின் மூலம் உலகை எதிர்பார்த்தல்.

ஒருவன் நற்கிரியைகளில் ஈடுபட்டு, அதன் மூலம் அல்லாஹ்வின் பொருத்தத்தை எதிர்பார்க்காது, அவனால் படைக்கப்பட்டவர்களினால் கூறப்படும் புகழ்ச்சியை எதிர்பார்ப்பதனையிட்டு, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***எவர்கள் இவ்வுலக வாழ்வையும், அதன் அலங்காரத்தையும் நாடுபவர்களாக இருக்கின்றார்களோ, அவர்கள் செயல் (களுக்குரிய பலன்)களை இ(வ்வுலகத்)திலேயே நாம் பூரணமாக அவர்களுக்கு***

***நிறைவு செய்வோம். அவர்களோ அதில் குறைவு செய்யப்பட மாட்டார்கள். இத்தகையோர் தாம் அவர்களுக்கு மறுமையில் (நரக) நெருப்பைத் தவிர (வேறொன்றும்) இல்லை. அவர்கள் அ(வ்வுலகத்) தில் செய்தவை அழிந்தும் விட்டன. அவர்கள் செய்து கொண்டிருந் தவை வீணானவையேயாகும் (11.15–16).*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***ஒரு தீனாருக்கும், திர்ஹத்துக்கும், ஒரு ஆடைக்கும், உணவுக்கும் அடிமையாயிருப்பவன் நாசமாகிப் போவானாக!. அவைகளை அவனுக்குக் கொடுத்தால் பொருந்திக் கொள்வான், கொடுக்காவிடில் கோபப்படுவான், அவன் அதில் நாச மடைந்து, நஷ்டவாளியாகவும் ஆகிவிடுவானாக!, அவனது உடம்பில் ஓர் முள் தைத்து விட்டாலும் அதனை வெளியாக்குவதற் குரிய எவரையும் அவன் பெற்றுக் கொள்ள மாட்டான். அல்லாஹ் வின் பாதையில் போரிட தலை விரிகோலமாக தனது கால்களில் புழுதி படிந்த நிலையில் தனது குதிரையின் கடிவாளத்தை பிடித்தவ னாக செல்லும் ஒருவனுக்கு அல்லாஹ்வின் சுபசோபனம் உண்டாவ தாக. அப்போராளிகளை பாதுகாக்க வேண்டிய நிலையேற்பட்டால், அவர்களைப் பாதுகாப்பான், அவர்களது கால்நடைகளை வழி நடத்திச் செல்ல வேண்டிய நிலையேற்பட்டால், அவைகளை வழி நடத்திச் செல்வான், அவன் அனுமதி கேட்டால் அதற்கு அனுமதி வழங்கப்படமாட்டாது, அவன் பரிந்து பேச வேண்டினால் பரிந்து பேசப்படவும் மாட்டாது (புகாரி).***

## அல்லாஹ்வினது பெயர்களல்லாததுடன் அடிமை எனும் வாச கத்தை இணைத்தல்.

அவ்வாறு அல்லாஹ்வின் பெயர்களல்லாததுடன் அடிமை எனும் வாசகத்தை இணைப்பதையிட்டு, அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***அவ்விருவருக்கும் நல்ல (சந்ததி யான)தை அவன் கொடுத்த போது, அவர்களுக்கு அவன் கொடுத்த வற்றில் அவ்விருவரும் இணையாளர்களை ஆக்கினார்கள் (7.190).*** எனவே அப்துல் முத்தலிப் தவிர்ந்த, அப்துல் உமர், அப்

துல் க.்.பா, அப்துன் நபி போன்ற பெயர்களை சூட்டுவது தடுக்கப்பட்டவையாகும் என மார்க்க அறிஞர்கள் கூறியிருப் பதை இப்னு ஹஸ்ம் அவர்கள் அறிவிக்கின்றார்கள். அப் துல் முத்தலிப் என்பவருக்கு மாத்திரம் அப்பெயரை அனு மதித்ததின் காரணமாக, அவர் அன்றைய மக்களில் வய தில் மூத்தவராகவும், அம்மக்களால் பெரிதும் மதிக்கப் படுபவராகவும், மக்காவில் வசித்து வந்த குறைஷிகள் அனைவரும், அவரது அடிமைகள் என்று கூறிக் கொள்வ தில் பெருமை கொள்பவர்களாகவும் இருந்ததனால் தான் எனக் கூறுகின்றனர்.

## உயிருள்ளவைகளை வரைதல்.

அல்லாஹ் கூறுகின்றான். ***மேலும் அவர்கள் (தம் சமூகத் தாரிடம்) உங்களுடைய (வணக்கத்திற்குரிய) தெய்வங்களை நிச் சயமாக நீங்கள் விட்டுவிடாதீர்கள். வத்து, ஸுவாஉ, எகூஸ், யஊக், நஸ்ர் (ஆகிய விக்கிரகங்)களையும் நிச்சயமாக நீங்கள் விட்டுவிடாதீர்கள் என்றும் கூறினோம் (71. 23).*** மேற்படி திருவச னத்திற்கு விளக்கவுரை கூறும் போது, இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***மேற்கூறப் பட்ட பெயர்கள் அனைத்தும், நூஹ் (அலை) அவர்களின் காலத்தில் வாழ்ந்த நல்லடியார்களின் பெயர்களாகும். அவர்கள் மரணித்த பின், அச்சமுதாயத்து மக்களிடம் ஷைத்தான் சென்று, அவர்கள் இருந்து கொண்டிருந்த இடங்களில், அவர்களின் ஞாபகார்த்தச் சின்னமாக, சிலைகளைச் செய்து அதற்கு அவர்களின் பெயர்களைச் சூட்டும்படி ஏவ, அவர்களும் அவ்வாறே செய்தார்கள். என்றாலும் அவர்கள் அதனை வணங்கத் தலைப்படவில்லை. சிறிது காலத் துக்குப்பின் அச்சமுதாயம் அழிந்து, புதியதோர் சமுதாயம் தோன்றிய போது, அதைப்பற்றிய அறிவும் அவர்களிடம் இல்லாததினால், அவர் கள் அவைகளை வணங்க முற்பட்டார்கள் (புகாரி).***

வேறொருவர் அறிவிக்கும் போது, பின்வருமாறு கூறு கின்றார். ***மேற்கூறப்பட்ட பெயர்களையுடையவர்கள் மரணித்த***

*பின், அவர்களின் கப்றுகளில் இவர்கள் சென்று உட்கார்ந்து, பின் அவர்களுக்குச் சிலை செய்து, சில காலம் சென்றதன் பின் இவர்கள் அவர்களை வணங்க ஆரம்பித்தார்கள்.* மேலும் உருவங்கள் சிறியதாகவோ, பெரியதாகவோ, எவ்வாறிருந்த போதிலும் உயிருள்ளவைகளை வரைவது ஹராமாகும் என்பதனை பின்வரும் நபி மொழிகள் தெளிவுபடுத்துகின்றன. நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். *உருவப்படம் வரைபவர்கள் அனைவரும் நரகத்தையே சென்றடைவார்கள். பின்பு அவர்கள் வரைந்த ஒவ்வொரு உருவத்துக்கும் உயிர் கொடுக்கப்பட்டு, அதன் மூலம் அவர்களை நரகிலே வேதனை செய்யப்படும் (புகாரி,முஸ்லிம்).*

மேலும் கூறுகின்றார்கள். *உலகிலே உருவம் வரைந்தவர்களுக்கு, மறுமையில் அவ்வுருவங்களைக் கொடுத்து, அவைகளுக்கு உயிர் கொடுக்கும்படி கட்டளையிடப்படும். ஆனால் அவர்களோ அதனை செய்ய முடியாதவர்களாய் துன்புறுத்தப்படுவார்கள் (புகாரி, முஸ்லிம்).* மேலும் அல்லாஹ் கூறியதை நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு அறிவிக்கின்றார்கள். *நான் படைத்த படைப்பைப் போன்று படைக்க முற்படுபவனைப் போன்ற அநியாயக்காரன் யார் இருக்கின்றான்?, அவனுக்கு முடியுமென்றால், ஒரு கடுகு மணியையோ, அல்லது ஒரு வித்தையோ, அல்லது ஒரு கோதுமை மணியையோ படைத்துப்பார்க்கட்டும் (புகாரி,முஸ்லிம்).* மேலும் கூறுகின்றார்கள். *மறுமையில் கடுமையாக வேதனை செய்யப்படுபவர் யாரெனில், அல்லாஹ்வின் படைப்பைப் போன்று படைக்க முற்படுபவர்களேயாகும் (புகாரி,முஸ்லிம்)*

மேலும் அபுல் ஹய்யாஜ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். *அலி (ரலி) அவர்கள் என்னை ஒரு விடயமாக அனுப்பும் போது, பின்வருமாறு கூறியனுப்பினார்கள். அறிந்து கொள். நபி (ஸல்) அவர்கள் எனக்கு எதனைக்கூறி அனுப்பினார்களோ, அதனையே உனக்கும் கூறி அனுப்புகின்றேன். எனவே நீ காணும் எந்தவொரு உருவத்தையும் அழிக்காமல் விட்டு விடாதே. மேலும்*

***உயர்த்தப்பட்டிருக்கும் எக்கப்றையும் தரைமட்டமாக்காமலும் விட்டு விடாதே (முஸ்லிம்).*** அதே போன்று தான் சினிமா, தொலைக் காட்சி போன்றவைகளில் எச்சரிக்கையாக இருந்துகொள்ள வேண்டும். ஏனெனில் அவைகளில்தான், தனது ஏகத்துவக் கொள்கையையே நாசமாக்கி விடும் நடனம், இன்னிசைப் பாடல், வீணை, ஆண் பெண் கலப்பு, திறந்த மேணியுடன் காட்சியளித்தல், காபிர்களுக்கு ஒப்பாகுதல் போன்ற அனைத்து தீயவிடயங்களும், அதன் மூலம் நிகழ்வதுடன், வரைவதற்கே தடுக்கப்பட்ட உருவங்களை நடனமாடவும், பேசவும் இயக்கப்படுகின்றது.

எனவே இஸ்லாமியர்களாகிய நாம், அவைகளையும் ஏனைய உருவப்படங்களையும் பார்க்காமலும், தனது குடும் பம், பிள்ளைகள் போன்றோர் பார்ப்பதற்கோ, அல்லது அதனை வீட்டினுள் அனுமதிப்பதற்கோ இடங் கொடாமலும் நடந்து கொள்ள வேண்டும். நபி (ஸல்) அவர்கள் கூறு கின்றார்கள் ***எந்த வீட்டில் நாயும், உருவப்படங்களும் இருக்கின் றதோ, அவ்வீட்டுக்குள் மலக்குமார்கள் நுழையமாட்டார்கள் (முஸ்லிம்).*** மேலும் ***ஜிப்ரயீல் (அலை) அவர்கள், நபி (ஸல்) அவர்களிடம் வந்து பின்வருமாறு கூறுகின்றார்கள். நாம் நாயும், உருவப்படமும் உள்ள வீட்டினுள் நுழையமாட் டோம் (புகாரி).***

## நபி (ஸல்) அவர்களுக்கு உதவி செய்து பாதுகாப்பது, தவ் ஹீதைப் பாதுகாப்பதைப் போன்றதாகும்.

அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறு கின்றார்கள். ***நீங்கள் ஒருவரை எல்லை மீறிப் புகழ்வதை எச்சரிக் கின்றேன். உங்களுக்கு முன்னுண்டான சமூகம் எல்லை மீறி புகழ்ந் ததனால் தான் அழிக்கப்பட்டார்கள் (அஹ்மத்,திர்மிதி, இப்னு மாஜஹ்,).*** மேலும் கூறுகின்றார்கள். ***மர்யமுடைய மகன் ஈசாவை கிறிஸ்தவர்கள், (அல்லாஹ்வின் ஸ்தானத்திற்கு) உயர்த்தியது போன்று என்னையும் நீங்கள் உயர்த்திவிடாதீர்கள். ஆனால் என்னை அல்லாஹ்வின் அடிமையென்றும் தூதரென்றுமே கூறுங்***

*கள் (புகாரி,முஸ்லிம்).* மேலும் *அப்துல்லாஹ் பின் ஷகீர் என்பவர், பனூஆமிர் என்ற கூட்டத்தினருடன் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, நாம் அவரைப்பார்த்து நீங்கள் எமது தலைவர் எனக் கூறினோம். அதற்கவர்கள், அல்லாஹ்தான் தலைவன் எனக் கூறினார்கள். அதற்கு நாம் எம்மில் சிறந்தவரும், உயர்ந்தவரும் எனக் கூறினோம், அதற்கவர், தற்போது கூறியது போன்றோ, அல்லது அதில் சில வார்த்தைகளையோ கூறுங்கள். (மேற்கூறப்பட்டவாறு கூறின்) ஷைத்தான் உங்களை வழிகெடுத்து விடுவான் என்றார்கள் (அபூதாவுத்).* மேலும் அனஸ் (ரலி) அவர்கள் பின்வருமாறு அறிவிக்கின்றார்கள். *சிலர் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து எங்களில் சிறந்தவரே, எங்களில் சிறந்தவரின் மகனே, எங்களின் தலைவரே, எங்கள் தலைவரின் மகனே எனக் கூறினர். அதற்கு நபியவர்கள், ஏ மனிதர்களே! நீங்கள் மேலே கூறியவாரோ, அல்லது அதில் சிலதையோ கூறிக் கொள்ளுங்கள். ஏனெனில் நீங்கள் நினைத்தவாறெல்லாம் புகழ்வதற்கு ஷைத்தான் உங்களை அமைத்து விடுவான். அல்லாஹ் என்னை எந்த படித்தரத்தில் வைத்து அனுப்பி வைத்தானோ, அதை விட உயர்ந்த படித்தரத்தில் வைத்துப் புகழ்வதை நான் விரும்பவில்லை என்றார்கள் (நஸயீ).*

மேலும் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். *உம்மு ஸலமா (ரலி) அவர்கள், தான் ஹபசா நாட்டிலுள்ள கோயில்களில் கண்ட சில சிலைகளைப்பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கூறியபோது, அதற்கு நபியவர்கள், அவர்களில் ஒரு சிறந்த மனிதர், அல்லது நல்லடியார் மரணித்து விட்டால், அவரது கப்றிலே பள்ளியைக் கட்டி, அதிலே அவர்களது உருவங்களை வரைந்து விடுவார்கள். அவர்கள் தான் மறுமையில் மிகவும் மோசமானவர்கள் எனக் கூறினார்கள் (புகாரி).* மேலும் தாபித் பின் லஹ்ஹாக் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். *ஒரு மனிதர் புவானா என்ற இடத்தில் அறுத்துப்பலியிட நேர்ச்சை வைத்து அதனை நிறை*

***வேற்றுவதையிட்டு நபியவர்களிடத்தில் வினவினார். அதற்கு நபியவர்கள், அவ்விடத்தில் அறியாமைக்கால மக்கள் விக்ரகங்களை வணங்கி வந்தார்களா? என வினவினார்கள். அதற்கு இல்லையென்றார்கள். அப்படியாயின் உனது நேர்ச்சையை நிறைவேற்றுவாயாக எனக் கூறி விட்டு, அல்லாஹ்வுக்கு மாறு செய்யும் விடயத்திலோ, மனிதர்கள் சொந்தமாக்கிக் கொள்ளாத (அல்லாஹ்வுக்குரிய) விடயத்திலோ நேர்ந்ததை நிறைவேற்றக் கூடாதென்றார்கள் (அபூதாவுத்)***

மேலும் நபி (ஸல்) அவர்கள் கப்றின் பக்கம் நின்று தொழுவதையும், அதற்கு விழா கொண்டாடுவதையும், அவைகளைக் கட்டுவதையும், சுண்ணாம்பு அடிப்பதையும், அதிலே எழுதுவதையும், திரைகொண்டு மறைப்பதையும், தடுத்திருக்கின்றார்கள். மேலும் நபி (ஸல்) அவர்கள், ***அலி (ரலி) அவர்களை யமனுக்கு அனுப்பிய போது, பின்வருமாறு கூறியனுப்புகின்றார்கள். எந்தவொரு விக்ரகங்களையும் உடைக்காமலும், உயர்த்தப்பட்ட கப்றுகளை தரைமட்டமாக்காமலும் விட்டு விடாதே).*** மேலும் நபியவர்கள் ***கப்றுகளை தரிசிக்கச் செல்லும் பெண்களையும், அக்கப்றுகளை பள்ளிகளாக எடுத்துக் கொள்பவர்களையும், அதிலே விளக்கேற்றி வைப்பவர்களையும் சபித்திருக்கின்றார்கள் (ஹதீஸ்).*** மேற்கூறப்பட்ட அனைத்தையும் முன்னுண்டான சமுதாயம் செய்து வழிகெட்டுப் போன காரணத்தினால் தான், அதிலிருந்து தனது சமுதாயத்தைப் பாதுகாக்கும் பொருட்டு, அவையனைத்தையும் தடுத்து விட்டுச் சென்றிருக்கின்றார்கள்.

## கப்றுகளைத் தரிசித்தல்.

கப்றைத் தரிசிப்பது சம்பந்தமாக பேசுவதற்கு முன், அதற்கு முன்னுண்டான மண்ணறை வாழ்க்கையைப் பற்றி சற்று ஆராய்வோம்.

**மண்ணறை வாழ்க்கை.**

ஒரு மனிதனுடைய உயிரை அல்லாஹ் கைப்பற்றுவது கொண்டு, அவனது உயிர் உடலை விட்டும் பிரிந்து செல்கின்றது என அல்குர்ஆனும், சுன்னாவும் எமக்கு சிறந்த முறையில் தெளிவுபடுத்திக் கொண்டிருக்கின்றன. மேலும் ஒருவன் மரணிக்கும் போது, அவனது உயிர் தொண்டைக்குழியை அடைந்து பின் வெளியேற்றப்படுவது டன், அவ்வாறு வெளியேற்றப்படும் உயிரை யாராலும் தடுத்து நிறுத்திடவும் முடியாதென தெளிவுபடுத்துகின்றது. அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***(மறுமை நாள் வெகுதூரமென நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கின்றீர்களே) அவ்வாறல்ல, (இதோ அதன் தொடக்கமாக மரண வேளையில் அவனது உயிர்) தொண்டைக் குழியை அடைந்து விட்டால்) (75. 26).*** மேலும் கூறுகின்றான். ***ஆகவே நீங்கள் (யாருடைய) அதிகாரத்திற்கு(ம்) கட்டுப்படாதவர்களாக இருந்தால், நீங்கள் உண்மையானவர்களாக இருந்தால், அ(வருடைய உயிரா ன)தை நீங்கள் அவரின் பால் மீளவைத்திருக்கலாமே? (56. 86–87).*** மேலும் கூறுகின்றான். ***உயிர்களை அவை இறக்கும் பொழுதும், தம் நித்திரையில் இறப்பெய்யாதவற்றையும் அல்லாஹ்வே கைப் பற்றுகிறான். பின்னர் எதன் மீது மரணத்தை அவன் விதித்து விட்டானோ, அதை(த் தன்னிடமே) அவன் நிறுத்திக் கொள்கின் றான். மேலும் மற்றவற்றை குறிப்பிடப்பட்ட காலம் வரை (வாழ் வதற்காக) அவன் அனுப்பிவிடுகின்றான் (39. 42).***

எனவே மேற்கூறப்பட்ட வசனத்தின் மூலம், சில உயிர் கள் தூக்கத்தில் கைப்பற்றப்பட்டு, அதில் சிலதை மரணிக் கச் செய்தும், ஏனையவைகளை இன்னும் சில காலம் ஜீவிப்பதற்காகவும் திருப்பியனுப்பப்படுகின்றது என்பது தெளிவாகின்றது. எனவே யாரை மரணிக்கச் செய்யப்படு கின்றதோ, அவனது உயிர் அவனது உடலை விட்டுப் பிரிந்து செயலற்றவனாக மாறிவிடுகின்றான். நபி (ஸல்) அவர்கள் தூங்கச் செல்லும் போது, ***இறைவா! உனது பெய***

***ரைக் கூறியே எனது புஜத்தை வைக்கின்றேன், உன்னைக் கொண்டே அதனை மீண்டும் உயர்த்துகின்றேன், நீ எனது உயிரைக் கைப்பற்றி விட்டால், அதற்கு மன்னிப்பளித்து அருள்புரிவாயாக, அதனை இன்னும் சிலகாலம் வாழ விட்டு வைத்தால், உனது நல்லடியார்களை பாதுகாப்பது போன்று அதனையும் பாதுகாத்துக் கொள்வாயாக!. எனக் கூறுவார்கள் (புகாரி).*** உயிர் கைப்பற்றப்பட்ட பின், அதனை வானத்துக்கு எடுத்துச் செல்லப் பட்டு, பின் மண்ணறையில் வைத்து, உனது இறைவன் யார்?, உனது மார்க்கம் என்ன?, உனது நபியார்?, போன்ற கேள்விகளைக் கேட்பதற்காக அவ்வுயிரை அவனது உடலுக்கு திருப்பியனுப்பப்படுகின்றது.

எனவே மரணித்தவன் சிறந்த விசுவாசியாக இருந்தால், அவைகளுக்குரிய விடையாக, அவனது இறைவன் அல்லாஹ் எனவும், அவனது மார்க்கம் இஸ்லாம் எனவும், அவனது நபி முஹம்மத் (ஸல்) அவர்கள் எனவும் விடையளிக்கும் முறையில், அல்லாஹ் அவனுக்கு அருள் புரிகின்றான். பின்பு நபி (ஸல்) அவர்களைக் காண்பித்து, இம் மனிதரைப்பற்றி என்ன கூறுகின்றாய் எனக் கேட்கப்படும், அதற்கு அவன், அவர் அல்லாஹ்வின் அடிமையும், தூதருமாவார், அவர் அத்தாட்சிகளையும், நேர்வழியையும், கொண்டு வந்து அதன் பக்கம் நம்மை அழைத்த போது, அதனை நாம் ஏற்று, பின்பற்றி நடந்தோம் எனக் கூறுவான். மரணித்தவன் நயவஞ்சகனாக இருந்தால், ஹாஹ், ஹாஹ், எனக்குத் தெரியாது, மனிதர்கள் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார்கள் அதனையே நானும் சொல்லிக் கொண்டிருந்தேன் எனக் கூறுவான். அப்போது இரும்பினாலான சம்மட்டியால் அவனை அடிக்கப்படும். அதன் வேதனை தாங்க முடியாமல் அவன் அலறும் அலறலை மனிதன், ஜின்களைத் தவிர ஏனைய அனைத்துப் படைப்பினங்களும் செவியுறுகின்றன.

ஒருவனின் மரணத்தின் பின், அவனது உயிர் மீண்டும் அவனது உடம்புக்கு திருப்பிக் கொடுக்கப்படுவது, உலகில்

கொடுக்கப்பட்டதைப் போன்றோ, அல்லது மறுமையில் கொடுக்கப்படுவதைப் போன்றோ அல்ல. மாற்றமாக அவ் வாறு திருப்பிக் கொடுக்கும் போது, அவன் அவன் செய்த நற்கிரியைகளுக்கேற்ப இன்பத்தையோ, அல்லது தீய செயல்களுக்கேற்ப துன்பத்தையோ அனுபவிக்கக் கூடிய முறையில் தான் திருப்பிக் கொடுக்கப்படுகின்றது. இதனால் தான் நபி (ஸல்) அவர்கள் ***கப்றிலுள்ளவருக்கு கப்றை விசால மாக்கிக் கொடுக்கப்படுகின்றது என அறிவித்துச் சென்றிருக்கின் றார்கள் (ஹதீஸ்).*** மேலும் மனிதனுடைய உயிரை அல் லாஹ் நாடிய போது, ஒரு முறையோ, பல முறையோ உடலுடன் ஒட்டிக் கொள்வதுடன், அவன் நாடிய போது, பிரிந்து கொள்ளவும் செய்கின்றது.

மேலும் நாம் தூங்கக்கூடிய தூக்கமும் மரணத்தின் ஒன்றுவிட்ட சகோதரனைப் போன்றதாகும். இதனால் தான், நபி (ஸல்) அவர்கள் தூக்கத்திலிருந்து எழுந்ததும் பின் வருமாறு கூறுவார்கள். ***அல்ஹம்து லில்லாஹில்லதீ அஹ்யானா பஃத மா அமாதனா, வஇலைஹின் நுஷூர்.*** பொருள்: ***எங்களை மரணிக்கச் செய்து, பின் உயிர் தந்து எழுப்பிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். இன்னும் நாம் அவனிடமே மீளவிருக்கின்றோம்.*** மேலும் தூக்கத்தையும், மரணத்தையும் ஒன்றிணைத்துக் கூறப்பட்ட காரணம். தூங்கிக் கொண்டிருப்பவன், தான் கனவு காணும் போது, அதிலுள்ள இன்பங்களையும், துன் பங்களையும் எவ்வாறு உணர்கின்றானோ, அதே போன்று தான் மரணித்தவனும், கப்றில் வைத்து அவனுக்குக் கொடுக்கப்படுகின்ற இன்ப, துன்பங்களை அனுபவிக்கின் றான்.

உயிர்கள் படைக்கப்பட்டு அவைகளது மரணத்திற்குப் பின் இன்பமோ, துன்பமோ அவைகளுக்குக் கொடுக்கப் படும் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. என்றாலும் உயிரின் உண்மை நிலையை அல்லாஹ் மாத்திரம் தான் அறிவான். மேலும் உயிர்கள் மனிதனின் உடம்பிலிருந்து கைப்பற்றப்பட்ட பின் இன்பமோ, துன்பமோ எதுவாயிருந்த

போதும் உயிருக்கு மாத்திரமே கொடுக்கப்படும். ஆனால் அதனை உடலுடன் சேர்க்கப்பட்டு விட்டால் அத்துன்பத்தை, அல்லது இன்பத்தை அவ்விரண்டும் சேர்ந்துதான் அனுபவிக்கின்றன. அவ்வுயிர் உடம்புடன் சேர்ந்தாலும் சரி, சேராவிட்டாலும் சரி இன்பத்தையோ, துன்பத்தையோ அனுபவிக்கச் செய்யப்படுவதுடன், மறுமை நிகழும் வரை, அவ்வாறு அவைகள் அனுபவித்துக் கொண்டிருக்குமென்பதும் இஸ்லாம் வகுத்த சட்டவிதியாகும்.

எனவே மண்ணறையின் வேதனை எனும் போது, மரணித்த ஒவ்வொருவரும், அவர் மண்ணறையில் அடக்கப்பட்டாலும், அடக்கப்படாவிட்டாலும், பிராணிகள் சாப்பிட்டாலும், அல்லது தீயிலிட்டாலும், சிலுவையில் அறைந்தாலும், அல்லது கடலிலே தூக்கியெறியப்பட்டாலும், கப்றிலே அடக்கப்பட்டவன் அனுபவிப்பது போன்று, இன்பத்தையோ, துன்பத்தையோ அவனது கிரியைகளுக்கேற்ப பெற்றுக் கொள்வான். எனவே அக்கப்றில் வைத்து உயிர், உடம்பு இரண்டும் இன்பம், துன்பம் போன்றவைகளை அனுபவிக்கின்றன என்பதை நாம் அறிந்து கொள்வதுடன், கப்றில் கொடுக்கப்படும் வேதனைகளை நபி (ஸல்) அவர்கள் எவ்வாறு வர்ணித்திருக்கின்றார்களோ, அவ்வாறே எவ்வித கூட்டல் குறைத்தலின்றி ஏற்றுக் கொள்ளவும் வேண்டும்.

## மண்ணறையில் உயிர்களின் இருப்பிடம்.

மண்ணறையில் உயிர்களின் இருப்பிடத்தைப்பற்றி அறிஞர்கள் பல கருத்துக்களைக் கூறிய போதிலும், அவ்வுயிர்கள் பல படித்தரங்களில் இருந்து கொண்டிருக்கின்றதென்பது தெளிவான உண்மையாகும். அவைகளில் நபிமார்களின் உயிர்கள் ***இல்லீன்*** எனும் சுவனத்தில் உயர்ந்த படித்தரங்களில் இருப்பதுடன், அவர்களின் படித்தரங்களில் வித்தியாசமும் இருந்து கொண்டிருக்கும். அதிலும் இறுதித் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் உயிர், உயர்ந்த படித்தரத்தில் இருந்து கொண்டிருக்கும். ஆக இவை

தவிர்ந்த ஏனைய உயிர்களின் நிலை பற்றி சற்று பார்வையிடுவோம்.

- அல்லாஹ்வின் பாதையில் போரிட்டு உயிர் நீத்த வர்களின் உயிர், பச்சை நிறத்துடைய பறவைகள் போன்று சுவனத்தில் பறந்து திரிந்து கொண்டி ருக்கும். என்றாலும் கடன் போன்ற காரணங்கள் இருக்குமானால், அவ்வுயிரால் சுவனத்தில் நுழைய முடியாமல் தடுத்து வைக்கப்பட்டிருக்கும். ஒரு முறை ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ***யாரஸூலுல்லாஹ் நான் அல்லாஹ்வின் பாதையில் கொலை செய்யப்பட்டு மரணித்தால் எனக்குக் கிடைக்கவிருக்கும் கூலி யாதென வினவியதற்கு, நபியவர்கள் சுவனம் எனப்பதிலளித்தார்கள். அதைக் கேட்டுவிட்டு திரும்பிக் கொண்டிருந்த அவரை மீண்டும் அழைத்து, கடனாளியைத் தவிர எனக் கூறிவிட்டு, தற்போது தான் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் என்னிடம் வந்து அறிவித்து விட்டுச் சென்றார் கள் என்றார்கள் (அஹ்மத்).***
- சில உயிர்கள் சுவன வாயிலில் தடுக்கப்பட்டிருக் கும். நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***உங் கள் தோழர் சுவன வாயிலில் தடுத்து வைக்கப்பட்டிருக்கக் கண்டேன் என்றார்கள் (ஹதீஸ்).***
- சில கப்றுகளிலே தடுத்து வைக்கப்பட்டிருக்கும்.
- சில பூமியில் உலாவிக் கொண்டிருக்கும்.
- சில விபச்சாரம் செய்பவர்களின் வீட்டு அடுப்பறை யிலே இருந்து கொண்டிருக்கும்.
- சில இரத்த ஆறுகளில் நீந்தி, கற்களை விழுங்கிக் கொண்டிருக்கும். மேற்கூறப்பட்ட அனைத்தையும், நபி (ஸல்) அவர்களே கூறிவிட்டுச் சென்றிருக்கின் றார்கள்.

எனவே உலகில் வாழ்ந்து மரணிக்கும் மனிதன் மூன்று வீடுளில் வாழக்கூடியவனாயிருக்கின்றான். 1)உலகம். உலகிலிருக்கும் போது, இவனது உடம்புக்குத்தான், சட்டம் (இன்பம்,துன்பம்) வழங்கப்படுகின்றது. ஆனால் உயிர் அதனைத் தொடர்ந்திருக்கும். 2)மண்ணறை. ஒருவன் மரணித்து மண்ணறையில் வைக்கப்பட்டதும், உயிருக்குத் தான் சட்டம்(இன்பம்,துன்பம்) வழங்கப்படுகின்றது. ஆனால் உடல் அதனை தொடர்ந்திருக்கும். 3)மறுமை. இதில் உயிர்,உடல் இரண்டுக்குமாக சட்டம்(இன்பம்,துன்பம்) வழங்கப்படுகின்றது.

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறும் போது, பின்வருமாறு கூறுகின்றார்கள். ***கப்று ஒன்றோ, சுவனத்தின் பூஞ்சோலையாயிருக்கும், அல்லது நரகின் படுகுழியாயிருக்கும் (ஹதீஸ்).*** மேலும் கப்றிலிருக்கும் இன்பமும், துன்பமும் உலகிலுள்ள இன்ப துன்பங்களைப் போன்றதல்ல. மாற்றமாக அதைவிட பன்மடங்கு வித்தியாசமானதாகும். மேலும் ஆச்சரியத்துக்குரிய விடயம் யாதெனில், மிகவும் நெருக்கமாக இரு கப்றுகள் இருந்த போதிலும், ஒன்றில் இருப்பவர். இன்பமும், மற்றதில் இருப்பவர் துன்பமும் அனுபவித்துக் கொண்டிருந்த போதிலும், அவர்கள் இருவரும் தமது இன்ப, துன்பங்களில் எதனையும் பரிமாறிக் கொள்ளவோ, அல்லது அறிந்து கொள்ளவோ முடியாதவர்களாக இருக்கின்றனர். இது தான் அல்லாஹ்வின் வல்லமையையும், சக்தியையும் எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கின்றது.

## மரணித்தவர்கள் செவியுறுபவர்களா?.

இன்று சிலர் கப்றில் இருப்பவர்கள் தாம் பேசுவதைக் கேட்கின்றனர் எனக் கருதி, தமது தேவைகளை அவர்களிடம் கேட்கவும், அவர்களிடம் பிரார்த்திக்கவும் செய்து, அல்லாஹ்வுக்கு இணைகற்பித்தவர்களாக ஆகிவிடுகின்றார்கள். அதனையிட்டு அவர்களிடம் வினவப்பட்டால், அவர்கள் தான், நாம் கூறும் ஸலாத்துக்குப் பதில் கூறுகின்றார்களே, எனவே நாம் எதைக் கேட்டாலும், அவர்களால் அதனை செவிமடுத்துக் கொள்ள முடியும் எனக்

கூறுகின்றார்கள். ஆனால் மரணித்தவர்கள் எதனையும் செவியுற சக்தியற்றவர்கள் என்பது தான் உண்மை. அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***நபியே! நிச்சயமாக நீர் மரணித்தோரைச் செவியேற்கச் செய்ய மாட்டீர் (27.80).*** மேலும் கூறுகின்றான் ***நபியே! கப்றிலே உள்ளவர்களை நீர் செவியேற்கச் செய்பவர் அல்ல(.....)*** மேலும் ***கப்றிலுள்ளவர்களுக்கு சொல்லப்படும் ஸலாத்தை, அவர்கள் செவியுறுகின்றார்கள்.*** எனும் ஹதீஸ் பலவீனமானதாகும், அது ஆதாரத்துக்குகந்ததல்ல. மேலும் ***நடக்கக் கூடியவர்களின் பாதணி சப்தங்களை கேட்கின்றனர்.*** எனும் ஹதீஸைப் பொறுத்த வரையில், அது அந்நேரத்துக்கு மாத்திரம் குறிப்பானதாகும். அதற்கும் உயிருள்ளவர்கள் பேசுவதற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. மேலும் ***நபி (ஸல்) அவர்கள் பத்ருப் போரிலே கொலை செய்யப்பட்ட காபிர்களுடன் பேசினார்கள்.*** எனும் ஹதீஸைப் பொறுத்த வரையில் அது நபி (ஸல்) அவர்களுக்கு மாத்திரம் சொந்தமானதாகும்.

## மரணித்தவர்களைச் சென்றடையும் நற்கிரியைகள்.

மனிதன் மரணித்து விட்டால், இஸ்லாம் குறிப்பிட்டுக் கூறிய நற்கிரியைகளின் நன்மைகளைத் தவிர ஏனைய அனைத்தும் துண்டிக்கப் பட்டுவிடுகின்றன. அவ்வாறு இஸ்லாம் கூறியவைகளைப் பொறுத்த வரையில் அவைகளை இரு வகையாகப் பிரிக்கலாம்.

1. அவன் வாழ்ந்து கொண்டிருக்கும் போது செய்து விட்டுச் சென்ற விடயங்கள். அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***மனிதன் மரணித்து விட்டால், மூன்று விடயங்களைத் தவிர மற்றவைகள் அனைத்தும் துண்டிக்கப்பட்டு விடுகின்றன. அவை நிரந்தரமான சதகா, பிரயோஜனமளிக்கும் கல்வி, தனக்காக பிரார்த்திக்கும் நல்ல குழந்தை (முஸ்லிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***ஏழு விடயங்கள் மனிதன்***

மரணித்த பின்பும், அதன் நன்மைகள் அவனது கப்றை சென்று கொண்டிருக்கும். அவை அவன் கற்றுக் கொடுத்த கல்வி, அவன் அமைத்து விட்டுச் சென்ற ஆறு, அவன் கட்டிக் கொடுத்த கிணறு, அவன் நட்டி விட்டுச் சென்ற பேரீத்தம் மரம், அவன் நிர்மாணித்துச் சென்ற பள்ளி, அவன் வக்பு செய்த குர்ஆன், தனது மரணத்தின் பின், தனக்காக பிழை பொறுக்கத் தேடும் குழந்தை போன்றவை களாகும்(ஹதீஸ்). மேலும் கூறுகின்றார்கள். ஒரு விசு வாசிக்கு அவனது மரணத்தின் பின் பின்வருபவைகள் சென்றடைகின்றன. அவன் கற்றுக் கொடுத்த கல்வி, அவன் விட்டுச் சென்ற சிறந்த குழந்தை, அவன் விட்டுச் சென்ற குர்ஆன், அவன் நிர்மாணித்த பள்ளிவாசல், வழிப் போக் கர்களுக்காகக் கட்டி விட்டுச் சென்ற வீடு, அவனால் அமைக்கப்பட்ட ஆறு, அவன் உயிரோடு இருக்கும் போது, தனது பணத்தின் மூலம் செய்து விட்டுச் சென்ற நிலையான தர்மம் போன்றவைகளாகும் (இப்னுமாஜஹ்,பைஹகி, இப்னு ஹுஸைமா). மேலும் கூறுகின்றார்கள். யார் இஸ்லாத் திலிருந்து, மனிதர்களால் மறக்கடிக்கப்பட்ட நற்கிரியை உயிர்ப்பித்து விட்டுச் செல்கின்றாரோ, அவருக்கு அதனது நன்மையும், அதை நடைமுறைப்படுத்துபவர்களின் நன்மையும் கிடைக்கின்றது. ஆனால் அதனை நடைமுறைப்படுத்துப வரின் நன்மையில் சிறிதளவேனும் குறைக்கப்படமாட்டாது. மேலும் யார் இஸ்லாத்திலிந்து மறக்கடிக்கப்பட்ட தீய செயலொன்றை உயிர்ப்பித்து விட்டு செல்கின்றாரோ, அவருக்கு அதற்குரிய தீமையும், அதை நடைமுறைப்படுத்து பவருடைய தீமையும் கிடைக்கின்றது. ஆனால் நடைமுறைப் படுத்துபவரின் தீமையில் சிறிதளவேனும் குறைக்கப்பட மாட்டாது(முஸ்லிம்). மேலும் கூறுகின்றார்கள். யாரா யினும் அநியாயமாக கொலை செய்யப்பட்டால், முதலாவ

***தாக கொலையை ஏற்படுத்திய, ஆதம் (அலை) அவர்களின் முதலாவது மகனுக்கும் அதனது தீமை சென்று கொண்டிருக் கின்றது (புகாரி,முஸ்லிம்).***

2. முஸ்லிம்களின் பிரார்த்தனை, அவர்களுக்காக கோரப்படும் பாவமன்னிப்பு, அவர்களுக்காக செய் யப்படும் தானதர்மம், அவரது கடனை அடைப்பது, அவருக்காக ஹஜ் செய்வது, அவருக்காக குர்பான் அறுத்துப் பலியிடுவது போன்றவைகளும் போய்ச் சேரும். அவைகளுக்குரிய ஆதாரங்களைப் பார்வை யிடுவோம்.

- **பிரார்த்தனை.** பிரார்த்தனை செய்வதனையிட்டு அல் லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***மேலும் அவர் களுக்குப் பின்வந்தார்களே அத்தகையவர்கள், எங்கள் இரட்சகனே எங்களையும், விசுவாசம் கொள்வதில் எங் களை முந்தி விட்டார்களே, அத்தகைய எங்களுடைய சகோதரர்களையும் நீ மன்னித்தருள்வாயாக (59.10).*** எனவே மரணித்தவர்களுக்காக பிழைபொறுக்க வேண்டும்படி இறைவன் கட்டளையிட்டிருப்பதுடன், அவர்களுக்காக கேட்கப்படும் பிரார்த்தனைகள் மூலம் அவர்கள் பிரயோஜனப்படுகின்றார்கள் என்ப தனை அதிகமான நபி மொழிகள் தெளிவு படுத்து கின்றன. அவ்ப் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறு கின்றார்கள். ***நபி (ஸல்) அவர்கள் ஒரு மையித்துக்காக தொழுகை நடத்தும் போது, அவர் பின்வருமாறு பிரார்த் தித்ததை நான் மனனமிட்டுக் கொண்டேன். எனக் கூறி விட்டு பின்வருமாறு கூறுகின்றார்கள். அவர்கள் பிரார்த் திக்கும் போது, இறைவா! அவரது பாவங்களை மன்னித்து, அருள் புரிந்து, சுபிட்சத்தையும் கொடுத்து, அவரது பாவங்களை மன்னித்து விடுவாயாக. அவரது வீட்டை கண்ணியப்படுத்துவதுடன், கப்றையும் விசாலப்படுத்தி,***

*அவரை நீராலும், பனிக்கட்டியாலும், குளிர் நீராலும் குளிப் பாட்டி, வெள்ளாடைகள் எவ்வாறு அழுக்குகளிலிருந்து தூய்மையாக்கப்படுகின்றதோ, அதே போன்று அவரை அவரது பாவ அழுக்குகளிலிருந்து தூய்மையாக்குவாயாக. மேலும் அவரது உலக வீட்டை விட சிறந்த வீட்டையும், உலகத்திலிருந்த குடும்பத்தை விட சிறந்த குடும்பத்தையும், உலகிலிருந்த மனைவியை விட சிறந்த மனைவியையும் கொடுத்து, கப்று, மற்றும் நரக வேதனைகளிலிருந்து காப்பாற்றி, சுவனத்தில் நுழையச் செய்வாயாக. எனப் பிரார்த்தித்தார்கள். எனக் கூறி விட்டு நபியவர்கள் பிரார்த்தித்த அப்பிரார்த்தனைக்குரியவன் நானாக இருந்திருக்க வேண்டுமே என, என் மனம் மேலெண்ணங் கொண்டதெனக் கூறினார்கள் (முஸ்லிம்).* மேலும் அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். *ஒரு மையித்துக்கு நபி (ஸல்) அவர்கள் தொழுகை நடத்தும் போது பின்வருமாறு பிரார்த்தித்ததை நான் செவியுற்றேன் எனக் கூறி விட்டு பின்வருமாறு கூறுகின்றார்கள். அல்லாஹும்ம அன்த றப்புஹா, வஅன்த கலக்தஹா, வஅன்த ஹதய்தஹா லில் இஸ்லாமி, வஅன்த கபல்த ரூஹஹா, வஅன்த அஃலமு பிசிர்ரிஹா வஅலானிய்யத்திஹா (அஹ்மத்).* பொருள். *இறைவா! நீதான் அவளது நாயன், நீதான் அவளைப் படைத்து, இஸ்லாத்தின் பால் நேர்வழி காட்டினாய். மேலும் நீ தான் அவளது உயிரையும் கைப்பற்றினாய். நீயே அவளது இரகசியம் பரகசியம் அனைத்தையும் மிகவும் அறிந்தவன்.* மேலும் நபியவர்கள் கூறுகின்றார்கள். *நீங்கள் மையித்துகளுக்கு தொழுகை நடத்தினால் சிறந்த முறையில் பிரார்த்தித்துக் கொள்ளுங்கள் (அபூதாவூத்).* மேலும் கூறுகின்றார்கள். *ஒரு மையித்தின் மீது 100 பேர் கொண்ட கூட்டத்தினர் தொழுகை நடத்தி, அவர்களனைவரும்*

*அவருக்காக அல்லாஹ்விடம் சிபாரிசு செய்தால், அவர்களது சிபாரிசை அல்லாஹ் ஏற்றுக் கொள்கின்றான் (முஸ்லிம்).* மேலும் கூறுகின்றார்கள். *ஒரு மையித்தின் மீது, இணை வைக்காத 40 பேர் கொண்ட கூட்டத்தினர் தொழுகை நடத்தி, பிரார்த்தித்தால் அவருக்காக செய்த சிபாரிசை அல்லாஹ் ஏற்றுக் கொள்கின்றான் (முஸ்லிம்).* அதே போன்று தான், மையித்தை அடக்கி விட்டு கேட்கப்படும் பிரார்த்தனையையும் அல்லாஹ் ஏற்றுக் கொள்கின்றான். உஸ்மான் பின் அப்பான் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள். *நபி (ஸல்) அவர்கள் மையித்தை அடக்கி விட்டு, அவ்விடத்தில் நின்று பின் வருமாறு கூறுவார்கள். உங்களுடைய சகோதரனுக்காக பிழை பொறுக்கத் தேடுங்கள், அவரிடத்தில் கேட்கப்படும் கேள்விகளுக்குரிய பதிலை சொல்லக் கூடிய முறையில் அல்லாஹ் அவருக்கு அருள் புரியவும் வேண்டுங்கள். ஏனெனில் தற்போது அவர் கேள்வி கேட்கப்பட்டுக் கொண்டிருக்கின்றார் (அபூதாவுத்).* மேலும் கப்றுகளைத் தரிசிக்கச் செல்லும் போதும், அவைகளிலே அடக்கப்பட்டிருப்பவர்களுக்காக நாம் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும்.

- **தானதர்மம்**. நாம் செய்யும் தர்மங்களின் நன்மைகளும் மரணித்தவர்களுக்குப் போய்ச் சேர்கின்றன என்பதற்குரிய ஆதாரம். ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். *ஒரு மனிதர் நபியவர்களிடத்தில் வந்து, யாரஸூலல்லாஹ், எனது தாய் எதையுமே கூறாமல் திடீரென மரணித்து விட்டாள். அவள் பேசியிருந்தால், தர்மம் செய்யும்படி கூறியிருப்பாள். எனவே நான் அவளுக்காக தர்மம் செய்தால், அதனது நன்மை அவளைப் போய் சேருமா? என வினவினார், அதற்கு நபியவர்கள், ஆம்*

*என்றார்கள் (புகாரி,முஸ்லிம்).* மேலும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து யாரஸூலல்லாஹ் நான் ஊரி லில்லாத போது, எனது தாய் மரணித்து விட்டாள், அவ ளுக்காக நான் தர்மம் செய்தால், அது அவளுக்கு பிரயோ ஜனம் அளிக்குமா? என வினவினார். அதற்கு நபியவர்கள் ஆம் எனக் கூறி விட்டு, (மிஹ்ராப்) எனும் தோட்டத்தைக் குறிப்பிட்டு, அதிலுள்ள இரு சுவர்களையும் அவளுக்காக நான் தர்மம் செய்து விட்டேன் என்றார்கள் (புகாரி).***

- **ஹஜ்**. ஹஜ்ஜின் நன்மையும், கடன்பட்டிருந்தவரின், கடனை வேறொருவர் பொறுப்பெடுக்கும் போது, அதிலிருந்து நிரபராதியாகி விடுகின்றார் என்பதற்கு முரிய ஆதாரம். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***ஜுஹைனா கூட்டத்திலுள்ள ஒரு பெண் நபியவர்களிடத்தில் வந்து, பின்வருமாறு கூறி னாள். எனது தாய் ஹஜ் செய்ய நிய்யத் செய்து, அவள் மரணிக்கும் வரை அக்கடமையை நிறைவேற்ற முடியாதவ ளாக மரணித்து விட்டாள். எனவே அவளுக்குப் பகரமாக அதனை நான் நிறைவேற்றட்டுமா? என வினவினாள். அதற்கு நபியவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். அவளுடைய அக்கடமையை அவளுக்குப் பகரமாக நீ நிறை வேற்று எனக் கூறிவிட்டு, உனது தாய்க்கு ஒரு கடன் இருந்தால் அதனை நீ நிறை வேற்றுவாயா?, (அவளுக் குரிய சாதாரண கடனையே நிறைவேற்றி வைப்பதென் றால்) அவள் அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய கடனை யும் நிறைவேற்றி விடுங்கள். அல்லாஹ்வுக்குரிய கடன் தான், அவசியமாக நிறைவேற்றப்பட வேண்டும் என்றார் கள் (புகாரி).*** மேலும் அபூகதாதா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***மரணித்த ஒருவருக்கு இரு தீனார்***

*கடன் இருந்து, அதனை நிறைவேற்றப்பட்ட பின் நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். தற்போது தான் அவரது உடம்பு குளிர்ந்திருக்கின்றது (ஹதீஸ்).*

- **குர்பான் அறுத்துப் பலியிடல்.** மரணித்தவர்களுக்காக அறுக்கப்படும் குர்பானியின் நன்மைகளும், அவர்களைப் போய்ச் சேர்கின்றன என்பதற்குரிய ஆதாரமாக பின்வரும் நபியவர்களின் செயல் முறையைக் கூறலாம். ஒரு முறை *நபி (ஸல்) அவர்கள் குர்பானியை அறுக்க முற்படும் போது, பின்வருமாறு கூறி அறுத்தார்கள். இறைவா! இது எனக்காகவும், எனது சமுதாயத்தில் குர்பான் கொடுக்காதவர்களுக்குமாக அறுக்கப்படும் குர்பானியாகும் (அஹ்மத், அபூதாவுத், திர்மிதி).* வேறொரு அறிவிப்பில் *நபி (ஸல்) அவர்கள் இரு ஆடுகளை அறுத்துப் பலியிடும் போது, பின்வருமாறு கூறி அறுக்கின்றார்கள். இறைவா! இது எனது சமுதாயத்திலுள்ள அனைத்து மக்களுக்குமாக அறுக்கப்படும் குர்பானியாகும் (அஹ்மத்).* அறுத்துப் பலியிடுதல் எனும் போது, அதனை அறுத்து அதனது இரத்தத்தை ஓட்டுவதையே குறிக்கும். எனவே அதனை உயிருடனிருப்பவர்களுக்குத்தான் செய்ய வேண்டும் என்பதுடன், மேற்கூறப்பட்ட நபியவர்களின் செயலுக்கேற்ப மரணித்தவர்களுக்கும் செய்யலாம் என்பது தெளிவாகின்றது.
- மேற்கூறப்பட்டவை தவிர்ந்த தொழுகை, நோன்பு போன்றவைகளின் நன்மைகளும் மரணித்தவர்களுக்குப் போய்ச் சேர்கின்றனவா? என்பதில் அறிஞர்களுக்கு மத்தியில் கருத்து வேற்றுமை இருந்த போதிலும், சரியான கருத்துப்படி நோன்பினுடைய நன்மை மாத்திரமே அவர்களைப் போய்ச் சேரும். அது பற்றி நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறு

கின்றார்கள். ***யார் தனக்கு நோன்பு கடமையாயிருக்கு போது, அதனை நோற்காமல் மரணிக்கின்றாரோ, அவரு குப் பதிலாக அவரது பொறுப்புதாரி அந்நோன்பை நோற்று கொள்ளட்டும் (புகாரி,முஸ்லிம்).***

- **குர்ஆன் ஓதுதல்**. ஒரு கூட்டத்தினரை கூலிக்கழைத்து குர்ஆன் ஓதச் செய்து அதனது நன்மையை ம ணித்தவருக்குச் சேர்ப்பதைப்பற்றிய எவ்வித ஆதா ரமும் கிடையாது. பொதுவாக குர்ஆனை கூலி கொடுத்து ஓதச் செய்வதே தடுக்கப்பட்டதாகும் இதில் அறிஞர்களுக்கு மத்தியில் எவ்வித கருத்த வேறுபாடும் கிடையாது. மேலும் தனது கப்றடியில் குர்ஆன் ஓதுபவர்களுக்கு இவ்வளவு தொகையை கொடுக்கும்படி, தனது மரண வேளையில் குடும்பத் தினரிடம் கூறுவதும் கூடாது. மேலும் கப்றடிகளில் மையித்தை அடக்கும் போதோ, அடக்கிய பின் னரோ குர்ஆன் ஓதுவதை அபூஹனீபா, மாலிக், அஹ்மத் (ரஹ்) போன்ற அறிஞர்கள் வெறுத்திருக் கின்றனர். மேலும் கப்றில் அடக்கப்பட்டிருப்பவருக்கு அவ்விடத்தில் சென்று குர்ஆன் ஓதி அதன் நன் மையை சேர்ப்பதற்கும் இஸ்லாத்தில் எவ்வித ஆதா ரமும் கிடையாது.

## கப்றுகளைத் தரிசித்தல்.

இஸ்லாதின் ஆரம்ப கட்டத்தில் மனிதர்கள் கப்றுகளை தரிசிப்பதன் மூலம் அல்லாஹ்வுக்கு இணை கற்பித்து விடு வார்கள் என்பதனைப் பயந்ததன் காரணமாக, கப்றுகளை தரிசிப்பதை நபியவர்கள் தடுத்திருந்தார்கள். நாளடைவில் மக்கள் உள்ளங்களில் தவ்ஹீத் நிலைகொண்டதன் பின், அதற்கு அனுமதி வழங்கினார்கள். அவ்வாறு அனுமதி வழங்கப்பட்ட ஹதீஸ்களில் சிலதைப் பார்ப்போம். நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***நான் உங்களுக்கு கப்று களை தரிசிப்பதனை தடுத்திருந்தேன். தற்போது, யார் அதனை தரி***

*சிக்க விரும்புகின்றாரோ, அவர் தரிசித்துக் கொள்ளட்டும். அதனை தரிசிக்கும் போது, (மரணித்தவரைப் பற்றிய) மோசமான வார்த்தை களை உபயோகித்துக் கொள்ளவும் வேண்டாம் (அஹ்மத்,நஸயீ).* மேலும் கூறுகின்றார்கள். *நீங்கள் கப்றுகளை தரிசித்துக் கொள் ளுங்கள். அவ்வாறு தரிசிப்பது உங்களுக்கு மறுமையை ஞாபகப் படுத்தும் (முஸ்லிம்).*

கப்றுகளைத் தரிசிக்கச் செல்பவர்கள் கூற வேண்டிய ஸலாத்தையும், அவர்களுக்காக கேட்க வேண்டிய பிரார்த் தனையையும் பற்றி வந்த ஹதீஸ்களில் பின்வருபவைக ளைக் குறிப்பிடலாம். ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக் கின்றார்கள். *நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு இரவின் கடைசிப் பகுதியிலும் மதீனா மையவாடிக்குச் சென்று பின்வருமாறு கூறு வார்கள். அஸ்ஸலாமு அலைக்கும் தார கவ்மின் முஃமினீன், வஅதாகும் மா தூஅதூன், கதான் முஅஜ்ஜலூன், வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன், அல்லாஹும்மக்பிர் லிஅஹ்லி பகீயில் கர்கதி (முஸ்லிம்).* பொருள். *விசுவாசிகளே! உங்கள் மீது அல் லாஹ்வின் சாந்தி உண்டாகட்டும். உங்களுக்கு அல்லாஹ்வினால் கொடுக்கப்பட்ட வாக்கு முன்கூட்டியே வந்து விட்டது. நாமும் உங்களுடன் வந்து இணைந்து கொள்வோம், இறைவா! இம்மைய வாடியில் அடக்கப்பட்டிருப்போரது பாவங்களை மன்னித்தருள்வா யாக.* மேலும் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக் கின்றார்கள். *நபி (ஸல்) அவர்கள் மதீனாவிலுள்ள கப்றுகளுக் குப் பக்கத்தால் செல்லும் போது, அவர்களின் பக்கம் திரும்பி, அஸ்ஸலாமு அலைக்கும் யா அஹ்லல் குபூறி, யக்பிருல்லாஹு லனா, வலகும். வஅன்தும் ஸலபுனா, அநஹ்னு பில் அசர் என்று கூறுவார் கள் (அஹ்மத்,திர்மிதி).* பொருள். *கப்றுவாசிகளே! உங்கள் மீது அல்லாஹ்வின் சாந்தி உண்டாகுவதுடன், எங்களதும், உங்களதும் பாவங்களை அவன் மன்னிப்பானாக.! நீங்களோ எங்களை முந்தி விட்டீர்கள். நாம் உங்கள் பின்னால் வருவதற்குக் காத்துக்*

*கொண்டிருக்கின்றோம்.* மேற்கூறப்பட்ட ஹதீஸ்களின் மூலம் கப்றுகளைத் தரிசிக்கச் செல்பவன் மரணத்தையும், மறுமையையும் ஞாபகித்துக் கொள்வதுடன், அதன் மூலம் படிப்பினையும் பெற்று, மரணித்தவர்களுக்காக பிரார்த்தனை, பாவமன்னிப்பு, சுபீட்சமான வாழ்வு போன்றவைகளையும் அல்லாஹ்விடம் வேண்டிக் கொள்ள வேண்டும்.

## ஆகுமாக்கப்பட்ட கப்று தரிசனம்.

அதாவது மேற்கூறப்பட்ட நபி மொழிகளுக்கேற்ப மறுமையை ஞாபகப்படுத்தி, படிப்பினை பெறுவதற்கும், மரணித்த முஸ்லிம்களுக்காக பிரார்த்திப்பதற்காகவும் நபிவழி காட்டலினடிப்படையில் கப்றுகளை தரிசிக்கச் செல்வதையே ஆகுமாக்கப்பட்ட கப்று தரிசனம் எனக் கூறப்படும்.

## தடுக்கப்பட்ட கப்று தரிசனம்.

தடுக்கப்பட்ட கப்று தரிசனம் எனும் போது அதனை இரு வகைப்படுத்தலாம்.

1. வெறுக்கப்பட்ட பித்அத்துகளடங்கிய கப்று தரிசனம். அதாவது அல்லாஹ்வுக்குச் செய்யப்படும் வணக்கங்களை கப்றுகளிடத்தில் சென்று நிறைவேற்றுவதன் மூலம், பள்ளியில் நிறைவேற்றுவதை விட ஏற்றமானதென கருதுதல். உதாரணமாக: தொழுவதற்காகவோ, பிரார்த்திப்பதற்காகவோ, நபியுடைய, அல்லது நல்லடியாருடைய கப்றடிக்குச் செல்வதைக் குறிப்பிடலாம். இவ்வாறு செல்வது தடுக்கப்பட்டவைகளிலுள்ளதாகும். இதனை விடவும் மோசமானது யாதெனில், பரகத் பெறும் நோக்கில் கப்றுகளை தொட்டு முத்தமிட்டு, அதனை வலம் வருதல் போன்ற விடயங்களில் ஈடுபடுவதாகும். எனவே இவ்வாறு செய்வது நபி வழிகாட்டலுக்கு, மாறானதென்பதுடன், அவ்வாறு செய்வதற்கு தீமைகளும் எழுதப்படுகின்றது. மேலும் அவ்வாறானவைகளைச் செய்வது, இணையின் பால் இட்டுச் செல்

லும் என்ற காரணத்தினால், மார்க்க அறிஞர்கள் அனைவரும் ஒருமித்த கருத்தாக அதனை தடுத்துள்ளார்கள். எனவே மக்காவிலுள்ள மகாம் இப்ராஹிம், மதினாவிலிருக்கும் நபியவர்களின் வீட்டுச் சுவர், நபியவர்களின் கப்று, அல்அக்ஸா பள்ளியிலுள்ள கல், அறபா மலை, அதன் மேல் கட்டப்பட்டிருக்கும் கட்டிடம், மஷ்அருல் ஹராம் போன்ற இடங்களை தொடுவதும், முத்தமிடுவதும் அல்லாஹ்வினால் படைக்கப்பட்ட ஒன்றை வணங்குவதற்கு ஈடாகின்றதென்ற காரணத்தால், அவை அனைத்தும் தடுக்கப்பட்டிருக்கின்றது. நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***எமது இம்மார்க்கத்தில் இல்லாத ஒன்றை யாராயினும் புதிதாக ஏற்படுத்தினால், அது ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது (புகாரி,முஸ்லிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***நாங்கள் கூறாத ஒன்றை யாராயினும் செய்தால், அது ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது (முஸ்லிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***மார்க்கத்தில் புதிதாக சில விடயங்களை உருவாக்குவதையிட்டு, உங்களை நான் எச்சரிக்கின்றேன். ஏனெனில் புதிதாக உருவாக்கப்பட்டவைகள் அனைத்தும் பித்அத்துக்களாகும். பித்அத்துக்கள் அனைத்தும் வழிகேடுகளாகும் (அபூதாவுத்,நஸயீ).*** எனவே கஃபாவிலுள்ள ருக்குனுல் யாமானி, ஹஜருல் அஸ்வத் ஆகிய இரு கற்களை தொடுவதற்கும், அதிலும் ஹஜருல் அஸ்வத் கல்லை முத்தமிட்டுக் கொள்வதற்கும், கஃபாவை மாத்திரம் தவாப் செய்து கொள்வதற்கும் தான், இஸ்லாம் நமக்கு அனுமதியளித்திருக்கின்றது, என்பதையும் இவை தவிர்ந்த அனைத்தும் இஸ்லாத்தில் புதிதாக சேர்க்கப்பட்டவைகள் என்பதனையும் நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

## கப்றுடன் தொடர்புடைய ஹறாமான விடயங்கள்.

கப்றுகளை பள்ளிகளாகவோ, கொண்டாடப்படும் இடங்களாகவோ, அதிலே விளக்கேற்றுவதையோ, அல்லது கட்டிடம் அமைப்பதையோ, அதிலே எழுதுவதையோ, வெளளை அடிப்பதையோ, திரையிடுவதையோ, அதன்பக்கம் திரும்பி தொழுவதையோ, இஸ்லாம் நமக்கு அனுமதிக்கவில்லை. மாற்றமாக அவைகள் அனைத்தையும் செய்ய வேண்டாம் என தடுத்து நிறுத்தியிருப்பதுடன், கப்றிலே கட்டப்பட்டிருக்கும் குப்பாக்களையும், அதிலே எழுதப்பட்டிருப்பவைகளையும், அழித்து விடும்படியும் பணித்திருக்கின்றது. அதே போன்று கப்றடியில் வந்து உட்கார்ந்து கொள்ளல், திரைகளை மாட்டிவிடல், அவ்விடத்தில் அறுத்துப் பலியிடல், உணவுப் பொருட்களைக் கொண்டு வந்து அதனை தரிசிக்க சென்றிருப்பவர்களுக்கு பங்கிடல் நேர்ச்சை வைத்தல், அவ்விடத்தில் சங்கீதமிசைத்து மேளம் கொட்டல் போன்ற அனைத்து விடயங்களையும் இஸ்லாம் தடுத்து, அவை அனைத்தும் பித்அத் எனக்கூறி சட்டம் வகுத்துள்ளது.

எனவே மேற்கூறப்பட்டவைகள் அனைத்தும் தடுக்கப்பட்ட பித்அத்துக்களிலுள்ளவை என்பதற்குரிய சில ஆதாரங்களைப் பார்ப்போம். ***நபி (ஸல்) அவர்கள் மரணிப்பதற்கு ஐந்து நாட்களுக்கு முன்பாக பின்வருமாறு கூறுகின்றார்கள். அறிந்து கொள்ளுங்கள், உங்களுக்கு முன்னுண்டான சமூகத்தவர்கள். அவர்களது நபிமார்களதும், நல்லடியார்களதும், கப்றுகளை வணக்கஸ்தலங்களாக எடுத்துக் கொண்டார்கள். எனவே நீங்களும் அவ்வாறு கப்றுகளை வணக்கஸ்தலங்களாக எடுத்துக் கொள்ளாதீர்கள் எனக் கூறி உங்களை தடுக்கின்றேன் என்றார்கள் (முஸ்லிம்).*** வணக்கஸ்தலம் என்பது, அல்லாஹ்வை மாத்திரம் வணங்கக்கூடிய இடமாகும். எனவே யார் கப்றிடத்திலோ, அதன் பக்கம் திரும்பியோ வணங்குகின்றானோ, அவன் அதனை வணக்கஸ்தலமாக எடுத்துக் கொண்டான்

என்ற கருத்தையே கொடுக்கின்றது. மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***உங்களுடைய வீடுகளை கப்றுகளாக ஆக்கிக் கொள்ளாதீர்கள், மேலும் எனது கப்றை கொண்டாட்டத்துக்குரிய இடமாகவும் அமைத்துக் கொள்ளாதீர்கள். நீங்கள் எங்கிருந்து எனக்கு ஸலவாத் சொன்ன போதிலும் அது என்னை அடைந்து விடுகின்றது (அபூதாவுத்).***

மேற்கூறப்பட்ட ஹதீஸில், ***உங்களுடைய வீடுகளை கப்றுகளாக ஆக்கிக் கொள்ளாதீர்கள்***, என்பதிலிருந்து இரு சட்டங்கள் எமக்குக் கிடைக்கின்றன. 1)மார்க்கம் அனுமதித்த காரணமின்றி, பர்ளான தொழுகைகளை சக்தியுள்ள ஆண்கள் பள்ளி சென்று ஜமாஅத்துடன் தொழுது கொள்வதுடன், நபில் தொழுகை, திக்ரு, குர்ஆன் ஓதுதல், சுன்னத்தான தொழுகைகள் போன்றவைகளை வீட்டிலே செய்து கொள்வது சிறந்ததாகும் என்பதனை அறிவிக்கின்றது. 2)மரணித்தவர்கள் அடக்கப்படும் மையவாடிகள், தொழுவதற்கோ, குர்ஆன் ஓதுவதற்கோ உரிய இடமல்ல என்பதும் தெளிவாகின்றது.

மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***நீங்கள் கப்றின் மீது உட்காரவோ, அதை முன்னோக்கி தொழவோ வேண்டாம் (முஸ்லிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***மனிதர்களில் மிகவும் மோசமானவர்கள், மறுமை உருவாகும் காலத்தில் உயிருடன் இருப்பவர்களும், கப்றுகளை வணக்கஸ்தலங்களாக எடுத்துக் கொள்பவர்களுமாகும் (அஹ்மத், சஹீஹ் அபீஹாதிம்).***

எனவே யார் கப்றுகளையும், தர்ஹாக்களையும் தொழுகைக்காகவும், பிரார்த்தனைக்காகவும், பள்ளிகளாக எடுத்துக் கொள்கின்றார்களோ, அவர்கள் அல்லாஹ்வும் அவனது தூதரும் தடுத்த ஒரு விடயத்தை செய்தவராகவும், அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பதன் பால் இட்டுச் செல்லக் கூடிய விடயத்தில் ஈடுபட்டவராகவும் ஆகிவிடுகின்றார். மேலும் கப்றுகளில் அடக்கப்பட்டிருக்கும், நபிமார்களும், நல்லடியார்களும், இவர்கள் செய்யும் இவ்வாறான பித்அத்

துக்களை கடுமையாக வெறுத்து, அதில் ஈடுபடுபவர்களை தடுத்து நிறுத்தியவர்களுமாகும் என்பதனை நாம் அறிந்து கொள்ள வேண்டும். எனவே ஈஸா (அலை) அவர்கள் கிரிஸ்தவர்கள் செய்வதையும், வேறு சில நபிமார்கள் யூதர் கள் செய்வதையும் வெறுத்து வந்தார்கள்.

மேலும் கப்றுகளை கொண்டாட்டத்துக்குரிய இடங்களா கவும், விக்ரகங்களாகவும், எடுத்துக் கொள்வதை தடுத் திருப்பது, அவைகளை கண்ணியப்படுத்துவதை தடுப்பதற் காகவல்ல, மாற்றமாக அவைகளில் ஈடுபடும் போது, நபி (ஸல்) அவர்கள் காட்டிய வழிமுறைகள் புறக்கணிக்கப் பட்டு மறக்கடிக்கப்படுகின்றன என்ற காரணத்தினாலாகும். மேலும் உயர்த்தப்பட்ட கப்றுகளும், குப்பாக்களும் தரைமட்டமாக்கப்பட வேண்டும் என, பின்வரும் ஹதீஸ் பிரகடனப்படுத்திக் கொண்டிருக்கின்றது. அபூ அல் ஹய் யாஜ் அல் அசதி அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***அலி (ரலி) அவர்கள் என்னை ஒரு பிரயாணத்தில் பின்வருமாறு கூறி அனுப்பு கின்றார்கள். நபி (ஸல்) அவர்கள் என்னை ஒரு பிரயாணத்தில் அனுப்பும் போது, அலியே! உயர்த்தப்பட்ட அனைத்துக் கப்றுகளை யும் தரைமட்டமாக்கியும், அனைத்து சிலைகளை அழித்தும் விடுவா யாக. எனக்கூறி அனுப்பினார்கள். நானும் அதனையே உனக்குக் கூறி அனுப்புகின்றேன் என்றார்கள் (முஸ்லிம்,திர்மிதி,நஸயீ,அபூ தாவுத்).*** மேலும் அபூ அலி அல்ஹம்தானி அவர்கள் அறி விக்கின்றார்கள். ***ரோம் நாட்டின் ஒரு பகுதியில் புலாலத் இப்னு உபைத் பர்தூஸ் என்பவருடன் இருந்து கொண்டிருந்தோம். அப்போது எங்களில் ஒருவர் மரணித்து விட, அவரை கப்றிலே இட்டு, கப்றை சமமாக்கி விட்டு, கப்றுகளை நபி (ஸல்) அவர்கள் சமப்படுத்தும் படி கூறுவதை, நான் கேட்டேன் எனக் கூறினார்கள் (முஸ்லிம், நசயீ, அபூதாவுத்).*** மேலும் அம்றுப்னு உஸ்மான் பின் ஹானி.'. அவர்கள் கூறுகின்றார்கள். ***காசிம் என்பவர் ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்று, எனது தாயே! நபி (ஸல்) அவர்களதும்,***

***அவர்களது இரு தோழர்களதும் கப்றுகளை எனக்கு சற்று காட்டுவீர்களாக எனக் கேட்டேன். அப்போது எனக்கு அவர்கள், அதிகம் உயர்த்தப்படாமலும், தரையோடு ஒட்டியும் இல்லாத, சிறு கற்களால் பரத்தப்பட்ட மூன்று கப்றுகளைக் காட்டினார்கள் (அபூதாவுத்).***

மேலும் நபி (ஸல்) அவர்களின் கப்றுக்கு மேல் கட்டப்பட்டிருக்கும் குப்பா, ஹி678ம் ஆண்டுக்கு முன்னுண் டான காலங்களில் கட்டப்படவில்லை. மாற்றமாக அதற் குப்பின் ஆட்சிக்கு வந்த லாஹிர் மன்சூரின் காலத்தில் கிரிஸ்தவர்களின் கோயில்களிலுள்ளதைப் பின்பற்றி அக் கப்றின் மேலே அக்குப்பாவை கட்டும் படி ஏவினார். மேலும் அக்கிரிஸ்தவர்களைப் பின்பற்றியே வலீது பின் அப்துல் மலிக்கின் காலத்தில் மதீனாப்பள்ளியில், கோலங்கள் வரையப்பட்டு அழகு படுத்தப்பட்டது. இப்படிப்பட்ட செயல் கள் நபி (ஸல்) அவர்களின் வழிமுறைக்கு முற்றிலும் மாற்றமானதாகும்.

எனவே நம் நாட்டுத் தலைவர்கள் நபி வழிகாட்டலின டிப்படையில் நடப்பதற்கும், பித்அத்துக்களை காலா கால மாக அழித்தொழிப்பதற்கும், எல்லாம் வல்ல அல்லாஹ் அருள் புரிய வேண்டும்.

எனவே இஸ்லாமியத் தலைவர்கள் அல்லாஹ்வினதும் அவனது தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களினதும் சொல் லுக்குக் கட்டுப்பட்டவர்களாக, அக்கப்றுகளில் இருக்கும் குப்பாக்களையும், அது தவிர்ந்த தர்ஹாக்களையும், அவை களிலிருக்கும் விளக்குகளையும், தகர்த்தெறிந்து, அவை களை வணங்கவும், வழிப்படவும், அதனை தொட்டு முத்த மிட்டு, வலம் வந்து, பரகத் பெறும் நோக்கில் வருபவர்க ளையெல்லாம் தடுத்து நிறுத்தி, அவர்களுக்கு சத்தியத் தைப் போதித்து, அல்லாஹ்வை மாத்திரம்தான் வணங்க வேண்டும் என்ற உண்மையை அவர்களுக்கு உணர்த்த பாடுபட வேண்டும்.

மேலும் கப்றுகளை உயர்த்திக் கட்டி, அதிலே எழுதி, வெள்ளை அடித்து அழகு படுத்துவதை தடுத்து வந்திருக்

கும் சில ஹதீஸ்களைப் பார்ப்போம். ஜாபிர் (ரலி) அவர்கள் பின்வருமாறு அறிவிக்கின்றார்கள். ***நபி (ஸல்)அவர்கள் கப்றின் மீது உட்காருவதையும், வெள்ளை அடிப்பதையும், அதனை கட்டி உயர்த்துவதையும் தடுத்ததை நான் கேட்டிருக்கின்றேன் (முஸ்லிம்,அபூதாவுத், திர்மிதி,நஸயீ).*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***நீங்கள் கப்றில் மீது உட்காரவோ, அதன் பக்கம் தொழவோ வேண்டாம் (முஸ்லிம்,அபூதாவுத்,திர்மிதி,நஸயீ).*** மேலும் ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***நபி (ஸல்) அவர்கள் கப்றுகளுக்கு வெள்ளையடிப்பதை தடுத்தார்கள். (இப்னுமாஜஹ்).*** மேலும் ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***நபி (ஸல்) அவர்கள் கப்றிலே எதனையும் எழுத வேண்டாம் என தடுத்திருக்கின்றார்கள் (ஹதீஸ்).*** இரு கப்றுகளை இனம் கண்டு கொள்வதற்காக கல் போன்றவற்றை அடையாளமாக வைப்பதில் தவறேதுமில்லை. அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***உஸ்மான் பின் மள்ஊனின் கப்றை ஒரு கல்லை நட்டுவது கொண்டு அடையாளமிடுவாயாக (இப்னுமாஜஹ்).***

மேலும் கப்றுகளிடத்தில் சென்று அறுத்துப் பலியிடுவது, கூடாதென்றும், அவ்வாறு செய்வது பெரிய இணையிலுள்ளவை என்றும் முன்னய பாடங்களில் கூறப்பட்டிருப்பதுடன், இன்னும் சில ஹதீஸ்களையும் கூறிக் கொள்கின்றோம். நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***கப்றுகளிடத்தில் அறுப்பது இஸ்லாத்திலுள்ளதல்ல (அபூதாவுத்).*** மேலும் கூறுகின்றார்கள். ***அல்லாஹ் அல்லாதவனுக்கு அறுப்பவனை அல்லாஹ் சபிப்பானாக (ஹதீஸ்).***

## இணை கற்பிக்கும் கப்று தரிசனம்.

கப்றுகளையும், தர்ஹாக்களையும், தரிசிக்கும் நோக்கில் சென்று, அங்கே அறுத்துப் பலியிடுதல், பிரார்த்தித்தல், உதவி கோரல், அபயம் தேடல், தனது கஷ்டங்களை நீக்கி, தேவைகளை நிறைவேற்றவும், நோய்

நிவாரணம் பெறவும், காணாமல் போனவைகளை பெற்றுத் தரும்படியும், உணவு, குழந்தை, செல்வம், போன்றவைகள் கிடைக்க அருள் புரியவும் வேண்டச் செல்வது அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய வணக்கத்தை அவனால் படைக்கப்பட்ட ஒருவனுக்கு செய்தவனாக ஆகிவிடுகின்றான். அன்றைய அறியாமைக்கால மக்களும் இவ்வாறானவைகளில் ஈடுபட்டு, இறைவனை நிராகரித்து, இணைகற்பித்து தனது நல்லமல்களையே அழித்துக் கொண்டார்கள் என்பதனை குர்ஆன், ஹதீஸ் தெளிவுபடுத்திக் கொண்டிருக்கின்றது. எனவே மேற்கூறப்பட்ட விடயங்களில் யாராவது ஈடுபட்டிருந்தால், அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரிக் கொள்ள வேண்டும்.

அவ்விடயங்களில் ஈடுபடுவது தனது நற்கிரியைகளை அழித்து விடும் என பின்வருமாறு அல்லாஹ் கூறிக் கொண்டிருக்கின்றான். ***இன்னும் அவர்கள் (அல்லாஹ்வுக்கு இணை வைத்திருந்தால், அவர்கள் செய்து கொண்டிருந்த (நன்மையான)வைகள் (யாவும்) அவர்களை விட்டு அழிந்து விடும் (6. 88).*** மேலும் கூறுகின்றான். ***மேலும் (இம்மையில்) செயலால் அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றின் பால் நாம் முன்னோக்கி, பின்னர் (அவர்கள் உலகில் விசுவாசம் கொள்ளாததால்) பரத்தப்பட்ட புழுதியாக (பலனற்றதாக) அவைகளை நாம் ஆக்கி விடுவோம் (25. 23).***

இவ்வாறு கப்றுகளுக்கும், தர்ஹாக்களுக்கும் சென்று, அவைகளை வலம் வந்து, க.:பாவை ஹஜ் செய்வது போன்று ஹஜ் செய்து, சில நாட்கள் தங்கி, அதிலடக்கப் பட்டிருப்பவர்களுக்கு தலைசாய்த்து, பாதுகாப்புக் கோரி இவ்வாறான இஸ்லாம் தடுத்த விடயங்களை செய்பவர்கள், நாம் நன்மையான காரியங்களில் தான் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றோம் என நினைத்துக் கொண்டிருந்தாலும், அவர்கள் இஸ்லாம் அனுமதிக்காதவைகளைச் செய்து வழிகேட்டிலேயே சென்று கொண்டிருக்கின்றார்கள். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***(தம்)செயல்களால்***

***பெரும் நஷ்டவாளிகள் யார்? என்பதை உங்களுக்கு அறிவிக்கட்டுமா? என்று (நபியே) நீர் கேட்பீராக! (அவர்கள்) எத்தகையோ ரென்றால், இவ்வுலக வாழ்க்கையில் அவர்களின் முயற்சி பயனற்று விட்டது. நிச்சயமாக அவர்களோ காரியங்களில் அழகானவற்றையே தாங்கள் செய்வதாக எண்ணிக்கொள்கின்றனர் (18.103—104)*** மேலும் கூறுகின்றான். ***நிச்சயமாக (விக்ரக ஆராதனை செய்யும்) இவர்கள், எதில் இருந்து கொண்டிருக்கின்றார்களோ, அது அழிந்து விடக் கூடியதும், அவர்கள் எதை செய்து கொண்டிருக்கின்றார்களோ, அது முற்றிலும் வீணானதுமேயாகும், என்று கூறினார் (7.139).***

மேலும் இணைவைத்தவர்கள், இஸ்லாத்தில் தடுக்கப் பட்டவைகளில் ஈடுபடுபவர்கள் கேட்கும் பிரார்த்தனைகளுக்கு விடையளிக்கப்படுவதைக் காணுகின்றோம். இவ்வாறு அவர்களது தேவைகள் நிறைவேற்றப்படுவது அல்லாஹ் அவர்கள் மீது கொண்ட கருணையின் காரணமாகவோ, அல்லது அவன் மீது கொண்ட அன்பின் காரணமாகவோ அல்ல, மாற்றமாக அல்லாஹ் அக்கப்றில் அடக்கப்பட்டிருப் பவர்களிடம் கேட்கும் பிரார்த்தனைகளுக்கெல்லாம் அவன் விடையளித்து, அவர்களை மேலும், மேலும் சோதித்து, அவர்களை அழிவின் பால் இட்டுச் செல்கின்றான்.

எனவே சிலர் கேட்கக் கூடாதவைகளைக் கேட்டுப் பெற்றுக்கொள்வதுடன், அதன் மூலமே அழிந்தும் போகின் றார்கள். அல்லாஹ் கூறுகின்றான். ***(ஆகவே விசுவாசிகளே) உங்கள் இரட்சகனை, மிக்க பணிவாகவும், (தாழ்ந்த குரலில்) மெதுவாகவும், உங்களுக்கு வேண்டியவைகளைக் கோரிப்பிரார்த்தனை செய்து) நீங்கள் அழையுங்கள். நிச்சயமாக அவன் வரம்பு மீறுவோரை நேசிக்க மாட்டான் (7.55).*** எனவே இன்று சிலர் அல்லாஹ்வால் தடுக்கப்பட்ட விடயங்களைச் செய்து, அல்லாஹ்விடம் பிரார்த்திக்கின்றார்கள். அல்லாஹ் அதனையும் நிறைவேற்றுகின்றான். இன்னும் சிலர் குறி, சாஸ்திரம் சொல்லக் கூடியவர்களிடம் சென்று, அவர்கள் சொல்வதை

நம்பி, அவர்களிடம் தாயத்து, நூள் போன்றவைகளை எழுதிக் கேட்டு, அதன் மூலம் நிவாரணம் பெற முற்படுகின்றார்கள். இன்னும் சிலர் தர்ஹாக்களுக்குச் சென்று அதிலுள்ள மண்ணை எடுத்து அதன் மூலம் நோயாளியின் நோயை குணப்படுத்தவோ, மலடியை பிள்ளை பெறச் செய்யவோ முற்படுகின்றார்கள். இவ்வாறான சந்தர்ப்பங்களிலெல்லாம் அல்லாஹ் அவர்களது தேவைகளை நிறைவேற்றி அவைகளை நம்பும் படி செய்து, அவர்களை சோதனைக்குட்படுத்துகின்றான். ஆக இன்று சூனியம், தாயத்து, கண்திருஷ்டி போன்றவைகளுக்குரிய தாயத்து, போன்றவைகளின் மூலம் பலர் நிவாரணம் பெறுவதைக் காணுகின்றோம். என்றாலும் அவை அனைத்தும் அல்லாஹ்வின் உத்தரவின் பேரிலே நிவாரணம் பெறுகின்றன என்பதனை நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***இன்னும் அ(ச்சூனியத்)தை எவர் விலைக்கு வாங்கிக் கொண்டாரோ, அவருக்கு மறுமையில் எந்த பாக்கியமுமில்லை என்பதைத் திட்டமாக அவர்கள் அறிந்திருக்கின்றனர். மேலும் அவர்கள் அறிந்து கொள்ளக் கூடியவர்களானால், எதற்குப்பகரமாக தங்களையே அவர்கள் விற்று விட்டார்களோ, அது மிகக்கெட்டது. இன்னும் நிச்சயமாக அவர்கள் விசுவாசங் கொண்டு (அல்லாஹ்வினால் தடுக்கப்பட்டவற்றைத் தவிர்ந்து) அஞ்சிக் கொண்டார்களானால், (அவர்களுக்குத்) திட்டமாக அல்லாஹ்விடமிருந்து கிடைக்கும் நற்கூலி மிகச் சிறந்ததாக இருக்கும். (இதுபற்றி) அவர்கள் அறிந்து கொள்வார்களானால் (மிக்க நன்று) (2. 102–103).*** மேலும் அச்சூனியக்காரர்கள், இன்னும் அவர்களைப் போன்றோர், தாம் இம்மையில் செய்யும் இவ்விடயத்தால் மறுமையில் நமக்கு எந்நன்மையும் இல்லை, நாம் நஷ்டவாளிகளாகத்தான் இருக்க வேண்டிய ஒரு இழி நிலை உருவாகும் என்பதனை அறிந்து வைத்திருக்கின்றார்கள். அதனையிட்டு அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான். ***அவர்களுக்கு இடரளிப்ப***

*தும், அவர்களுக்கு பயனளிக்காததுமானதை அவர்கள் கற்றுக் கொள்கின்றார்கள் (2.102).*

இதே போன்று கப்றுகளிடத்தில் சென்று தமது தேவைகளைக் கேட்டு, பிரார்த்திப்பவர்களுக்கும் அல்லாஹ் அவர்களது தேவைகளை நிறைவேற்றிக் கொடுத்து, அதை விட மோசமான கெடுதியையும் அவர்களுக்கு ஏற்படுத்தி வைக்கின்றான். எனவே இவ்வாறான விடயங்களில் ஈடுபடுபவர்களில் சிலர், தாம் செய்யும் இவ்விடயம் ஹராமானது என்று தெரிந்து கொண்டே செய்தால், மேற்கூறப்பட்டவாறு சூனியக்காரர்களுக்கு மறுமையில் எவ்வாறு தண்டனை வழங்கப்படுகின்றதோ,அதே தண்டனையை இவர்களும் பெற்றுக் கொள்வார்கள். அது ஹராமெனத் தெரியாது அவைகளில் ஈடுபட்டு வந்தால், அதைப்பற்றிய மார்க்க அறிவை தேடிப் படிக்கவில்லை என்ற காரணத்தால் தண்டனைக்குரியவனாகின்றான்.

எனவே நாம் தொழுகைக்காக எத்திசையை முன்னோக்குகின்றோமோ, அத்திசையின் பக்கமே முன்னோக்கி பிரார்த்திக்க வேண்டும். ஆனால் இன்று சிலர் தாம் பிரார்த்திக்கும் போது, அவர்களுடைய பெரியார்கள், வலிமார்களது கப்றுகள் எத்திசையாக இருக்கின்றதோ, அத்திசையின் பக்கம் திரும்பி பிரார்த்திக்கின்றார்கள். மேலும் அவர்களது வலிமார்கள் இருக்கும் திசையில், தமது பின்புறத்தை காட்டி நிற்பதை மிகவும் தவறான விடயமாகவும் கருதி, அவர்களின் பின்புறம் கிப்லாவின் திசையாக அமைந்த போதிலும், அதனைப் பொருட்படுத்தாது அவர்களது வலிமார்கள் இருக்கும் திசையை முன்னோக்கியவர்களாக நிற்கின்றார்கள். இவை அனைத்தும் கிறிஸ்தவர்களின் பழக்கவழக்கத்திலுள்ளதுடன், மற்றொரு வகையில் இணையாகவும் மாறுகின்றது.

## காபிர்களின் கப்றுகளை தரிசிப்பதின் சட்டம்.

முஸ்லிம்கள் படிப்பினை பெறுவதற்காக காபிர்களின் கப்றுகளை தரிசிப்பதில் எவ்விதத் தவறும் கிடையாது.

என்றாலும் அவ்வாறு தரிசிக்கச் செல்பவர்கள் அவர்களுக்கு ஸலாம் கூறுவதோ, அவர்களுக்குப் பாவமன்னிப்புக் கோருவதோ கூடாது. அதனை பின்வரும் நபிமொழி பின்வருமாறு தெளிவுபடுத்துகின்றது. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். **நபி (ஸல்) அவர்கள் தனது தாயாரின் கப்றை தரிசித்த போது, தானும் அழுது, தனக்கு சூழாலுள்ளவர்களையும் அழச் செய்து விட்டார்கள். அழுது விட்டு பின்வருமாறு கூறுகின்றார்கள். நான் இறைவனிடம் எனது தாய்க்கு பாவ மன்னிப்புக் கோர அனுமதி கேட்டேன், எனக்கு அனுமதிக்கப்படவில்லை. அதை தரிசிப்பதற்கு அனுமதி வழங்குமாறு கேட்டேன், அதற்கு மாத்திரம் அனுமதி வழங்கப்பட்டது. எனவே கப்றுகளை நீங்கள் தரிசியுங்கள், அது உங்களுக்கு மரணத்தை ஞாபகப் படுத்தும் என்றார்கள் (முஸ்லிம்).** மேலும் சாலிம் என்பவரின் தந்தை பின்வருமாறு அறிவிக்கின்றார். **ஒரு நாட்டுப்புறவாசி நபியவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே! எனது தந்தை உற்றார் உறவினர்களை சேர்ந்து நடந்தார், இது போன்ற இன்னும் எத்தனையோ நற்கிரியைகளில் ஈடுபட்டவராக வாழ்ந்து, மரணித்து விட்டார். தற்போது அவர் இருக்கும் இடம் யாதென (சுவனமா, நரகமா) வினவினார். அதற்கு நபியவர்கள், அவர் இருக்கும் இடம் நரகமாகும் என விடையளித்தார்கள். இதைக் கேட்ட அம்மனிதர் மனமுடைந்து, அல்லாஹ்வின் தூதரே! உங்களின் தந்தை எங்கேயிருக்கின்றார்? என மீண்டும் வினவினார். அதற்கவர்கள் நீ எக்கப்றின் பக்கமாக சென்றாலும், அது இணைவைத்தவரின் கப்றாக யிருந்தால், அதற்கு நரகைக் கொண்டு நன்மாறாயம் சொல்வாயாக! எனக் கூறினார்கள். மீண்டும் (சாலிம்) என்பவர் கூறுகின்றார். அதன் பின் அந்த நாட்டுப்புறவாசி இஸ்லாத்தை ஏற்று, அல்லாஹ்வின் தூதர் எனக்கு ஒரு கடினமான பணியை ஒப்படைத்திருக்கின்றார். அதாவது நான் காபிர்களின் கப்றின் பக்கமாக சென்றால்,**

*அவர்களுக்கு நரகைக் கொண்டு நன்மாறாயம் கூற வேண்டும் என்றார்கள் (இப்னுமாஜஹ்).*

**பெண்கள் கப்றுகளை தரிசிப்பதினதும், ஜனாஸாவை பின் தொடர்வதினதும் சட்டம்.**

பெண்கள் கப்றுகளை தரிசிப்பதோ, அதனை பின் தொடர்ந்து செல்வதோ கூடாதென பல ஹதீஸ்கள் தெளிவு படுத்திக் கொண்டிருக்கின்றன. அவைகளில் சிலதைப் எடுத்து நோக்குவோம். இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***நபி (ஸல்) அவர்கள், கப்றுகளை தரிசிக்கும் பெண்களையும், அவைகளை பள்ளிகளாகவும், விளக்கேற்றும் இடங்களாகவும் மாற்றிக் கொள்ளும் பெண்களையும் சபித்திருக்கின்றார்கள் (அஹ்மத்,அபூதாவுத்,நஸயீ,திர்மிதி).*** மேலும் அபூ ஹு"ரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். ***நபி (ஸல்) அவர்கள் கப்றுகளை தரிசிக்கும் பெண்களை சபித்தார்கள் (அஹ்மத்,இப்னுமாஜஹ்,திர்மிதி)*** மேலும் ஜனாஸாவை பெண்கள் தொடர்ந்து செல்வது கூடாது என்பதனை, பின்வரும் நபி மொழி தெளிவுபடுத்துகின்றது. நபி (ஸல்)அவர்கள் பாதிமா (ரலி) அவர்களைப் பார்த்து பின்வருமாறு கூறுகின்றார்கள். ***நீ மக்காவில் ((குதய்) என்ற இடத்துக்கு அப்பாலிருக்கின்ற கப்றை தரிசிப்பதற்காக) குதய் என்ற இடத்திற்கு மாத்திரம் சென்று (அதற்கப்பால் உன்னால் செல்ல முடியாதிருந்தாலும்) இவ்வாறான விடயங்கள் (ஏதோவொன்றை குறிப்பிட்டு அவைகள்) நடக்கின்ற வரைக்கும் சுவனத்தை நுழைய மாட்டாய் என்றார்கள் (புகாரி,முஸ்லிம்).***

மேலும் இப்னு தைமியா அவர்கள் கூறும் போது, பின் வருமாறு கூறுகின்றார்கள். அறிஞர்களில் சிலர் பெண்களும் ஆண்களைப் போன்று கப்றுகளை தரிசிக்கலாம் என நினைத்து, அதற்கு ஆதாரமாக பின்வரும் பொதுவான நபி மொழியை கூறுகின்றனர். நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***நீங்கள் அக்கப்றுகளைத் தரிசியுங்கள், அது உங்களுக்கு மறுமையை ஞாபகப்படுத்தும் (ஹதீஸ்).*** ஆனால் மேற்கூறப்

பட்ட ஹதீஸை சிறந்த முறையில் ஒருவன் சிந்தித்தால், பெண்கள் அதில் உள்ளடக்கப்படமாட்டார்கள் என்பதனை புரிந்து கொள்வான். அவ்வாறு பெண்கள் உள்ளடக்கப்பட மாட்டார்கள் என்பதற்குரிய காரணங்களைப் பார்ப்போம்.

- ***நீங்கள் தரிசியுங்கள்.*** என்று கூறிய நபிவாக்கியம், ஆண்களை மாத்திரமே குறிக்கின்றது. இப்பொதுச் சொல்லில் பெண்களும் உள்ளடக்கப்படுவார்கள் எனும் கருத்து, மிகவும் பலவீனமானதாகும். எனவே பொதுவான நபிமொழியொன்று, பெண்கள் கப்று களை தரிசிப்பது கூடாதென்று குறிப்பிட்டு வந்த பல நபிமொழிக்கு முரண்பாடாக இருக்கவும் முடியாது. மேலும் பெரும்பாண்மையான மார்க்க அறிஞர்களின் கருத்துப்படி பொதுவாக வந்த நபி வாக்கியம், குறிப்பிட்டு வந்த நபிவாக்கியத்துக்கு பின்பு தான் வந்திருந்தாலும் கூட, குறிப்பிட்டு வந்திருப்பதை, பொதுவானது மாற்றி வைக்கவும் மாட்டாது. மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறியிருக்கின்றார்கள். ***யார் மையித்துத் தொழுகையில் கலந்து கொள்கின்றாரோ, அவருக்கு ஒரு கீராத் நன்மையும், அதை தொடர்ந்து சென்று, அடக்கும் வரை இருப்பவர்களுக்கு இரு கீராத் நன்மையும் கிடைக்கும் (ஹதீஸ்).*** மேற்கூறப்பட்ட நபி வாக்கியத்திலும், ***யார்*** என்ற சொல் ஆண்களையும், பெண்களையும் பொதுவாகக் குறிக்கும். என்றாலும் சஹீஹான ஹதீஸ்கள், பெண்கள் மையித்தை பின் தொடர்ந்து செல்வது தடுக்கப்பட்டுள்ளதென்று கூறியிருப்பதால், அவர்களுக்கு பின்தொடர்ந்து செல்வது தடை விதிக்கப்பட்டுள்ளது.
- ***நீங்கள் தரிசியுங்கள்*** என்ற வசனத்தில் பெண்களும் உள்ளடக்கப்படுவார்கள் என்றிருந்தால், அவர்களுக்கும் கப்றுகளை தரிசிப்பது ஆகுமாக்கப்பட்டிருக்கும். ஆனால் எந்த மார்க்க அறிஞரும் பெண்கள் கப்றுகளை தரிசிப்பதனை ஆகுமாக்கவில்லை. மேலும்

நபியவர்களின் காலத்திலோ, குலபாஉர்ராஷிதீன் கள் காலத்திலோ, பெண்கள் கப்றுகளை தரிசிக்கச் சென்றார்கள் என்பதற்கும் எவ்வித ஆதாரமு மில்லை. பெண்களும் தரிசிக்கச் செல்லலாம் என்று கூறும் கூட்டத்தினர் பின்வரும் ஹதீஸை ஆதாரமா கக் கொள்கின்றார்கள். ***ஆயிஷா (ரலி) அவர்கள் ஊரி லில்லாத போது, மரணித்த தனது சகோதரர் அப்துர் ரஹ்மானின் கப்றை தரிசித்து விட்டு, நீ மரணித்த வேளை யில் நான் உன்னை பார்த்திருந்தால், தற்போது உன்னை தரிசிக்க வந்திருக்க மாட்டேன் எனக் கூறினார்கள் (ஹதீஸ்).*** மேற்கூறப்பட்ட ஹதீஸில் வந்திருப்பதின் படிக்கும், பெண்கள் கப்றுகளை தரிசிப்பதற்குரிய ஆதாரம் இல்லை. மேலும் கப்றுகளை தரிசிப்பதை விட அதற்காக தொழுகை நடத்துவதே மிகவும் முக்கியமானதாகும். என்றாலும் ***பெண்கள் மையித்தை யின் தொடர்வதை நபி (ஸல்) அவர்கள் தடுத்திருக்கின் றார்கள் (புகாரி).*** எனவே பெண்களுக்கு அத்தொழு கையில் கலந்து கொள்வதற்கே சந்தர்ப்பம் அளிக் கப்படாத போது, எவ்வாறு கப்றுகளை தரிசிப்ப தற்கு அனுமதி வழங்கப்படும்.

- மேலும் நபி (ஸல்) அவர்கள் கப்றுகளை தரிசிக் கும் பெண்களை சபித்திருக்கின்றார்கள் என இரு ஹதீஸ்கள் ஆதாரபூர்வமாக வந்திருக்கின்றன. எனவே அனுமதிக்கப்பட்டதை கூறும் ஹதீஸ், இந்த ஹதீஸ்களை மாற்றிவிடும் எனக்கூறினால், அதற்கு ரிய பதில் மேற்கூறப்பட்ட வசனத்தில், பெண்கள் உள்ளடக்கப்படமாட்டார்கள் என்பதாகும். மேலும் நபி (ஸல்) அவர்கள் ***கப்றுகளை அதிகமாகத் தரிசிக் கும் பெண்களை, அல்லது கப்றுகளை தரிசிக்கும் பெண்களை அல்லாஹ் சபிப்பானாக.*** எனக் கூறியிருப்பது பெண் களை மாத்திரமே குறிப்பிட்டு வந்திருக்கின்றது.

ஆனால் ***நீங்கள் தரிசியுங்கள்*** எனக்கூறப்பட்ட வசனத்தில் மேற்கூறப்பட்ட காரணங்களுக்காக, பெண்கள் எவ்வகையிலும் உள்ளடக்கமாட்டார்கள் என்பது தெள்ளத்தெளிவானதாகும். அல்லது ***கப்றுகளை தரிசிக்கும் பெண்களை அல்லாஹ் சபிப்பானாக*** எனக் கூறப்பட்ட ஹதீஸும், ***அதனைத் தரிசியுங்கள்*** என அனுமதி வழங்கப்பட்ட ஹதீஸுக்கு பிறகே கூறப்பட்டிருக்கலாம். அதற்குரிய ஆதாரமாக அதனை பள்ளிகளாகவும், விளக்கேற்றும் இடங்களாகவும் எடுத்துக் கொள்ள வேண்டாம் என இணைத்தே கூறப்பட்டிருப்பதைக் குறிப்பிடலாம்.

மேலும் பெண்கள் கப்றுகளை தரிசிப்பது தடுக்கப்பட்டதல்ல, மாற்றமாக வெறுக்கப்பட்டதொன்றாகும் எனக்கூறுபவர்கள், பெண்கள் கப்றுகளை தரிசிப்பதனை சபித்து வந்திருக்கும் ஹதீஸ்கள் ஹராத்தைக் குறித்தும், அனுமதித்து வந்த ஹதீஸ்கள் ஹராமாக்கப்பட்ட சட்டத்தை மாற்றியமைத்து விட்டதெனவும் கூறுகின்றனர். அதனை உறுதிப்படுத்த பின்வரும், உம்மு அதிய்யா அவர்களுடைய சொல்லை ஆதாரமாகக் கொள்கின்றார்கள். உம்மு அதிய்யா அவர்கள் கூறுகின்றார்கள். ***நாம் மையித்தை பின் தொடர்ந்து செல்வதை விட்டும் தடுக்கப்பட்டோம், என்றாலும் எங்களுக்கு அதனை உறுதியாகச் சொல்லப்படவில்லை. கப்றுகளை தரிசிப்பதும், பின்தொடர்வதைப் போன்றது தான், ஆக அவ்விரண்டும் வெறுக்கப்பட்டவையே தவிர தடுக்கப்பட்டவையல்ல.*** மேலும் சிலர், ஹதீஸில் சபிக்கப்பட்டிருப்பது கப்றுகளை அதிகமாகத் தரிசிப்பவர்களைத்தான், வருடத்தில் ஒரு முறை தரிசிப்பவர்களையல்ல, எனவே அவ்வாறு ஏதோ ஒரு நாள் சென்று தரிசித்துக் கொள்ளலாம் என்ற அடிப்படையில் கூறுகின்றனர்.

கப்றுகளை தரிசிக்கச் செல்வது ஹராம் எனக் கூறும் கூட்டத்தினர், மேற்கூறப்பட்ட காரணங்களுக்கு பின்வருமாறு விளக்கமளிக்கின்றார்கள். மேற்கூறப்பட்ட வசனத்தில் கூறப்

பட்டிருக்கும் ***அதிகமாகத் தரிசிக்கும் பெண்கள்*** என்பது, அவ்வாறு அதிகமாக கப்றுகளைத் தரிசிக்கும் பெண்களைத் தான் கூறப்பட்டிருக்கின்றதென வைத்துக் கொண்டாலும், அதிலே இவ்வாறு தரிசித்தால் ஹறாம், இவ்வாறு தரிசித்தால் ஹறாமாக மாட்டாது என்பதனை அறிவிப்பதற்கு எவ்வித அறிகுறியும் கிடையாது. மாற்றமாக கப்றுகளைக் தரிசிக்கும் பெண்களை பொதுவாகவே சபித்து கூறப்பட்டிருக்கின்றது. மேலும் பெண்கள் மரணம் அறிவிப்பதும் ஹறாமாகும் அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் கப்றுகளைத் தரிசிக்கச் சென்ற பெண்களைப் பார்த்து பின்வருமாறு கூறுகின்றார்கள். ***நீங்கள் கூலி கொடுக்கப்படாத நிலையில் (ஆண்களை விட்டும்) நீங்கிச் செல்லுங்கள். (இவ்வாறு தரிசிக்க வருவதால்) நீங்கள் உயிரோடுள்ளவர்களை நாசப்படுத்தி, மரணித்தவர்களை நோவினை செய்கின்றீர்கள் (ஹதீஸ்).*** மேலும் நபி (ஸல்) அவர்கள் பாதிமா (ரலி) அவர்களைப் பார்த்து பின்வருமாறு கூறுகின்றார்கள். ***நீ மக்காவில் ((குதய்) என்ற இடத்துக்கு அப்பாலிருக்கின்ற கப்றை தரிசிப்பதற்காக ) குதய் என்ற இடத்திற்கு மாத்திரம் சென்று (அதற்கப்பால் உன்னால் செல்ல முடியாதிருந்தாலும்) இவ்வாறான விடயங்கள் (ஏதோவொன்றை குறிப்பிட்டு அவைகள் ) நடக்கின்ற வரைக்கும் சுவனத்தில் நுழைய மாட்டாய் என்றார்கள் (புகாரி,முஸ்லிம்).*** எனவே மேற்கூறப்பட்ட இரு ஹதீஸ்களும் பெண்கள் ஜனாஸாவைத் தொடர்ந்து செல்லக் கூடாது என்பதனை உறுதிப்படுத்துகின்றது.

மேலும் உம்மு அதிய்யா அவர்கள் கூறிய, ***(என்றாலும் எங்களுக்கு அதனை உறுதியாகச் சொல்லப்படவில்லை)*** என்ற சொல்லை, ஒரு வேளை உறுதியாக தடுக்கப்படவில்லை என்ற கருத்தில் கூறியிருக்கலாம். அப்படியிருந்தாலும் ஹறாமில்லை என்பதற்கு அதில் எவ்வித சான்றும் இல்லை. அல்லது ஹறாமாக்கப்பட்ட முறையில் தடுக்கவில்லை என எண்ணியிருக்கலாம். எப்படியிருந்தாலும், நபியவர்கள் கூறியதையே நாம் ஆதாரமாகக் கொள்ள வேண்டும். மேலும்

நபி (ஸல்) அவர்கள் ஆண்களுக்கு அனுமதி வழங்கியது அது அவர்களுக்கு மறுமையை ஞாபகப்படுத்தும் என்ற காரணத்துக்காகும். எனவே அவ்வாறு பெண்களுக்கும் அனுமதி வழங்கினால், தனது கவலையை அடக்கிக் கொள்ள முடியாமல் மனமுடைந்து, அழுது ஒப்பாரி வைத்தும், அங்கே சமூகமளித்திருக்கும் ஆண்களை தனது பேச்சினாலும், அழகாலும் நாசப்படுத்தியும் விடுவார்கள். அதனடிப்படையில் தான் மேற்கூறப்பட்ட ஹதீஸில் தடுக்கப் பட்டிருக்கின்றார்கள்.

மேலும் இஸ்லாம் ஒரு விடயத்தைத் தவிர்த்து அதனை ஏன் தடுத்ததென்ற காரணத்தைத் தெளிவு படுத்தாதிருந்தால், அதனையிட்டு ஆராய்ந்து கொண்டிருக்காமல் அதனை ஏற்று நடக்க வேண்டும். இதனடிப்படையில் பெண்கள் கப்றுகளைத் தரிசிக்கச் செல்வதே அங்கு அடக்கப் பட்டிருப்பவர்களுக்காக பிரார்த்தனை செய்வதற்காகும், எனவே அவர்கள் அங்கு செல்வதால் மேற்கூறப்பட்ட பிரச்சினைகள் ஏற்பட வாய்ப்பு வசதிகள் இருக்கின்றதென்பதால், தமது வீடுகளிலிருந்து கொண்டே அவர்களுக்காக பிரார்த்தித்துக் கொள்ளலாம். இதனால் தான் சில மார்க்க சட்ட வல்லுனர்கள், பெண்கள் கப்றுகளைத் தரிசிப்பதற்காக மையவாடிகளுக்குச் செல்வதன் மூலம், தனது அழகு, பேச்சு போன்றவைகள் வெளியாகி பிரச்சினையை ஏற்படுத்தும் என்பதனை அறிந்திருப்பாளேயானால், அவள் அங்கு செல்வது ஹராமாகும் எனக் கூறியிருக்கின்றார்கள்.

### கப்றுகளை தரிசிக்கப் பிரயாணம் செய்தல்.

நபிமார்களது, அல்லது நல்லடியார்களது, அல்லது வேறு யாருடைய கப்றுகளாக இருந்த போதிலும், அவைகளை தரிசிப்பதற்கு பிரயாணம் மேற்கொள்வதை நபி (ஸல்) அவர்கள் அனுமதிக்கவில்லை. மேலும் நபி (ஸல்) அவர்களின் வழி முறையை அணுவணுவாய் பின் பற்றிய நபித்தோழர்களும் அவ்வாறு செய்யவில்லை. மேலும் மார்க்க அறிஞர்களாவது அதனை ஆகுமானதென்று

கூறவில்லை. மாற்றமாக நபி (ஸல்) அவர்கள் மூன்று பள்ளிகளைத் தவிர ஏனைய பள்ளிகளுக்கு பிரயாணம் செய்வதைத் தடுத்திருக்கின்றார்கள். அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். *மூன்று பள்ளிகளான மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுன் நபவி, மஸ்ஜிதுல் அக்ஸா, போன்றவைகளுக்கே தவிர, (பொதி சுமந்து) பிரயாணம் செல்லக் கூடாது (புகாரி,முஸ்லிம்).*

இவ்வாறு இம்மூன்று பள்ளிகளையும் நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டுக் கூறியதன் காரணம், அவைகளில் தொழுவதால் பன்மடங்கு நன்மைகள் கிடைக்கின்றதென்பதனாலாகும். அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின் வருமாறு கூறுகின்றார்கள். *எனது இப்பள்ளியில் ஒரு தொழுகை தொழுவது, மக்காவிலுள்ள மஸ்ஜிதுல் ஹராம், தவிர்ந்த ஏனைய பள்ளிகளில், ஆயிரம் தொழுகை தொழுவதை விட சிறப்பானதாகும் (புகாரி,முஸ்லிம்).* மேலும் கூறுகின்றார்கள். *எனது இப்பள்ளியில் ஒரு தொழுகை தொழுவது, மஸ்ஜிதுல் ஹராம், தவிர்ந்த ஏனைய பள்ளிகளில், ஆயிரம் தொழுகை தொழுவதை விட சிறப்பானதாகும். மஸ்ஜிதுல் ஹராமில் ஒரு தொழுகை தொழுவது, எனது பள்ளியில் நூறு தொழுகை தொழுவதை விட சிறப்பானதாகும் (அஹ்மத்,இப்னு ஹுஸைமா,இப்னு ஹிப்பான், இப்னு மாஜஹ்).* வேறொரு அறிவிப்பில், *மஸ்ஜிதுல் ஹராமில் ஒரு தொழுகை தொழுவது, ஏனைய பள்ளிகளில் ஒரு இலட்சம் தொழுகை தொழுவதை விட சிறப்பானதாகும் (அஹ்மத்,இப்னுமாஜஹ்).*

மேலும் நபி (ஸல்) அவர்களின் கப்றையோ, அல்லது வேறு எந்தக் கப்றையோ தரிசிக்கச் செல்வது கூடுமென்றிருந்தால், நபி (ஸல்) அவர்கள் அதனை தெளிவுபடுத்தியிருப்பார்கள். மதீனாவை தரிசிக்கச் செல்வதெல்லாம் அவரது பள்ளியை தரிசிப்பதற்காகும், யாராயினும் கப்றை தரிசிக்க வேண்டும் என்ற நோக்கில் சென்றால், அவர் நபி (ஸல்) அவர்களின் வழிமுறைக்கு மாறு செய்ததுடன், அவரது வழிமுறையை புறக்கணித்தவராகவும் கருதப்படுகின்

றார். நபி (ஸல்) அவர்களது கப்றை தரிசிக்கப் பிரயாணம் செய்ய முடியுமென்றிருந்தால், நபி (ஸல்) அவர்கள் தடுத்து நிறுத்தியவைகள் அனைத்தும் நிகழ்ந்து, இன்று மனிதர்கள் செய்து கொண்டிருக்கும், அனைத்து கப்று சம்பந்தமான தடுக்கப்பட்ட விடயங்களும், நபி (ஸல்) அவர்களின் கப்றி லேயும் நடப்பதைக் காணலாம்.

இன்று சிலர் கப்றுகளை தரிசிக்கப் பிரயாணம் மேற் கொள்ளலாம் என்பதற்கு பல ஆதாரங்களை கூறி வருகின் றனர். அவர்கள் கூறும் ஆதாரங்களை நாம் சற்று ஆராய் ந்து பார்ப்போமேயானால், ஒன்று அவை பலவீனமானதா யிருக்கும், அல்லது நபி (ஸல்) அவர்களின் மீது இட்டுக் கட்டப்பட்டதாயிருக்கும். ஆதலால் தான், தாரகுத்னி, பைஹகி, இப்னுஹஜர், போன்ற அறிஞர்கள், அவைகளை இனங்கண்டு, தெளிவுபடுத்திக் கூறியிருக்கின்றார்கள். எனவே அவர்கள் கூறும் ஆதாரங்களில் நபி (ஸல்) அவர் கள் கூறியதாக கூறப்படும் இட்டுக்கட்டப்பட்ட சில ஹதீஸ் களைப் பார்ப்போம். நபி (ஸல்) அவர்கள் கூறியதாக பின் வருமாறு கூறுகின்றார்கள். ***யார் ஹஜ் செய்து, (மதினா சென்று) என்னை தரிசிக்க வில்லையோ, அவன் எனக்கு அநியாயம் செய்து விட்டான்.*** மற்றொரு ஹதீஸ் பின்வருமாறு கூறுகின்றது. ***யார் எனது மரணத்தின் பின் என்னை தரிசிக்கின்றானோ, அவன் என்னை உயிருடனிருக்கும் போது, தரிசித்தவன் போன்றவனா வான்.***

மற்றொரு ஹதீஸ் பின்வருமாறு கூறுகின்றது. ***என்னை யும், எனது தந்தை இப்றாஹீமையும், ஒரே வருடத்தில் தரிசிப்ப வருக்கு, அல்லாஹ்விடமிருந்து சுவனத்தைப் பெற்றுக் கொடுப்பதற்கு நான் பொறுப்பேற்றுக் கொள்கின்றேன்.*** மற்றொரு ஹதீஸ் பின் வருமாறு கூறுகின்றது. ***எனது கப்றை யாரெல்லாம் தரிசிக்கின் றாரோ, அவருக்கு எனது சிபாரிசு கடமையாகி விட்டது.*** மேற் கூறப்பட்டவைகள் நபி (ஸல்) அவர்கள் அறிவித்து விட்டுச் சென்றதென அவர்கள் கூறிய போதிலும், நபியவர்கள் அறி

வித்ததற்கு எவ்வித ஆதாரமுமில்லை. மாற்றமாக நபியவர்கள் மீது இட்டுக்கட்டி இஸ்லாத்தில் புகுத்தப்பட்டவை என்பதனை பல மார்க்க அறிஞர்கள் எடுத்துக் கூறியிருக்கின்றார்கள்.

எனவே மேற்கூறப்பட்ட ஹதீஸ்களுக்கு, இப்னு ஹஜர், உகைலி, போன்றோர், விளக்கமளிக்கையில், அவைகளை நபி (ஸல்) அவர்கள் கூறியிருக்கின்றார்கள் என்பதற்கு எவ்வித ஆதாரமுமில்லை, மாற்றமாக அவைகளை நபி (ஸல்) அவர்கள் கூறியதாகக் கூறி இட்டுக்கட்டியிருக்கின்றார்கள் எனக் கூறுகின்றனர். மேலும் இப்னு தைமியா அவர்கள் கூறும் போது, அவை இட்டுக்கட்டப்பட்டவைகள் எனக் கூறி விட்டு, அவர்கள் கூறுவது போன்று நபியவர்கள் தான் அதனை கூறிச் சென்றிருந்தால், அவர்களது தோழர்களான சஹாபாக்கள், அதனைப் பின்பற்றி மக்களுக்கும் அறிவித்துவிட்டுச் சென்றிருப்பார்கள். ஆனால் அவர்களோ அவ்வாறு செய்யவுமில்லை, செய்யுமாறு மக்களைத் தூண்டவுமில்லை. மேலும் ஒரு நாட்டுப்புற வாசி நபியவர்களின் கப்றிடம் வந்து, அல்லாஹ்வின் தூதரே உங்கள் மீது அல்லாஹ்வின் சாந்தி உண்டாகட்டும் எனக் கூறிவிட்டு, அல்லாஹ் கூறுகின்றான். ***இன்னும் நிச்சயமாக அவர்கள் தமக்குத் தாமே அநீதமிழைத்துக் கொண்டு உம்மிடம் வந்து (4.64).*** என்று உங்கள் மீது இறக்கப்பட்ட இறைவசனத்தை கேட்டு இங்கு வந்திருக்கின்றேன்,,,,,என்ற தொடர் ஹதீஸும் பல வீனமானதாகும். மேலும் பிலால் (ரலி) அவர்கள் நபியவர்களின் கப்றின் பக்கம் வந்து இவ்வாறிவ்வாறெல்லாம் நடந்து கொண்டார்கள் எனும் ஹதீஸுக்கும் எவ்வித ஆதாரமும் கிடையாதென மார்க்க அறிஞர்கள் கூறுகின்றனர். மேலும் நபியவர்களது தோழர்கள் இவ்வாறாக மார்க்கம் அனுமதிக்காத பித்அத்தான விடயங்களில் ஈடுபடுபட மாட்டார்கள் என உறுதியாகவும் கூறியிருக்கின்றார்கள்.

மேலும் ***எனக்கு அல்லாஹ்விடம் கண்ணியம் இருந்து கொண்டிருக்கின்றது எனவே அக்கண்ணியத்தின் மூலம் அல்லாஹ்விடம்,***

***வஸீலா தேடுங்கள்***. என்ற ஹதீஸ், எந்த ஹதீஸ் கிரந்தங்களிலும் இடம் பெறவில்லை. மாற்றமாக ஸுனன், முப்ததிஆத், போன்ற கிரந்தங்களில் மேற்கூறப்பட்ட ஹதீஸ் இட்டுக்கட்டப்பட்டதென்று உறுதியாகக் கூறப்பட்டிருக்கின்றது. எனவே நபியவர்ளுக்கு அல்லாஹ்விடத்தில் கண்ணியம் இருக்கின்றதென்பது உண்மை, ஆனாலும் அதனைக் கொண்டு வஸீலா தேடும்படி எந்த ஹதீஸும் எமக்கு அறிவிக்கவில்லை. ஆக எமக்குக் கிடைக்கும் நலவும், பரகத்தும், பொருத்தமும் அவர்களை பின்பற்றுவதின் மூலம் தான் கிடைக்கின்றதே தவிர, அவர்கள் கூறிச்செல்லாததை பின்பற்றுவதின் மூலமாகவல்ல என்பதனை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

மேலும் ***உங்களுக்கு சில விடயங்கள் கடினமாக இருந்தால், நீங்கள் கப்றுகளில் அடக்கப்பட்டிருப்பவர்களிடம் இலகுவாக்க கேட்டுப் பெற்றுக் கொள்ளுங்கள்***. மேலும் ***ஒரு கல்லின் மீது நீங்கள் நல்லெண்ணம் கொண்டால், அதுவும் உங்களுக்கு பிரயோஜனமளிக்கும்***. மேலும் ***ஒவ்வொரு நல்லடியாரது கப்றிலும், அல்லாஹ் ஒரு மலக்கை சாட்டி, மனிதர்கள் கேட்கும் தேவைகளையெல்லாம் நிறைவேற்றி வைக்கச் செய்கின்றான்***. இது போன்ற இன்னும் எத்தனையோ ஹதீஸ்கள், நபியவர்களின் மீது இட்டுக் கட்டப்பட்டவைகளாகும்.

மேலும் இன்னாரை தமது வலியென்றும், தமது பெரியார் என்றும் கூறி, அவர்களை வணங்கி வழிப்பட்டு வரும் கப்று வணங்கிகள், தமது வலிமார்களின் மூலம், நாம் பிரயோஜனப்படுகின்றோம் என்பதை மக்களுக்கு தெரிவிக்கும் வகையில், கப்றில் அடக்கப்பட்டிருக்கும் அவரது பெரியாரிடம் அவரது கஷ்டத்தைக் கூறிய போது, அவர் அதனை உடனே நீக்கி விட்டார் என்றும், மற்றுமொரு மனிதர், கப்றில் அடக்கப்பட்டிருப்பவரிடம், பிரார்த்தித்த போது, அவர் இவரது தேவையை நிறைவேற்றி விட்டார் என்றும், மற்றுமொருவர் நோயினால் பீடிக்கப்பட்ட போது, அதற்குரிய நிவாரணியை கப்றில் அடக்கப்பட்டிருப்பவரிடம்

கேட்ட போது, அதனை அவர் குணப்படுத்தி விட்டார் என் றும், இது போன்ற எண்ணற்ற பொய்களைக் கூறி வரு கின்றனர். இதில் கவலைக்குரிய விடயம் யாதெனில், இதைக்கேட்கும் அறிவிலிகள் உடனே அவைகளை நம்பி, அவர்கள் எவ்வாறு செய்து வருகின்றார்களோ, அதே போன்று இவர்களும் செய்து, இஸ்லாம் தடுத்து நிறுத்திய இணைகற்பிக்கக் கூடிய கூட்டத்திலுள்ளவார்களாக மாறி விடுகின்றனர். எனவே அவ்வாறான விடயங்களிலிருந்து எம்மை நாம் பாதுகாத்துக் கொள்ள எல்லாம் வல்ல அல் லாஹ் அருள் புரிவானாக.

## நபி (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது இரு தோழர்கள் மீதும் ஸலாம் கூறல்.

இன்று அதிகமானவர்கள் நினைப்பது போன்று, ஹஜ் ஜுக் காலத்திலிருந்தாலும் சரிதான், அல்லது அது தவிர்ந்த ஏனைய காலங்களிலிருந்தாலும் சரிதான், நபியவர் களின் கப்றைத் தரிசிப்பது கடமையுமல்ல, நிபந்தனையு மல்ல. மாற்றமாக யார் அவரது பள்ளியை தரிசிக்கச் செல்கின்றாரோ, அவர்களுக்கும், மதினாவில் வசித்துக் கொண்டிருக்கும் ஆண்களுக்கும் தான் ஆகுமாக்கப்பட்டி ருக்கின்றது. எனவே நபியவர்களது பள்ளியை தரிசிக்கச் செல்பவர், தனது வலது காலை முன்வைத்து, ***பிஸ்மில் லாஹி வஸ்ஸலாத்து, வஸ்ஸலாமு அலா ரஸுலில்லாஹி, அஊது பில்லாஹில் அழீம், வபிவஜ்ஹிஹில் கரீம், வசுல்தானிஹில் கதீம், மினஷ் ஷைத்தானிர் ரஜீம், அல்லாஹும்மப்தஹ்லீ அப்வாப ரஹ்மத்திக்.*** என ஏனைய பள்ளிகளில் ஓதுவதைப் போன்று ஓதி, உட்சென்று, சுன்னத்தான பள்ளிக் காணிக்கை இரு ரக்அத்துக்களை தொழுது, இம்மை, மறுமை சம்பந்தப்பட்ட விடயங்களைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

மேலும் முடியுமானவர்கள் பின்வரும் நபி மொழிக்கேற்ப ரவ்ழா ஷரீபில் தொழுது கொள்வது மிகவும் சிறந்ததாகும். அதனையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்

றார்கள். ***எனது வீட்டுக்கும், மின்பருக்கும் இடைப்பட்ட பகுதி, சுவனத்தின் பூங்காவனங்களில் ஒரு பூங்காவனமாகும் (ஹதீஸ்).*** மேலும் பர்ழான தொழுகையைப் பொறுத்த வரையில், ஊர் மக்களும், நபியவர்களின் பள்ளியை தரிசிக்கச் சென்றவர்களும் முதல் வரிசையில் இடம் பிடித்து தொழுது கொள்ள முயற்சித்துக் கொள்ள வேண்டும். அதனது நன்மையை நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு விவரிக்கின்றார்கள். ***மனிதர்கள் தொழுகையின் அழைப்பொலியிலும், முதல் வரிசையிலுமுள்ள சிறப்பை தெரிந்து கொள்வார்களெனில், குழந்தைகள் தவழுவதைப் போன்று தவழ்ந்து வந்து தான், அதனை பெற்றுக் கொள்ள முடியுமென்றிருந்தால், அவ்வாறு வந்து அதனை பெற்றுக் கொள்வார்கள் (புகாரி,முஸ்லிம்).*** மேலும் கூறுகின்றார்கள். ***என்னை பின் தொடருங்கள், பின்னால் வரும் சமுதாயம் உங்களைப் பின்தொடர்வார்கள். தொழுகைக்கு தொடர்ந்தும் தாமதித்துச் செல்பவனை அல்லாஹ் அனைத்து விடயங்களிலும் பின்னடையவே செய்கின்றான் (முஸ்லிம்).***

மேலும் இதைப் போன்ற, இன்னும் பல ஹதீஸ்கள் அனைத்துப்பள்ளிகளையும் உள்ளடக்கும் விதத்தில், பொதுப்படையாகவே கூறப்பட்டிருக்கின்றன. அதற்குதாரணமாக. ***நபி (ஸல்) அவர்கள் தனது தோழர்கள் தொழுகைக்கு நிற்கும் போது, வரிசையின் வலது பக்கத்திலே நின்று கொள்ளுமாறு ஆர்வமூட்டுவார்கள்.*** அவ்வாறு வலது பக்கத்தில் நிற்கும் போது, ரவ்ழா ஷரீபை விட்டும் தூரமாகிச் செல்ல வேண்டியதொரு நிலை ஏற்படுகின்றது, அவ்வாறிருந்தும் கூட, இவ்வாறு செய்யுமாறு ஆர்வமூட்டுவார்களென்றால், இதற்கு எவ்வளவு சிறப்பு இருந்து கொண்டிருக்கின்றதென நாம் ஒவ்வொருவரும் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

ஆனால் பெண்களைப் பொறுத்தவரையில், எப்போதும் அவர்கள் ஆண்களுக்குப் பின்னாலே நிற்க வேண்டும். எவ்வளவு தூரம் ஆண்களது கண்களுக்குப் படாதவாறு இருந்து கொள்ள முடியுமோ, அவ்வாறு இருந்து கொள்வது

மிகவும் சிறந்ததாகும். மேலும் தரிசிக்கச் சென்றவர், பள்ளிக்குரிய காணிக்கை தொழுகையை தொழுததின் பின், நபியவர்களதும், அவர்களது இரு தோழர்களதும், கப்றடிகளுக்குச் சென்று தரிசித்து, நபி (ஸல்) அவர்களின் கப்றுக்கு முன்னால் நின்று, (அபூஹனிபா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள். கிப்லாவின் பக்கம் திரும்பி.) அமைதியான முறையில் சப்தத்தை உயர்த்தாது, ***அஸ்ஸலாமு அலைக்க யா ரஸூலல்லாஹ் வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு*** எனக் கூறிக் கொள்ள வேண்டும்.

மேலும் நபி (ஸல்) அவர்கள் மரணித்து விட்டார்கள் என அல்குர்ஆனும், சஹீஹான ஆதாரபூர்வமான ஹதீஸ்களும், மார்க்க அறிஞர்களும் ஏகோபித்த முடிவாகக் கூறியுள்ளார்கள். என்றாலும் கூட, குர்ஆன் கூறுவது போன்று, ஷுஹதாக்கள், மற்றும் நபிமார்கள், ஏனைய மரணித்த அனைவரும் மண்ணறை வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டிருக்கின்றார்கள். அடுத்ததாக நபி (ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறியதன் பின், அவர்களது இரு தோழர்களுக்கும் ஹதீஸ்களில் வந்ததன் பிரகாரம், ஸலாம் கூற வேண்டும். இப்னு உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது இரு தோழர்கள் மீதும் ஸலாம் கூறும் போது, ***அஸ்ஸலாமு அலைக்க யாரஸூலல்லாஹ், அஸ்ஸலாமு அலைக்க யா அபாபக்ர், அஸ்ஸலாமு அலைக்க யா அபதி.*** எனக்கூறி விட்டு சென்று விடுவார்கள். குறிப்பு: ***(அஸ்ஸலாமு அலைக்கும் யா அபதி)*** என்று அவர்கள் கூறியது, அவர்களது தந்தையாகவிருப்பதனாலாகும், எனவே ஏனையோர், கூறும் போது, ***அஸ்ஸலாமு அலைக்க யா உமர்*** எனக்கூறிக் கொள்ள வேண்டும்.

மேலும் மாலிக் இமாம் அவர்கள் ***மப்சூத்*** என்ற நூலில் கூறும் போது, நபியவர்களின் கப்றடியில் நின்று கொண்டு பிரார்த்தனையில் ஈடுபடாமல், ஸலாம் கூறிவிட்டு திரும்பி விடுவதையே சிறப்பானதாக கருதுகின்றேன் என்றார்கள். மேலும் நபித்தோழர்களைப் பொறுத்த வரையில், நபி

(ஸல்) அவர்களுக்கு ஸலாம் கூறுவதற்காக அடிக்கடி அவரது கப்றடிக்கு சென்று கொண்டிருக்க மாட்டார்கள். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் அதனை தடுத்திருப்பதுடன், அதனை அதிகமாக சென்று வரும் ஓர் இடமாக எடுத்துக் கொள்ள வேண்டாம் எனவும் தடுத்திருக்கின்றார்கள். அது மட்டுமல்லாமல், தொழுகையில், பள்ளியில் நுழையும் போது, வெளியேறும் போது, அதானின் துஆ போன்ற அனைத்திலும் நபியவர்கள் மீது ஸலவாத்தும், ஸலாமும் கூறப்படுகின்றதென்பதை அறிந்திருப்பதுடன், எவ்விடத்திலிருந்து அவர்களுக்கு ஸலாம் கூறினாலும் அவர்களை அது சென்றடைந்து விடும் என்பதனையும் அவர்கள் அறிந்திருந்தார்கள்.

மேற் கூறப்பட்டவைகளையிட்டு நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறுகின்றார்கள். ***எனது கப்றை விழாக் கொண்டாடும் ஓர் இடமாகவும், உங்களுடைய வீடுகளை கப்றுகளாகவும் ஆக்கிக் கொள்ளாதீர்கள். என் மீது ஸலவாத்துச் சொல்லுங்கள், நீங்கள் எங்கிருந்து ஸலவாத் சொன்ன போதிலும், அது என்னை வந்தடைகின்றது (அபூதாவுத்).*** மேலும் கூறுகின்றார்கள். ***அல்லாஹ்வுக்கு சில ஊர் சுற்றும் மலக்குமார்கள் இருக்கின்றார்கள், அவர்கள் எனது சமுதாயம், எனக்குக் கூறுகின்ற ஸலாத்தை எனக்கு எத்திவைக்கின்றார்கள் (நஸயீ).*** மேலும் நபி (ஸல்) அவர்களின் கப்றடியில் நீண்ட நேரம் நிற்பது, அவ்விடத்தில் சப்தத்தை உயர்த்துவது போன்ற விடயங்களையும் இஸ்லாம் தடுத்திருக்கின்றது. எனவே நாம் அவ்விடத்தில் அமைதியான முறையில் எமது ஸலாத்தைக் கூறிவிட்டு ஒதுங்கி விட வேண்டும். அல்லாஹ்வும், நபி (ஸல்) அவர்களிடத்தில் சப்தத்தை உயர்த்திப் பேச வேண்டாம் என, இச்சமுதாயத்தைத் தடுத்திருக்கின்றான். அதைப்பற்றி பின்வருமாறு கூறுகின்றான். ***விசுவாசிகளே! நபியினுடைய சப்தத்திற்கு மேல், உங்களின் சப்தத்தை உயர்த்தாதீர்கள். மேலும் உங்களில் சிலர், மற்ற சிலருடன் உரக்கப் பேசுவதைப் போன்று,***

***அவரிடம் பேசுவதில் (சப்தத்தை உயர்த்தி)நீங்கள் உரக்கப் பேசாதீர்கள். (ஏனெனில் இதனை)நீங்கள் உணர்ந்து கொள்ள முடியாத நிலையில், உங்களுடைய (நன்மையான) செயல்கள் அழிந்து விடும். நிச்சயமாக அல்லாஹ்வுடைய தூதரிடத்தில் (பேசும் போது) தங்களுடைய சப்தங்களை தாழ்த்திக் கொள்கின்றார்களே, அத்தகையோர் அவர்களுடைய இதயங்களை பயபக்திக்காக, அல்லாஹ் பரிசுத்தமாக்கி வைத்தானே அத்தகையோராவார். அவர்களுக்கு மன்னிப்பும் மகத்தான கூலியும் உண்டு (49. 2–3).***

எனவே நபி (ஸல்) அவர்கள் உயிருடனிருக்கும் போதும் சரிதான், மரணித்ததன் பின்பும் சரிதான், கண்ணியத்திற்குரியவர்களாகும். எனவே ஒரு விசுவாசி, நபியவர்களின் கப்றடியில், ஒழுக்கமின்றி நடந்து, மார்க்கம் அனுமதிக்காக விடயங்களை செய்வது தடுக்கப்பட்டிருக்கின்றது. ***ஒரு முறை நபியவர்களின் பள்ளியில், அறிமுகமில்லாத இரு மனிதர்கள் சப்தத்தை உயர்த்தி உரையாடிக் கொண்டிருப்பதை கண்ட உமர் (ரலி) அவர்கள், இது நபியவர்களின் பள்ளியென்பதும், இதிலே சப்தமிட்டுப் பேசக்கூடாது என்றும், உங்களுக்குத் தெரியாதா? என வினவி விட்டு, நீங்கள் இவ்வூர்வாசிகளாயிருந்தால் உங்களை அடித்து நோவினை செய்திருப்பேன், எனக் கூறினார்கள் (ஹதீஸ்).***

இன்னும் சிலர் நபியவர்களின் கப்றின் பக்கம் திரும்பி, பிரார்த்தனையில் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றார்கள்கள், இவ்வாறு செய்வதற்கும் இஸ்லாத்தில் எவ்வித ஆதாரமும் கிடையாது. ***ஒரு முறை ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களின் கப்றடியில் பிரார்த்திப்பதைக் கண்ட சைனுல் ஆபிதீனின் பேரப்பிள்ளையான அலி என்பவர், அதனை தடுத்து விட்டு பின்வருமாறு கூறுகின்றார்கள். நபி (ஸல்) அவர்களிடமிருந்து எனது பாட்டன் கேட்டு, அவரிடமிருந்து எனது தந்தை கேட்டுக் கூறிய ஒரு ஹதீஸை உனக்கு அறிவிக்கட்டுமா? என வினவிவிட்டு பின்வருமாறு கூறுகின்றார்கள். நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். எனது***

***கப்றை கொண்டாடப்படும் இடமாகவும், உங்களுடைய வீடுகளை கப்றுகளாகவும் ஆக்கிக் கொள்ளாதீர்கள். இன்னும் என் மீது ஸலவாத் சொல்லுங்கள், நீங்கள் எங்கிருந்து கூறிய போதும், அது எனக்கு எத்திவைக்கப் படுகின்றது (அபூதாவூத்).***

இன்னும் சிலர் நபியவர்களுக்கு ஸலாம் கூறும் போது, தனது கையைக்கட்டி பணிவான முறையில் ஸலாம் சொல்வதைக் காணுகின்றோம். இவ்வாறு பணிவான முறையில், அல்லாஹ்வை மாத்திரம் தான் வணங்க வேண்டுமென்பதினால், அவனால் படைக்கப்பட்ட படைப்பினங்களுக்கு அவ்வாறு செய்வது கூடாது. இதே போன்று இன்னும் சிலர் கிப்லாவை விடவும், கப்றுகளுக்கு கண்ணியம் கொடுத்து, அதன்பக்கம் திரும்பி, ஸலாம் கூறிப்பிரார்த்தித்துக் கொண்டிருக்கின்றார்கள். இவை அனைத்தும் இஸ்லாம் அனுமதிக்காத பித்அத்துக்களென்பதுடன், அவ்வாறான விடயங்களில் ஈடுபடுவதால் அல்லாஹ்வின் தண்டனைக்கு ஆளாக வேண்டியதோர் நிலையும் ஏற்படும் என்பதனையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும். எனவே நாம் நபி (ஸல்) அவர்களதும், குலபாஉர் ராஷிதீன்களதும், நபியவர்களது ஏனைய உத்தமத் தோழர்களதும் வழிமுறையைப் பின்பற்றி, எமது வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

மேலும் நபியவர்களது கப்றை தொட்டு முத்தமிடுவது, அக்கப்று அடக்கப்பட்டிருக்கும் அறையின் சுவரை தொட்டு முத்தமிடுவது போன்றவைகள் அனைத்தும் விலக்கப்பட்டுள்ளதை, மார்க்க அறிஞர்கள் அனைவரும் ஒருமித்த கருத்தாகக் கூறியுள்ளார்கள். அதனடிப்படையில் தான், இப்னு உமர் (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களின் கப்றை தொடுவதையே வெறுத்திருக்கின்றார்கள்.

இன்னும் சில சட்ட வல்லுனர்கள், நபி (ஸல்) அவர்களுடைய கப்றின் பக்கம் இருந்து, ஸலாம் கூறும் போது, ***அஸ்ஸலாமு அலைக்க யா நபிய்யல்லாஹ், அஸ்ஸலாமு அலைக்க யா கியரத்தல்லாஹி மின் ஹல்கிஹி, அஸ்ஸலாமு அலைக்க யா சய்யிதல்***

***முர்சலீன், வஇமாமல் முத்தகீன், அஷ்ஹது அன்னக கத் பல்லக்த ரிஸாலஹ், வஅத்தைத்தல் அமானஹ், வநசஹ்தல் உம்மாஹ், வஜா ஹத்த பில்லாஹி ஹக்க ஜிஹாதிஹி.*** எனக் கூறலாம் எனக் கூறுகின்றனர். எனவே இவ்வாறு கூறுவது நபியவர்களின் பண்புகளைக் குறிப்பிடுகின்றதே தவிர, இவ்வாறு கூற வேண்டும் என்பதற்கு எவ்வித ஆதாரமும் கூறப்படவில்லை.

எனவே நபி (ஸல்) அவர்களின் கப்றைத் தரிசிப்பது ஆண்களுக்குத் தான் மார்க்கத்தில் அனுமதி வழங்கப் பட்டிருக்கின்றது. பெண்களைப் பொறுத்தவரையில், அவ் வாறு நபியவர்களுடைய கப்றை தரிசிக்கச் செல்லும் போது, ஆண்களுடன் கலந்து, அவர்களை தீய விடயங்க ளிலும், தீய எண்ணங்களிலும் ஈடுபடுத்த வாய்ப்புகள் இருப் பதனால். அதனை தரிசிக்கச் செல்லக் கூடாது. அதனைத் தவிர்த்து நபியவர்களின் பள்ளிக்கு வந்து தொழுவது, பிரார்த்திப்பது போன்ற விடயங்கள் அனைவருக்கும் ஆகு மாக்கப்பட்டிருக்கின்றதென்பதால், இவ்விடயங்களில் பெண் களும் கலந்து கொள்ளலாம்.

## மக்களுக்கு எத்தி வைத்தல்.

இதனை பூர்த்தி செய்வதற்கு முன்பாக, அல்லாஹ்வின் தண்டனையைப் பயப்படாது, வட்டி, ஹராமான விடயங்கள் போன்றவைகளில் ஈடுபட்டு, அதிலே எல்லை மீறிச் சென்று, தனக்குக் கடமையான விடயங்களை விட்டும் பாராமுகமாக இருக்கக் கூடியவர்கள், அவர்களுடைய தவறையுணர்ந்து, அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி, சரணடைவதற்காக வும், மறுமை நாளில் அல்லாஹ்வின் முன்னிலையில் எனக் கேற்பட்ட கை சேதமே, என அலறுவதற்கு முன்னாலும், இஸ்லாமிய நீதவான்கள், மார்க்க அறிஞர்கள், மற்றும் ஏனைய முஸ்லிம்களும், தாம் செய்த தீய செயல்களை விட்டுவிட்டு, அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரி, குர் ஆன், ஹதீஸ் அடிப்படையில் வட்டியைத் தடுத்து, நல் லதை ஏவி, தீயதைத் தடுத்து, மக்களை ஈருலகிலும் நேரான வழியின்பால் இட்டுச் செல்லும் விடயங்களில் வழி

நடத்திச் சென்று, புதியதோர் வாழ்க்கையை அவர்கள் ஆரம்பிக்க வேண்டும் என ஆதரவு வைத்தவனாக நபி (ஸல்) அவர்கள் கூறி விட்டுச் சென்ற சில விடயங்களை ஞாபகப்படுத்த விரும்புகின்றேன்.

அல்லாஹ் கூறுகின்றான். ***விசுவாசங் கொண்டோரே, அல்லாஹ்வை நீங்கள் பயந்து கொள்ளுங்கள். மேலும் நீங்கள் (உண்மையாக) விசுவாசங் கொண்டவர்களாக இருப்பின், வட்டியில் (எடுத்தது போக) எஞ்சியிருப்பதை (எடுக்காமல்) விட்டுவிடுங்கள். ஆகவே (கட்டளையிடப் பட்டவாறு) நீங்கள் செய்யாவிடின், அல்லாஹ்விடமும், அவனுடைய தூதரிடமும், போரிடுவதாகப் பிரகடனம் செய்து விடுங்கள். மேலும் நீங்கள் (தவ்பா செய்து) மீண்டு விட்டால், உங்கள் செல்வங்களில் அசல் தொகைகள் உங்களுக்குண்டு. நீங்கள் (அதிகமாக வாங்கி கடன் பட்டோருக்கு) அநியாயம் செய்யாதீர்கள். (அவ்வாறே) நீங்களும் (மூலத்தொகையைப்) பெற்றுக் கொள்வதிலிருந்து அநியாயம் செய்யப்படமாட்டீர்கள் (2. 278–279).*** மேலும் நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள். ***வட்டி சாப்பிடுபவனையும், சாப்பிடக் கொடுப்பவனையும், அவ்வட்டியை எழுதுபவனையையும், அதற்கு சாட்சியாய் இருக்கும் இருவரையும் அல்லாஹ் சபிப்பானாக (ஹதீஸ்).***

மேலும் கூறுகின்றார்கள். ***எனது சமுதாயத்தில் சில கூட்டம் உருவாகி, விபச்சாரத்தையும், பட்டையும், மதுவையும், சங்கீதத்தையும், ஆகுமாக்கிக் கொள்வார்கள். இன்னும் சில கூட்டத்தினர் ஒரு இடத்தில் ஒன்று கூடி, அவர்களில் ஒருவரை ஏதோ ஒரு பொருளை வாங்கி வரும்படி அனுப்புவார்கள், அவரும் சென்று திரும்புவதற்கிடையில், அல்லாஹ் அவர்களிருந்த இடத்தை அழித்து, மறுமை வரையும் அவர்களை குரங்குகளாகவும், பன்றிகளாகவும் மாற்றி விடுவான் (புகாரி)*** மேலும் கூறுகின்றார்கள். ***எனது சமுதாயத்தில் மதுவை, வேறு பெயரிட்டு அருந்தி, பாடகிகள் பாட்டுப் பாட, இன்னிசை இசைப்பவர்கள் உருவாகுவார்கள். அவர்களை***

*அல்லாஹ் பூமியின் மூலம் சுழி வாங்கியும், குரங்கு, பன்றிகளாக உருமாற்றியும் வேதனை செய்வான் (இப்னுமாஜஹ்).* மேலும் கூறுகின்றார்கள். *மனிதர்களே! உங்கள் பெண்கள் அழகான ஆடைகளை அணிவதை விட்டும், மேலும் பள்ளியிலே சந்தனப் புகையிட்டுக் கொள்வதை விட்டும் தடுத்துக் கொள்ளுங்கள். ஏனெனில் பனூ இஸ்ரவேலர்கள், அவர்களின் பெண்கள் அழகை வெளிப்படுத்தும் ஆடைகளை அணிகின்ற வரையும், பள்ளியிலே சந்தனப்புகையிட்டுக் கொள்கின்ற வரையும் சபிக்கப்பட வில்லை (இப்னுமாஜஹ்).*

மேலும் நீண்டதொரு ஹதீஸில் பின்வருமாறு கூறுகின்றார்கள். *இரு கூட்டத்தினர் நரகவாசிகளாவார்கள் நான் அவர்களை கண்டதில்லை எனக் கூறிவிட்டு, ஒரு கூட்டத்தினர் தன்னிடமிருக்கும் மாட்டின் வால்களைப் போன்ற சாட்டைகளினால் அம்மனிதர்களுக்கு அடித்துக் கொண்டிருப்பார்கள். இன்னும் சில மெல்லிய ஆடைகள் அணிந்து நிர்வாணமாகவும், ஆண்களைக் கவர்வதற்காக தனது நடையை மாற்றியும், தனது தலை முடியை ஒட்டகத்தின் முதுகிலுள்ள சதைப்பிண்டத்தைப் போன்று வளைத்தும் உயர்த்தியும் அமைத்துக் கொண்ட பெண்களுமாவார்கள். அவர்கள் சுவனத்தில் நுழையவோ, அதனது வாடையை நுகரவோ மாட்டார்கள். சுவனத்தின் வாடையோ இவ்வளவு தூரம் மணம் பரப்பிக் கொண்டிருக்கும் என ஒரு வரையறையைக் கூறினார்கள் (முஸ்லிம்).* மேலும் கூறுகின்றார்கள். *ஒரு ஆண் ஒரு பெண்ணுடன் தனித்திருக்கும் போது, மூன்றாமவனாக அவர்களுடன் ஷைத்தான் இருந்து கொண்டிருக்கின்றான் (ஹதீஸ்).*

மேலும் ஹுதைபா (ரலி) அவர்களைத் தொட்டும் அறிவிக்கப்படும் நீண்டதோர் ஹதீஸில் பின்வருமாறு இடம் பெற்றிருக்கின்றது. *அந்த நலவுக்குப் பின்னுக்கும், கெடுதி இருக்குமா? எனக்கேட்டேன், அதற்கு நபியவர்கள், ஆம் சில மார்க்க அழைப்பாளர்கள் நரகவாயிலில் இருந்து கொண்டு அழைப்பார்கள், யார் அவர்கள் சொல்வதைக் கேட்டு அதற்கு விடையளிக்கின்*

றார்களோ, அவர்களை அவர்கள் நரகில் தள்ளிவிடுவார்கள், அதற்கு நான், அவர்களது வர்ணனைகளை கூறுங்கள் யாரஸூலல் லாஹ் எனக் கேட்டேன், அதற்கவர்கள், அந்த மார்க்க அழைப்பாளர் கள் எங்களிலுள்ளவர்களாவார்கள், நாங்கள் கூறுவதையே அவர்களும் கூறுவார்கள் என்றார்கள். அதற்கு நான், அக்கூட்டத் தினர் வாழும் காலத்தில் நானும் வாழ நேரிட்டால், நான் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் எனக் கேட்டேன். அதற்கு நபியவர்கள், முஸ்லிம்களின் ஜமாஅத்தையும், அதனது தலைவரையும் பற்றிப் பிடித் துக் கொள் என்றார்கள். அதற்கு நான், அவர்களுக்கு ஒரு ஜமாஅத்தோ, தலைவரோ, இல்லாத பட்சத்தில் நான் என்ன செய்ய வேண்டும் எனக் கேட்டேன். அதற்கவர்கள், அக்கூட்டங்கள் அனைத்தையும் பிரிந்து, உனக்கு மரணம் வரும் வரை ஒரு மரத்தின் அடியை பிடித்துக் கொண்டு உனது மார்க்கத்தில் இருக்க முடியு மென்றால் அவ்வாறே இருந்துகொள் என்றார்கள் (புகாரி).

மேலும் கூறுகின்றார்கள். நான் எனது சமுதாயத்தில் வழி கெடுக்கும் தலைவர்களை பயப்படுகின்றேன். அவர்களுக்கெதிராக போர் தொடங்கினால் மறுமை ஏற்படும் வரை ஓய மாட்டாது. எனது சமுதாயத்தில் விக்ரகங்களை வணங்கும் ஓர் பிரிவு உருவாகும் வரை மறுமை ஏற்படமாட்டாது. மேலும் எனது சமுதாயத்தில் முப்பது பொய்யர்கள் தோன்றி, அவர்கள் ஒவ்வொருவரும் நான் தான் நபியென வாதிடுவார்கள், நான் தான் இறுதி நபியாகும், எனக்குப் பின் இனி எந்த நபியும் தோன்ற மாட்டார்கள். மேலும் எனது சமு தாயத்தில் ஒரு பிரிவு, உண்மையைக் கூற அல்லாஹ்வின் புறத் திலிருந்து உதவி செய்யப்பட்டுக் கொண்டிருப்பார்கள். அவர்க ளுக்கு யாராலும், அல்லாஹ்வின் உத்தரவின்றி எச்சதியிலும் ஈடு பாடவோ, தீங்கிழைக்கவோ முடியாது (அல்புர்கானி).

இறுதியாக நாமும் இஸ்லாமிய தலைவர்களும், நேர் வழியைப் பின்பற்றி குர்ஆன், ஹதீஸின் அடிப்படையில் நமது வாழ்வை அமைத்துக் கொள்ள எல்லாம் வல்ல

அல்லாஹ் அருள் புரிவதுடன், இஸ்லாத்தின் எதிரிகள் மேற்கொள்ளும் வலைகளினில் வீழ்ந்து நமது வாழ்வையே அழித்துக் கொள்ளாமலிருப்பதற்கும் அருள் புரிவானாக.

وصلى الله تعالى وسلم على نبينا محمد وآله وصحبه وسلم.

# الإرشاد

# إلى توحيد رب العباد

## باللغة التاميلية

تأليف

فضيلة الشيخ/ عبدالرحمن بن حماد آل عمر

ترجمة

عبد الرحمن عبد الرزاق

مراجعة

محمد حسين

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات في الشفا

الرياض. ت:٤٢٣٣٦٣٦–٤٢٠٠٦٢٠ ص.ب:٣١٧١٧ الرياض:١١٤١٨

سلسلة مطبوعات المكتب بغير اللغة العربية رقم ٦٠



# الإرشاد إلى توحيد رب العباد

تاميلي

تأليف / عبد الرحمن بن حماد العمر




CO-OP OFFICE FOR CALL & GUIDANCE AT SHIFFA
Tel : 4200620 - 4222626 P.O. Box :31717 AL-Riyadh 11418
المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات في الشفا
هاتف ٤٢٠٠٦٢٠ - ٤٢٢٢٦٢٦ ص.ب ٣١٧١٧ الرياض ١١٤١٨